பொருளடக்கம்

# முன்னேறுவது எப்படி?

2·121

அப்துற்-றஹீம்

**யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்**
2, வடக்கு உஸ்மான் சாலை, முதல் மாடி,
(கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில்)
தியாகராய நகர், சென்னை - 600 017.
✆ : 2834 3385
E-mail : universal_pub2002@yahoo.co.in

# பொருளடக்கம்

## அப்துற் - றஹீம் அவர்களின் பிற நூல்கள்

வாழ்க்கையில் வெற்றி
வாழ்வைத் துவங்கு!
முன்னேறுவது எப்படி?
வாழ்வது ஒரு கலை!
சுபிட்சமாய் வாழ்க!
உன்னை வெல்க!
எண்ணமே வாழ்வு!
மகனே! கேள்!
அன்புள்ள தம்பி!
ஒழுக்கம் பேணுவீர்!
விடா முயற்சி, வெற்றிக்கு வழி!
நினைவாற்றல்
அறிவிற்கு ஓர் அணி
மன ஒருமை
வெற்றியின் இரகசியம்
நெடுங்காலம் வாழ்க!
அன்பு வாழ்வோ!
அருள் வாழ்வோ!
கவலைப்படாதே!
வியாபாரம் செய்வது எப்படி?
வழிகாட்டும் ஒளி விளக்கு
விளக்கேற்றும் விளக்கு
வாழ்வின் ஒளிப்பாதை
வழுக்கலில் ஊன்றுகோல்
வெற்றியும் மகிழ்ச்சியும்
மனத்தை வெல்லுவாய்!
மனிதனாகுவாய்!
வளவாழ்விற்கு வழி
வாழ்வின் வழித்துணை
அகிலத்தின் அறிவுத் திரள்
படியுங்கள்!! சிரியுங்கள்!!
படியுங்கள்!! சுவையுங்கள்!!
படியுங்கள்!! சிந்தியுங்கள்!!
இளமையும் கடமையும்
இல்லறம்
கோடீஸ்வரக் கொடைவள்ளல்
மனிதப் புனிதன்
ஆப்ரகாம் லிங்கன்
ரஷ்ய ஞானி
லியோ டால்ஸ்டாய்

*வெளியிடுபவர்கள்:*
**யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்**
சென்னை - 600 024.

# முன்னேறுவது எப்படி ?

## 1. புத்தகங்களைப் படிப்பதனால் ஏற்படும் பலன்கள் என்ன?

“எனக்கு அதிகமாகத் தேவைப்படுபவர் யார் என்றால் என்னால் இயன்றதைச் செய்யுமாறு தூண்டும் மனிதர்கள்'' என்று அமெரிக்க ஞானி எமர்ஸன் கூறினார், என்னால் இயன்றதைச் செய்தல் என்ற அவருடைய சொற்களின் கருத்தை ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள்! ஒரு மனிதன் வாழ்வில் முன்னேறுவதும், முன்னேறாததும் அவன் தன்னால் இயன்றதை எத்தனை சதவிகிதம் செலவழிக்கின்றானோ அத்தனை சதவிகிதத்தையே பொறுத்திருக்கிறது.

நாம் எங்கு பார்க்கினும் நடு வயதையும் அதற்கு அப்பாற்பட்ட வயதையும் அடைந்த பலர் போதிய விழிப் புணர்ச்சியடையாததை காண்கிறோம். அவர்களுடைய மேலான ஆற்றல்களெல்லாம் படுபாதாளத்தில் உறங்கிக் கொண்டிருக்கின்றன. பெரும் வெற்றியை அவர்களுக்கு ஈட்டித் தர வேண்டிய ஆற்றல்கள் அனைத்தும் பயன்படாது நசித்த நிலையில் இருக்கின்றன.

நீதிபதி ஒருவர் நடு வயது வரை படிப்பு வாசனையற்ற கொல்லராக இருந்தார். பிறகுதான் அவருடைய வாழ்வில் புரட்சி ஏற்பட்டது. அதற்குக் காரணம் என்ன? கல்வியின் முக்கியத்துவம் பற்றி நிகழ்த்தப்பட்ட ஒரு சொற்பொழிவை அவர் கேட்டதுதான். அதுவே அவருடைய உறங்கிக் கிடந்த ஆற்றல்களை எழுப்பிவிட்டு முன்னேற்றப் பாதையில் அவரை அடியெடுத்து வைக்குமாறு செய்தது,

இவ்வாறு நடு வயதுவரை முழு விழிப்புப் பெறாத பலர் ஒரு புத்தகத்தைப் படித்ததனாலோ, ஒரு சொற்பொழிவைக் கேட்டதனாலோ, ஓர் உயரிய நண்பரைச் சந்தித்ததனாலோ விழித்தெழுந்து புது வாழ்வு வாழ்வதை நாம் பார்க்கிறோம்.

''பிறந்த குலத்தைவிடச் சூழ்நிலைகளும், சுற்றுச் சார்புகளும் தாம் வலுவாய்ந்தவை'' என்று ஐம்பதாயிரம் குழந்தைகளின் குண ஒழுக்கத்தைப் பற்றி முப்பதாண்டுகள் ஆராய்ச்சி செய்தபின் அறிவியல் விற்பன்னர்கள் முடிவு செய்திருக்கிறாரர்கள். உயரிய பண்பாடமைந்த அரச குடும்பத்தில் பிறந்த ஓர் அரசிளங்குழவியை வளர்க்குமாறு ஒரு காட்டுமிராண்டியிடம் ஒப்படையுங்கள்! அது காட்டுமிராண்டித்தனமாகவே வளரும். காட்டின் நடுவே தனியாக விடப்பட்டு ஓநாயால் வளர்க்கப் பட்ட பையன் ஓநாய் போன்றே நான்கு கால்களுடன் நடக்கவும், கத்தவும், சாப்பிடவும் செய்தான் என்பதை நாம் அறிவோம்.

இவ்வாறு சிறு குழந்தைகள் மட்டுமல்ல; வயது வந்தவர்களாகிய நாமும், நாம் எவ்வளவு சுதந்திர புத்தியுள்ளவர்களாகவும் உறுதி நிறைந்தவர்களாவும் இருந்தபோதிலும் நம்முடைய சூழ்நிலைகளால் பாதிக்கப்படவே செய்கிறோம்.

''நான் சந்தித்தவற்றின் ஒரு பாகமே நான்'' என்று ஒரு கவிஞர் கூறுவதைக் கேட்டு இது கவியின் கற்பனை என்று நீங்கள் கருதிவிட வேண்டாம். அது மாசு மறுவற்ற பத்தரை மாற்று உண்மை என்பதை அறிவீர்களாக! நீங்கள் கேட்ட ஒவ்வொரு சொல்லும், படித்த ஒவ்வொரு புத்தகமும், கண்ட ஒவ்வொரு காட்சியும், உரையாடிய ஒவ்வொரு பேச்சும் உங்களுடைய வாழ்வில் அடையாளங்களை பதித்து விட்டன.

அந்த அனுபவத்திற்குப் பின் நீங்கள் முன்பிருந்த பழைய மனிதராயிருக்க முடியாது. ரஸ்கினுடைய நூலைப் படித்ததும் எவ்வாறு பீச்சர் ஒரு மனிதராய் ஆனாரோ, பீட்டுடன்

உரையாடிவிட்டுத் திரும்பிய மனிதர்கள் எவ்வாறு புது மனிதர்களாக திரும்பினார்களோ அது போன்று நீங்களும் புது மனிதர்களேயாவீர்கள்.

தோல்வி அடைந்தவர்களின் பட்டாளத்திற்கு நீங்கள் பேட்டியளிப்பீர்களானால், அவர்களில் பெரும்பாலோர் தோல்வி அடைவதற்கு காரணம், ஊக்குவித்து உணர்சியூட்டும் சூழ்நிலையில் அவர்கள் இல்லாததுதான்; அவர்களுடைய அவா கிளறிவிடப்படாததுதான் என்பதை நீங்கள் அறியலாம். ஆகையினால் உங்களுடைய அவாவைக் கிளறிவிட்டு உங்களை அபிவிருத்தி செய்யுமாறு உங்களைத் தூண்டும் சூழ்நிலையிலேயே நீங்கள் எப்பொழுதும் இருப்பீர்களாக!

உங்களை நன்கு அறிந்து உங்கள் மீது நம்பிக்கைவைத்து உங்களைக் கண்டுபிடிக்க உங்களுக்கு உதவிசெய்யும், நீங்கள் முழு மனிதத்தன்மையுடைய உங்களுக்கு உற்சாகமளிக்கும் மனிதர்களுடன் நெருங்கிப் பழகுவீர்களாக! பெருவாழ்வு வாழ்வதற்கும் நடுத்தர வாழ்வு எய்துவதற்கும் உள்ள வேற்றுமையை அளிப்பது இதுதான். உயரிய நோக்குடன் உலகில் தங்களுடைய அடையாளத்தைப் பதித்து வைக்க விரும்பிப் பணியாற்றும் மனிதர்களுடன் நீங்களும் தொடர்பு கொள்வீர்களாக!

ஏனெனில் அவாவானது தொற்றும் தன்மையுடையது. எனவே, நீங்களும் முன்னேற விரும்பும் அவர்களுடைய பண்புகளை உங்களையறியாமலேயே பற்றிப் பிடித்துச் செயலாற்றத் துவங்கிவிடுவீர்கள். உங்களுடைய குறிக்கோளையொத்த மனிதர்களுடன் பழகுவது மேலான செயலாகும். நீங்கள் சிறிது சோம்பேரித்தனமாக இருப்பினும் அவர்கள் முன்னேறிச் செல்வதைக் கண்டு உங்களுக்கே வேகம் ஏற்பட்டு நீங்களும் முன்னேறத் துவங்கிவிடுவீர்கள்.

ஒரு வெடிகுண்டைச் சிறு பிள்ளைகள்கூட வைத்து விளையாடலாம்: ஆனால் அதை ஓங்கி அடித்தால் பெரும் ஓசையுடன் அது வெடித்து விடுகிறது. அதேபோன்று தங்களுடைய வாழ்வில் ஒரு சோதனை ஏற்படும் வரையில் ஒவ்வொரு வரும் தங்களுக்குள் மறைத்து கிடக்கும் மாபெரும் ஆற்றலுக்கே அன்னியர் போன்று இருக்கிறார்கள். இரண்டாவது மகா யுத்தம்தான் ரஷ்ய மக்களின் மகத்தான சக்தியை வெளிக் கொணர்ந்து அதனை உலகறியச் செய்தது. யுத்தம் என்ற நெருப்பானது அவர்களுடைய திறமை என்ற வெடி குண்டை வெடிக்கச் செய்து விட்டது.

ஒரு வீடு தீப்பற்றி எரிகிறது என்று வைத்துக் கொள்ளுங் கள். அதில் நோயுற்றுப் படுத்த படுக்கையில் கிடக்கும் நோயாளிகூட வீரபராக்கிரமன் போன்று பொருள்களை அப்புறப்படுத்துவதிலும், நெருப்பையணைப்பதிலும் தீவிரமாக ஈடு படுகிறான். பொருள்கள் எவ்வளவு பெரிதாக இருந்தபோதினும் அவற்றை வெகு எளிதாக தூக்கி வீசி எறிகிறான்.

நெப்போலியன் தம்முடைய படைகளை இரவில் பார்வையிட்டுக் கொண்டு வரும்பொழுது படைக் காவலன் தூங்கி விட்டான். அவனுடைய கையிலிருந்த துப்பாக்கி நழுவிக் கீழே விழுந்து விட்டது. நெப்போலியனின் காலடிச் சப்தம் கேட்டதும் பதறி விழித்தவன் கையில் துப்பாக்கி யைக் காணோம். பக்கத்தில் கிடந்த, பத்துப் பேர் சேர்ந்தும் தூக்க முடியாத பீரங்கியைத் துப்பாக்கியென நினைத்துத் தூக்கித் தோள்மீது வைத்துக்கொண்டு நின்றான், நெப்போலி யன் இதைப்பார்த்து முறுவலித்துக்கொண்டே அடியெடுத்து வைத்தார். அவர் சில அடிகள் எடுத்து வைத்ததுதான் தாமதம் பீரங்கி காவற்காரனை நசுக்கிவிட்டது.

இவ்வாறு மனிதர்களின் மறைந்து கிடக்கும் ஆற்றல்களை வெளிக்கொணர்வது வாய்ப்புகளும், சுற்றுச் சார்புகளுமே யாகும். சுற்றுச் சார்புகளில் நண்பர்கள் போன்று புத்தகங்களும் முக்கிய அங்கம் வகிக்கின்றன.

புத்தகங்கள் போன்று துன்பத்தில் உழலும் ஒருவனை முன்னேற்ற வழியில் அழைத்துச் செல்லவும், பெருஞ்சுமை களைத் தாங்கி நிற்பவனை அந்தச் சுமைகளை மறந்துவிட்டுச் செயலாற்றவும், நோயாளியை நோயின் கொடுமையை மறக்கச் செய்யவும் செய்கின்ற உயிர் நண்பன் வேறு இல்லை. அவைதாம் நண்பரில்லாதவர்களுக்கு நண்பர்கள்; தனித்தவர் களின் தோழர்கள்; மகிழ்ச்சியற்றவர்களின் மகிழ்ச்சிகள்; நம்பிக்கையற்றவர்களின் நம்பிக்கைகள்; உற்சாகமற்றவர் களுக்கு உற்சாகங்கள்; ஆதரவற்றவர்களுக்கு அபயமளிப் பவைகள்; அவையே இருளில் ஒளியைக் கொணரும் விளக்குகள்.

ஒருவன் ஏழையாயிருந்து உயரந்தவர்களுடன் உறவாட இயலாத நிலையில் இருப்பினும் நூல்கள் மூலம் அவன் அரண்மனையில் வாழலாம், அரசர்களுடன் உறவாடலாம், காலத்தால் மறைக்கப்படாத உலகப் பெரியார்களுடன் உரையாடலாம். ஜூலியஸ் ஸீஸரின் இங்கிலாந்து படை யெடுப்பில் கலந்து கொள்ளலாம், எடிஸனின் மின் ஆற்றல் ஆராய்ச்சியில் பங்கெடுக்கலாம். ஷேக்ஸ்பியருடன் சேர்ந்து கவிதா வெள்ளத்தில் மிதந்து செல்லலாம். டேவிட் லிவிங்ஸ்டனுடன் சேர்ந்து ஆப்பிரிக்க காடுகளை ஊடருவிப் பார்க்கலாம்.

மக்களின் வாழ்வை வகுப்பதில் அம்மம்மா! நூல்கள் வகிக்கும் சிறப்பான பாகத்தை என்னென்போம். ஓர் உயரிய நூலானது எவ்வளவு பேர்களுடைய வாழவில் புரட்சியை உண்டு பண்ணி விடுகிறது! எத்தனை பேர்களை அமைச்சர்

களாகவும் அரசியல்வாதிகளாகவும், புலவர்களாகவும், பெருந்தகைகளாகவும், தத்துவஞானிகளாகவும், தளபதிகளாக வும் ஆக்கியிருக்கிறது. அதேபோன்று கெட்ட நூல்களானது எத்தனை பேர்களை நரீஸ்வரர்களாகவும், நெறிகெட்ட வர்களாகவும், கொடுமைக்காரர்களாகவும் கொலைகாரர்க ளாகவும் ஆக்கியிருக்கின்றன.

ஆஸ்ஸியனுடைய கவிதைகளும், ஹோமருடைய காவியங்களுமே நெப்போலியனுடைய வாழ்வை உருவாக்கி யவையெனலாம். ஹோமரைப் பற்றி அவர் புகழாத நாளில்லை. பள்ளியில் பயிலும்பொழுது வீர்களின் வரலாறுகளையும் அவர்களின் திறமைகளையும் படித்து அகமகிழ்ந்தார். அவர் தம்முடைய தாய்க்கு, ''கத்தியின் துணையாலும் ஹோமர் காவியத்தின் தெளிவாலும் நான் உலகை ஆட்டவல்லேன்'' என்று அப்பொழுது எழுதினார். புளூட்டார்க் எழுதிய 'வரலாறுகளும்' நெப்போலியன் விரும்பிப் படித்த நூலாகும்.

மனிதர்களின் உள்ளங்களின் உள்ளே நுழைந்து அவற்றை தமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறார் புளூட்டார்க். மற்றவர்களின் கண்களுக்குப் புலபடாத மனிதர்களின் அணுவத்தனை குணாதிசயங்களையும் அவர் நமக்கு வெள்ளிடை மலைபோல் எடுத்துரைக்கிறார். போர் பற்றிய வர்ணனைகளை மற்ற எழுத்தாளர்களுக்கு விட்டுவிட்டு மனிதர்களின் உள்ளக் காட்சிகளையே தாம் தம் நூலில் வர்ணிக்கப் போவதாக அவர் கூறுகிறார்.

எனவேதான் எமர்ஸன், ''பைபிளுக்கு அடுத்தபடியாக மனித உள்ளங்களுக்கு நன்மை பயக்கும் நூலாக புளூட்டார்க் எழுதிய வரலாறுகளைத் தாம் கூறுவேன்'' என்று சொன்னார். ஷேக்ஸ்பியரும் பல விஷயங்களில் புளூட்டார்க்கைப் பின் பற்றினார்; புளூட்டார்க்கின் பல வாக்கியங்களை அப்படியே தம்முடைய காவியங்களிலும் புகுத்தினார்.

'END JUSTIFIES THE MEAN'

உலகத்திலேயே சிறிய புத்தகத்தில் பெரிய புத்தகமாகிய மெக்கியவல்லி எழுதிய 'இளவரசன்' என்பதுதான் ஹிட்லருடைய கையில் நீங்காது நிலை கொண்டிருந்தது, ''மேற்கொள்ளும் வழி ஒழுங்கானதாக இருக்க வேண்டும்; அவ்விதமானால்தான் நீ அடையும் வெற்றி உண்மையான வெற்றியாகும்'' என்று ஒருமித்துக் கூறுகின்றன உலக நீதி நூல்கள் அனைத்தும்.

ஆனால் மெக்கியவல்லியோ அதைத் தலைகீழாகக் கூறுகிறார். ''எந்த ஒழுங்கற்ற வழியை நீ பின்பற்றினாலும் தவறில்லை. செயலில் மட்டும் வெற்றி கண்டுவிடு. அதன் பின் ஒழுங்கற்ற வழிகளும் ஒழுங்கான வழிகளாய்ப் போய் விடும்'' என்கிறார் அவர்.

இதையே ஹிட்லர் மெய்ன் காம்பில் ''ஒரு பொய்யைத் திரும்பத் திரும்பக் கூறு! அது மெய்யாகி விடும்'' என்று எடுத்துரைக்கிறார். எவ்வாறு ஹிட்லருடைய வாழ்க்கையை மெக்கியவல்லி உருவாக்கியிருக்கிறார் எனபதைப் பாருங்கள்.

காட்டன் மாதருடைய 'நல்ல செயல் செய்தல்' என்ற கட்டுரையைச் சிறுவயதில் பெஞ்சமின் ஃபிராக்ளின் படித்த தானது அவருடைய வாழ்வு முழுவதும் தன்னுடைய அடையாளத்தைப் பதித்து வந்தது. இயற்கை பற்றி எமர்ஸன் எழுதிய நூல்கள்தான் டிண்டாலின் வாழ்க்கையை வகுத்தது. வாஷிங்டனுடைய வரலாறுதான் ஆப்ரஹாம் லிங்கனுடைய வாழ்க்கையில் புரட்சிகரமான மாறுதலைச் செய்தது.

''ஷேக்ஸ்பியருருடைய நூல்களும் பைபிளும்தான் என்னை யார்க் ஆர்ச்பிஷப்பாக ஆக்கின'' என்று ஒருவர் கூறினார். ''கார்லைலுடைய நூல்களை நான் படித்தனால் தோல்களை நன்கு பதனிட்டு விற்றுப் பெரும் பொருள் ஈட்ட என்னால் இயன்றது'' என்று கூறினார் வணிகர் ஒருவர். கோல்ட்ஸ்மித் எழுதிய ''விகார் ஆஃப் வேக்ஃபீல்ட்'' தான்

கோதேக்குக் கற்பனா சக்தியைக் கிளறிவிட்டதாம். ஜான் ஹஸ்ஸுடைய எழுத்துக்கள்தாம் லூதரைப் போப்பை எதிர்த்துப் புரட்சிக் கொடி தூக்குமாறு செய்தது.

மகாபாரதத்தைப் படிக்கக் கேட்டு பேரரசர் அக்பர் பெரு மகிழ்வெய்துவாராம்! ஒவ்வொரு நாளும் படித்து முடிந்ததும் அதைக் கையில் வாங்கி அடுத்த நாள் படிப்பதற்கு அதில் அடையாளம் வைத்துக் கொடுப்பாராம்.

''ஹோமரின் நூல்களைப் படித்துவிட்டு நான் தெருவிலே போகும்போது மனிதர்களெல்லாம் பத்தடி உயரமுள்ளவர்கள் போன்று எனக்குத் தென்பட்டனர்'' என்று கூறினார் ஒருவர். மேரியட் எழுதிய கடற்பிரயாணம் பற்றிய நவீனங்கள் பலரை மாலுமிகளாக ஆக்கிவிட்டன. குணங்குடி மஸ்தான் சாஹிபு பாடலானது பலரை மஸ்தான்களாக ஆக்கியிருக்கிறது.

கெட்ட படங்கள் நிரம்பிய கெட்ட புத்தகத்தைச் சில வினாடிகள் பார்த்ததானது ஒருவரை, அவர் பிற்காலத்தில் பெரிய மதகுருவாகியபோதினும், மிகுந்த மன ஊக்கத்துடன் வழிபாடு நிகழ்த்தும்போதும் அந்தப் படங்கள் அவருடைய மனக்கண்முன் திடீரெனத் தோற்றமளித்து அவருடைய மனநிலையை மாசுபடுத்தியதாம். ''என்னிடம் அப்புத்த கத்தைக் காட்டியவன் அதை என்னிடம் காட்டாமலிருந் திருந்தால் என்னுடைய சொத்தில் பாதியை வேண்டினும் அவனுக்கு கொடுத்திருப்பேனே'' என்று அவர் தம் நண்பர் ஒருவரிடம் கூறினார்.

கொலைக்காரச் சிறுவன் ஒருவன் கூறினான், ''நான் இக் கொலைத் தொழிலில் ஈடுபட்டதற்குக் காரணம் கொலைப் பற்றிய கதைகளைப் படித்ததுதான்'' என்று. ஆபாசப் புத்தகங்களும் செய்திதாள்களும் பற்றாவென்று ஆபாசப் படக் காட்சிகளும் வந்து இன்று இளைஞர்களைத் தவறான வழியில் அழைத்துச் செல்கின்றன.

எனவே தாய் தந்தையர்கள் தங்களுடைய பிள்ளை வளர்ப்பில் பெரும் அக்கறை செலுத்த வேண்டும். இளமையில் படிக்கும் ஒவ்வொரு புத்தகமும், பார்க்கும் ஒவ்வொரு படக் காட்சியும், பழகும் ஒவ்வொரு நட்பும்தாம் இளைஞர்களின் வாழ்வை நிர்ணயிப்பதில் மகத்தான பாகம் வகிக்கின்றன என்பதை உணர்ந்து பெற்றோர்கள் செயலாற்ற வேண்டும்.

நமக்குப் பிடித்த புத்தகங்களே நம்முடைய எண்ணங் களை உருவாக்குகின்றன. நமக்கு உகந்த ஆசிரியர்கள் நம்முடைய ஆசானாக ஆகிவிடுகிறார்கள். அவர்களுடைய எழுத்துக்கள் நமக்கு அறிவுரைகளாக மாறிவிடுகின்றன. நாம் அவர்களுடைய கண்கள் மூலமாகவே உலகத்தைப் பாரர்க்கிறோம். உயரிய நோக்கும், தெள்ளிய சிந்தனையும், ஆழிய கருத்தும், பரந்த அறிவும் உடைய நூல்கள் நம்மையும் அவ்விதமே ஆக்குகின்றன.

அதற்குமாறாக குயுக்தியும், குறுகல் நோக்கும், கோணல் புத்தியும், கெட்ட செயல்களும் நிரம்பிய நூல்கள் நம்மையும் அவ்விதமே ஆக்குகின்றன. நாம் உண்ணும் உணவின்பலனை அனுபவிப்பதை விட்டு நாம் எவ்விதம் தப்பிக்க முடியாதோ அதுபோன்று நாம் படிக்கும் நூல்களின் பல்னகளை அனுபவிப்பதை விட்டும் நாம் தப்பிக்க முடியாது.

எந்த நூல் நமக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்து உறுதியையும் தந்து, நம்மையே நாம் உணர்ந்து செயலாற்று மாறு பிடர் பிடித்து உந்துகிறதோ, அந்த நூலே மேலான நூலாகும். எந்த நூல் நம்முடைய குருதியில் வீரம் கலந்து ஓடச்செய்து, தசையில் முறுக்கை ஏற்றி, வாழ்வுப் போராட்டத்தில் வீறுடன் போராடி வாகை சூடச் செய்கிறதோ, அந்த நூலே மேலான நூலாகும்.

எந்த நூல் நம்மை ஒரு புத்துலகிற்கு உயர்த்தி, புது எண்ணத்தைப் புகுத்தி, புது மனிதனாக்கி, புதுச் செயலாற்றச்

செய்கிறதோ, அந்த நூலே மேலான நூலாகும். எந்த நூல் நம்முடைய குறைகளை அகற்றி நம்மை மனிதப் புனிதனாக வாழ வழி வகுக்கிறதோ, அந்த நூலே மேலான நூலாகும். அவ்வித நூல்களுடனேதான் நாம் எப்பொழுதும் தொடர்பு கொண்டிருக்க வேண்டும்.

''என்னுடைய படிப்பறையில் அறிவாளிகளைத் தவிர்த்து வேறு எவருடனும் உரையாட இயலாது. ஆனால் வெளியிலோ முட்டாள்களுடைய பழக்கத்தைத் தவிர்த்து கொள்வது கடினமாக இருக்கிறது'' என்று சர் வில்லியம் வாலர் கூறினார்.

அறிவுப்பேரரசில் வெல்லப்படுவது இழக்கப்படு வதில்லை. அதனுடைய முடிவுதான் துவக்கமாகிவிடுகிறது. துவக்கத்திற்கு முடிவுமில்லை. முடிவிற்குத் துவக்கமு மில்லை. அதற்கு எல்லை இல்லை. எல்லைதான் அதனை எல்லையற்றதாக ஆக்கிவிடுகிறது.

ஹோமரும், பிளேட்டோவும், சாக்ரடிஸும், வர்ஜிலும் வள்ளுவரும், ஔவையும் தங்களுடைய எழுத்துக்களும், கருத்துக்களும் இந்த இருபதாவது நூற்றாண்டிலும் முழக்கம் செய்து மனிதர்களின் வாழ்வை நிர்ணயிப்பதில் பெரும் பங்கு கொள்ளும் என்று கனவுதான் கண்டிருப்பார்களா?

அவர்களுக்கு அன்றிருந்த மதிப்பையும் ஆற்றலையும் அவர்களுக்கு இன்றிருக்கும் மதிப்புடனும் ஆற்றலுடனும் ஒப்பிட்டுப் பார்க்கின் அவர்களைக் குழந்தைகள் என்றுதான் கூறவேண்டும். இன்று அவர்கள் மக்களின் உள்ளங்களிலே அரியணை ஏறியிருக்கின்றனர்.

அதே போன்று எவ்வளவோ காலத்திற்கு முன் இறந்துபோன கெட்ட எழுத்தாளர்கள் இன்னும் புதை குழியிலிருந்து கொண்டே உலகில் கேடுகளை விளைவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

''நூல் நிலையம் இல்லாத ஊரும் ஓர் ஊரா?'' என்று கேட்டார் லெனின். தம்மைக் கொல்ல வந்த இளைஞனை

மன்னித்து அவனுக்கு படிக்க நல்ல புத்தகங்கள் கொடுக்கு மாறு உத்தரவிட்டார் அவர். நூல்கள் மக்களினத்துக்குச் செய்யும் மிகப்பெரும் நன்மையை உணர்ந்தே இன்று ரஷ்யாவில் ஒவ்வொரு சிற்றூரிலும் ஒரு நூல் நிலையம் இருக்கிறது.

சைபீரியக் குடியரசிலுள்ள யாகுட்ஸ்க் நகரில் 50,000 பேர்கள் தாம் வசிக்கின்றனர், ஆனால் அங்குள்ள நூல் நிலையத்தில் 5,50,000 புத்தகங்கள் இருக்கின்றன. இதைப் பார்த்து அமெரிக்க ஜனாதிபதியின் தூதுவராக அங்குச் சென்ற வெண்டல்வில்கியே திடுக்கிட்டுவிட்டார். ரஷ்யாவின் முன்னேற்றத்திற்கான இரகசியம் இப்பொழுது நன்கு விளங்குகிறதல்லவா?

ஆகையினால் நம் நாடும், நாமும் முன்னேற வேண்டு மானால் ஒவ்வொரு ஊரிலும், ஒவ்வொரு வீட்டிலும் ஒரு நூல் நிலையம் இருக்க வேண்டியது இன்றியமையாததாகும், வீட்டு நூல்நிலையம் சில நூல்களேயுடைய தாயிருந்த போதினும் பரவாயில்லை. ஆனால் அதில் அறிவு வளர்ச்சிக்கான உயரிய நூல்கள் நிரம்பி இருக்கட்டும். அச்சூழலில் வாழும் குழந்தைகளும், மனிதர்களும் பெரும் பலனை அடைவர் என்பது நிச்சயம். அது அவர்களின் வாழ்விலே பெரும் புரட்சியையும் புது மலர்ச்சியையும் ஏற்படுத்தி விடுவது உறுதி.

''சில நூல்களை ருசி பார்க்க வேண்டும். சில நூல்களை மெல்லாது விழுங்கிட வேண்டும். சில நூல்களை நன்கு சுவைத்து மென்று விழுங்கிச் செரிக்கச் செய்யவேண்டும். படித்தல் ஒரு மனிதனை முழு மனிதனாய் ஆக்குகிறது. உரையாடல் ஒருவனைத் தயாருள்ள மனிதனாக மாற்றுகிறது. எழுதுதல் ஒருவனைச் சரியான மனிதனாகச் செய்கிறது. வரலாறுகள் ஒருவனை அறிவாளியாக்குகின்றன. காவியங்கள் ஒருவனை உற்சாகமுள்ளவனாக்குகின்றன. கணக்குகள் ஒருவனை நுண்மையானவனாக்குகின்றன. தத்துவ ஞானங்

கள் ஒருவனை ஆழ்ந்தவனாக்குகின்றன. நீதி நூல்கள் ஒருவனைக் கண்டிப்பானவனாக்குகின்றன. தர்க்க நூல்கள் ஒருவனுக்கு வாதாடும் திறமையை வழங்குகின்றன'' என்று கூறினார் பேரறிஞர் பேகன்.

அவர் கூறுகின்றபடி வரலாறுகள் தாம் மக்களை அறிவாளிகளாக்குகின்றன. எனவே வரலாற்றுச் சான்றுகளைப் பிழிந்தெடுத்து மனவெழுச்சி நூல்களாக்கி நம் மக்களுக்கு அளிக்க நான் முன்வந்துள்ளேன்.இவ்வித நூல்கள் பல ஆண்டுகளுக்கு முன்பே மேனாட்டில் தோன்றிவிட்டன. அவர்கள் நாம் இன்றுள்ள நிலையைப் பல ஆண்டுகளுக்கு முன்பே அடைந்து விட்டனர். முன்னேற்றப் பாதையில் நாம் அவர்களைவிடப் பல ஆண்டுகளுக்கு பிந்தியவர்களாகவே இருக்கிறோம்.

இந்தப் பிற்போக்கைச் சில ஆண்டுகளுக்குள் நீக்கி அவர்களுடன் நம் மக்களையும் எல்லாத் துறைகளிலும் சரி நிகர் சமானமாக்க வேண்டும். அவர்களைவிட வேகமாக முன்னேறிச் செல்பவர்களாக்க வேண்டுமென்னும் கொதிக்கும் மனநிலையின் காரணமாகவே இதுபோன்ற நூல்களை என்னுடைய சிறு ஊழியமாக, உயரிய காணிக்கையாக நம் மக்களின் முன் சமர்பித்து வருகிறேன்.

ரோமானியர்கள் தங்களின் வீட்டினுள்ளே வீரர்களின் சிலையை நிறுவியிருந்தனர். காரணம், தம் மக்கள் அவற்றை பார்க்குந்தோறும் அந்த வீரர்களின் நற்பண்புகளைத் தங்களுடையதாக்கிக் கொண்டே வரவேண்டும் என்பதற்காக. அதேபோன்று உலகப் பெரியோர்களின் குணாதிசயங் களையும் மணிமொழிகளையும் எடுத்துரைத்து நம் மக்களை முன்னேற்ற பாதையில் அழைத்துச் செல்வதற்காகவே இது எழுதப்படுகிறது.

''இளைஞர்களுக்குப் போதனை செய்தாகிவிட்டது; பிரசங்க மாற்றியாகிவிட்டது; பாடம் படித்துக் கொடுத்தாகி

விட்டது; உத்தரவிட்டாகிவிட்டது; ஆலோசனை கூறியாகி விட்டது; ஆனால் அவர்களுடன் உரையாடல்தான் செய்யப்படவில்லை'' என்று டிமதி டிட்காம்ப் கூறினார்.

எனவே, மக்களுடன் நூல்கள் மூலம் நான் உரையாடி அவர்கள் எப்படி இருக்க வேண்டியவர்கள், எப்படி இருக்கி றார்கள் என்பதை இடித்துக் கூறி எடுத்துரைக்கிறேன். என்னு டைய நூல்கள் அவர்களுடைய பாதத்திற்கு விளக்காகவும் பாதைக்கு வழிகாட்டியாகவும் இருக்க வேண்டும் என்றும் எகிப்தியர்கள் நூல்களை, 'ஆன்மாவுக்கு மருந்து' என்று அழைத்தது போன்று என்னுடைய நூல்கள் அவர்களுடைய அறிவுக்கும், ஆன்மாவுக்கும் விருந்தாகவும் மருந்தாகவும் இருக்க வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

எனவே, என்னால் இயன்றவரை முயன்று, படிக்க வேண்டியவற்றை படித்து, சிந்திக்க வேண்டியவற்றைச் சிந்தித்து ஒவ்வொரு நூலையும் எழுதுகிறேன். இத்துறையில் எனக்கு வழிகாட்டும் மொழியாக அமைந்தது ஆங்கில மேதை ஜான்ஸன் கூறிய உரைகளாகும். ''ஒரு புத்தகம் எழுத அரைவாசி நூல் நிலையத்திற்கு மேல் படிக்க வேண்டும்'' என்று அவர் கூறினார். அவ்விதம் நானும் செய்தால்தான் என்னுடைய நூலைப் படிப்பவர்கள் அரைவாசி நூல் நிலையத்தைப் படித்த பலனை அடைவார்கள் என்பதை உணர்ந்தேன்.

எனவே, என்னுடைய வாழ்நாள் நூல் நிலையத்திலேயே பெரும்பாலும் கழிந்து வருகிறது. நூல் நிலையமே என்னுடைய நண்பர்களின் வீடாகவும் ஆகிவிட்டது. நூல்களாகிய நண்பர்களைச் சிலபொழுது என் வீட்டிற்கும் வரவழைத்து உரையாடுகிறேன்; அவர்களுடைய வீட்டிற்கும் அடிக்கடி சென்று அவர்களுடன் அளவளாவுகிறேன்.

''ஒரு தடவை ஹோமரைப்படி! அதற்கு மேல் நீ வேறு நூல்களைப் படிக்கவே தேவையில்லை. ஏனெனில்

அதன்பின் எல்லா நூல்களும் அற்பமானவையாகவும், சாதாரணமானவையாகவும் ஆகிவிடும். பிறரின் கவிகள் உரைநடைகள் போன்று ஆகிவிடும். அதைத் தொடர்ந்து படி! ஹோமரே உனக்குத் தேவைப்படும் எல்லா நூல்களுமாக ஆகிவிடும்'' என்று ஹோமருடைய காவியங்களைப் பற்றி ஒருவர் கூறினார்.

இந்த மொழிகளை என்னுடைய எழுத்தோவியங் களுக்கும் பொருந்துவனாக்கி நம் மக்களை முழுப் பொலி வுடன் விளங்கச் செய்யவேண்டும் என்பதே என்னுடைய வேணவா. எவ்விதம் ஆடுகள் தாம் அருந்திய இரையைத் திரும்பத் திரும்ப வாய்க்கு கொணர்ந்து மென்று விழுங்கிச் செரிக்கச் செய்கின்றனவோ, அதேபோன்று நம் மக்கள் நான் அளிக்கும் அறிவு உணவைத் திரும்பத் திரும்ப மனத்திற்குக் கொண்டு வந்து சிந்தித்துச் செரித்துப் புதுச் செயலாற்றிப் புத்துலகம் காண வேண்டுமேன்பதே என்னுடைய பிரார்த் தனை. இவை நிறைவேறும் நாள் எந்நாளோ, அந்நாளே என் வாழ்வின் பொன்னாளாகும். அதுவே எனக்கு ஆன்ம திருப்தியளிக்கும் நன்னாளுமாகும்.



# 2. கொழுந்து விட்டெரியும் ஆவலும் கொதிக்கும் மனோநிலையும் உடையவர்களாயிருங்கள்!

**வா**ழ்வில் வெற்றி பெற்றுதான் தீர்வது என்னும் உறுதியுடன் வேலையாற்றும் இளைஞனைப் பார்த்து, 'நீ உன்னுடைய வேலையை விரும்புகிறாயா?' என்று நாம் கேட்கத் தேவையில்லை. அப்பொழுது மலர்ந்த செந்தா மரையொத்த அவனுடைய முகமும், திடமான நடையும், சுறுசுறுப்பான கரங்களும் தற்பெருமையாலல்ல தன்னம் பிக்கையால், தன் மதிப்பால் நிமிர்ந்து நிற்கும் தலையும், எப்பொறுப்பையும் எச்சமயத்திலும் ஏற்று நிற்கும் தகுதியுடன் குன்றெனத் திரண்டு நிற்கும் அவனுடைய தோள்களும் அதனை நன்கு எடுத்துரைத்துக் கொண்டிருக்கின்றன.

அவன் தன் வேலை மீது கொண்டிருக்கும் காதலின் காரணமாக அதில் எவ்வளவு ஊக்கத்துடன் ஈடுபட்டிருக் கிறான்! அந்த ஊக்கமானது அவனுடைய ஆகமெங்கும் பரவி அவனை எவ்வளவு ஒளிமயமாக ஆக்கியிருக்கிறது.

க்ளாட்ஸ்டன் தம்முடைய வேலையில் கொண்ட ஊக்கமும்அக்கரையும் அவர் ஓர் அறையில் நுழைந்ததும் அங்குள்ளோருக்கு 'டானிக்' அருந்தியது போன்றும், புதுவாழ் வைப் பெற்றது போன்றும் உணர்ச்சியை அளித்தது போல் அவனுடைய ஒளியானது நாம் அவனை நெருங்கிய தும் நம்மீதுமல்லவா ஊடுருவிப் பாய்கிறது!

ஒருவன் முன்னேறுவானா, மாட்டானா என்பதைச் சோதித்துப் பார்க்கும் உரைகல் எதுவென்றால் அவன் வேலை மீது கொள்ளும் கொழுந்து விட்டெரியும் ஆவல் தான். தன்னுடைய கால்களை வேண்டா வெறுப்பாக இழுத்துச் சென்று முக்கிக்கொண்டும், முனகிக்கொண்டும், முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டும் வேலை செய்யும் ஒருவன், தன்னைப் படைத்த இறைவன் தன் முயற்சியின்றி தன்னுடைய வயிற்றுப் பிரச்சினை தீர ஒருவழி வகுக்கக்கூடாதா என்னும் அழுகல் நாற்றமுள்ள கொள்கையுடைய ஒருவன், இறைவன் அவனுக்களிக்கவிருந்த சிறப்புறும் ஒரு பதவியை உதறித் தள்ளிவிட்டான் என்றுதான் நான் கூறுவேன்.

எவன் தன்னுடைய வேலையை--அது எவ்வளவுதான் சிறிதாக இருந்தபோதினும் அதனை நன்கு மதித்து கொழுந்து விட்டெரியும்ஆவலுடன் செய்வானோ அவனே வாழ்வில் முன்னேறுபவனாவான், ஆனால் உலகில் கோடானுகோடி மக்கள் தங்களுடைய வேலைக்குக் கொஞ்சமேனும் மதிப்புக் கொடுப்பதில்லை. அவர்கள் தங்களுடைய வேலையை உண்ண உணவும், உடுக்க உடையும், குடியிருக்க வீடும் பெறுவதற்கான தவிர்க்க முடியாத தீவினையாகக் கருதுகிறார்களே யொழிய அது தங்களை மனிதத்துவம் அடையச் செய்யும் ஒரு மாபெரும் கலாசாலை என்று உணர்கிறார்களில்லை.

தன்னுள் மறைந்து கிடக்கும் மேலானதன்மையை வெளிக் கொணர்ந்து தன்னுடைய வளவாழ்வு, மகிழ்ச்சி ஆகியவற்றின் எதிரிகளை வெற்றி கொள்ளத் தங்களுக்கு இறைவன் அருளிய புனிதமான ஆயுதமாகத் தங்களின் வேலையை அவர்கள் கருத வேண்டாமா? தான் சம்பாதிக்காத பொருளைச்செலவழித்து உயிர் வாழ்வது மானக்கேடு மட்டுமல்ல, சாபக்கேடு என்பதையும் அவர்கள் உணர

வேண்டாமா? அதற்கு மாறாக,அந்தோ! வேலை செய்வதுதான் அவர்களுக்குத் தவிர்க்க முடியாத சாபக்கேடாகத் தெரிகிறது.

இறைவன் இஸ்ரவேலர்களுக்கு உணவுப் பொருளாக மன்னாவையும், சல்வாவையும் ஒவ்வொரு நாள் காலையிலும் வானிலிருந்து இறக்கியது போன்று தங்களுக்கு ஏன் இறக்கக் கூடாது என்று கேட்கிறார்கள். அவர்களைக் கண்டு நாம் நகைப்பதா, வருந்துவதா, இரங்குவதா அல்லது ஆத்திரப்படுவதா?

தானே தனக்கு அரசனாக விளங்கவேண்டிய மனிதன் தன்னைச் சூழ ஆற்றலும், மகிழ்வும் பரிணமிக்க வாழ வேண்டிய மனிதன், தன்னுடைய வேலையைப் பற்றி முனகிக் கொண்டும், குறைகூறிக் கொண்டும், தாம் வேலை செய்ய வேண்டியிருக்கிறதே என்று தன்னையே நொந்து கொண்டும் இருப்பதைக் கண்டுநாம் அவன் மீது இரக்கம் தான் கொள்ள வேண்டியிருக்கிறது.

நீங்கள் உங்களுடைய வாழ்வில் முன்னேற வேண்டுமாயின் உங்களுடைய வேலையை விரும்பினால் மட்டும் போதாது; அதன் எஜமான் என்று உணர்ச்சி மேலிட்டு நீங்கள் வேலை செய்ய வேண்டுமேயன்றி அதனுடைய அடிமை போன்று நீங்கள் வேலை செய்யக்கூடாது. நீங்கள் எந்த வேலையைச் செய்தபோதிலும் வெற்றி வீரர்கள் அடையக் கூடிய பாடத்தை, ஆற்றலை அந்த வேலையிலிருந்து நீங்கள் பெற்றுக் கொள்வீர்களாக!

உங்களுடைய வேலையில் உங்களுடைய முழு ஆற்றலையும் செலுத்துங்கள்!! அதைப் புனிதம் நிரம்பியதாகக் கருதுங்கள்! உங்களுடைய வேலையானது முக்கியத்துவமில்லாத போதினும் நீங்கள் அதில் காட்டும் கொழுந்து விட்டெரியும் ஆவலே அதனை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாய் ஆக்கிவிடும். ஒருவன் தன் வேலைமீது கொள்ளும் தகிக்கும் காதலே அவனை உண்டு பண்ணும்.

தகிக்கும் காதல், கொழுந்து விட்டெரியும் ஆவல் ஆகிய வையின்றி வேலை செய்யும் இயல்பு உங்களிடம் ஏற்பட்டு விடின் அது உங்களுடைய வாழ்நாள் முழுதும் தன்னுடைய சாயலைப் பதியவைத்து எதிர்பாராத பொழுது உங்களை மானபங்கப்படுத்தி விடும்.

ஒவ்வொரு வேலையிலும்-அது சிறிதாக இருந்த போதிலும் சரி, பெரிதாக இருந்தபோதினும் சரி, அதில் ஆழ்ந்த மறைபொருள் பொதிந்து கிடக்கிறது; பெரியமகத்துவம் பரிணமித்து நிற்கிறது; நம்முடைய விதியும் உலக நலனும் அதனுடன் தொடர்பு கொண்டு நிற்கின்றன.

சிலருக்கு எங்கணும் அழகுமயமாகக் காட்சியளிக்கிறது மற்றும் சிலரோ கண்ணிருந்தும் அதனை காண்கிறார் களில்லை. உழவுத் தொழில் செய்வது ஒருவனுக்குத் தலை வேதனையாய் இருக்கிறது. மற்றொருவனுக்கோ இயற்கை யுடன் கைகோத்து தன்னுடைய மூளையை மண்ணில் செலுத்தி வேலை செய்வதில் மிகப்பெரும் பெருமிதம் ஏற்படுகிறது.

சிலகைவினைஞர்கள் தங்களுடைய வேலையைப்பற்றி, ஒரு வழக்கறிஞரோ, மருத்துவரோ தங்களுடைய வேலையைப் பற்றிக் கொள்ளும் பெருமையைவிட அதிகமான பெருமையை அடைகிறார்கள். மற்றவர்கள் தங்களுடைய வேலையைப் பற்றி பெருமையடைவதைவிட அதிகமாகச் சில உழவர்கள் தங்களுடைய வேலையைப் பற்றிப் பெருமையடைகிறார்கள்.

தன் நாட்டில் ஓர் அரசன் கம்பீரமாக நடந்து செல்வது போன்று அவர்கள் தங்கள் வரப்பின்மீது அடியெடுத்து வைக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய ஆடு மாடுகளை மிகவும் முக்கியஸ்தர்கள் போன்று கருதிப் பிறருக்குப் பெருமையுடன் அறிமுகப்படுத்துகிறார்கள். இவ்வித உற்சாகமே ஒவ்வொரு வருக்கும் தேவை. இதுவே வேலையை ஒரு பளுவாகச் செய்யாது இன்ப விளையாட்டாக ஆக்கும்.

சில பெண்கள் தங்களுடைய வீட்டை ஓர் அரசாங்கம் போன்று கருதி, அதில் ஓர் பேரரசி அரசபாலனம் செய்வது போன்று ஒவ்வொரு செயலையும் ஆற்றுகிறார்கள். குடும்ப வேலையை ஒழுங்காகச் செய்வதில் அவர்களுக்கு விவரிக்க முடியாத விருப்பம் ஏற்படுகிறது. அதன் காரணமாக அந்தக் குடும்ப நிர்வாகமே போற்றத்தக்க முறையில் நடந்து வருகிறது. மற்றவர்களோ அதனை ஒரு பளுவாக நினைத்து கடனுக்கு வேலை செய்பவர்கள் போன்று செய்து குடும்ப வேலையையே கெடுத்துப் பாழ்படுத்தி விடுகிறார்கள்.

''நாம் மனம் வைக்காத எந்தச் செயலையும் செய்யுமாறு நாம் இவ்வுலகிற்கு அனுப்பி வைக்கப்படவில்லை'' என்று ரஸ்கின் கூறுகிறார். ஆகயினால் நாம் எந்த வேலையை மனம் வைத்துச் செய்கின்றோமோ அந்த வேலைதான் உண்மை யானபலனை அளிக்கும்.

வாழ்க்கை என்றால் என்ன? வேலை என்னும் நீரை உற்சாகத்துடன் அருந்துகிறவன், ''இதைச் செய்வதுதான் வாழ்க்கை'' என்று முழங்குகிறான்.

முன் காலத்தில் கிரேக்கன் ஒருவன் தேனீக்களை வளர்த்து வந்தான். அவை வெகு தொலைவு சென்று தேன் சேகரித்து வருவது அவற்றிற்குச் சிரமமெனக் கருதி அவற்றின் இறக்கை களை வெட்டிவிட்டு மலர்களைப் பறித்து அவற்றின் முன் வைத்து வந்தான். ஆனால் அந்தோ! அவை தேன் உற்பத்தி பண்ணவில்லை.

அதுபோன்று எங்கு கொழுந்து விட்டெரியும் ஆவல் நிரம்பிய உழைப்பு இல்லையோ, அங்கு பெரும் பலனாகிய தேனும்கிடையாது. ஆதலின் உங்களுடைய தொழில் எவ்வளவு சிறிதாக இருந்தபோதினும் அதனைக் கொழுந்து விட்டெரியும் ஆவலுடன் செய்துவருவீர்களாக! அதுவே அதனைச் சிறிது காலத்திற்குள் மேலான தொழிலாக ஆக்கிவிடும்,

சிற்பிகளின் பேரரசனான மைக்கேல் ஏஞ்சலோ சிற்பக் கலையின் மீது கொண்டிருந்த மோகம் கொஞ்சமல்ல. போப் இரண்டாம் ஜூலியஸின் சிற்பத்தைச் செய்து கொண்டிருக்கும் பொழுது போலோனாவுக்கு வர விரும்பிய அவருடைய உடன் பிறந்தானை வரவேண்டாமென்று கூறினார் அவர். காரணம் அவரிடம் ஒரே ஒரு படுக்கைதான் இருந்தது. அவருடைய மூன்று உதவியாளரும் அதில்தான் படுத்துக் கொண்டனர். இவ்வித நிலைமையிலும் அவர் தம்முடைய கலையின் மீது கொண்டிருந்த காதலைக் கவனியுங்கள்!

''நீங்கள் ஏன் மணமாகா வாழ்க்கையை நடத்துகிறீர்கள்?' என்று ஒருவர் அவரிடம் கேட்டபொழுது 'சிற்பக்கலையானது ஒரு பொறாமையுள்ள பெண் அவள் முழு மனிதனையும் விரும்புகிறாள்' என்று கூறினார் அவர். அதே கேள்வியை கேட்ட மற்றொரு நண்பரிடம், 'சிற்பக்கலையே என்னுடைய மனைவி. நான் செதுக்கிய சிற்பங்களே என்னுடைய மக்கள்' என்று அவர் கூறினார்.

அவர் சிற்ப வேலையில் ஈடுபட்டிருக்கும்பொழுது வெளியில் உணருவருந்தக்கூடச் செல்வதில்லை. சிலையினருகேயே அமர்ந்து உணவருந்திக்கொள்வார். இவ்வாறு யார் தம்முடைய வேலையில் கொழுந்துவிட்டெரியும் ஆவல் கொண்டுள்ளாரோ அவரே வாழ்வில் முன்னேற முடியும்.

நீரிலிருந்து வரும் ஆவியானது ஓர் இயந்திரத்தை ஓட்டவேண்டுமானால் அந்த நீர் 240 டிகிரி கொதிக்க வேண்டும். 200 டிகிரி கொதித்தாலும் பற்றாது; 210 டிகிரி கொதித்தாலும்போதாது. ஆனால் பெரும்பாலான மக்கள் 240 டிகிரிக்கு குறைவான வெதுவெதுப்பான நீரை வைத்துக் கொண்டு ஏன் தங்களுடைய வாழ்க்கை இயந்திரம் ஓடவில்லை என்று வியப்புறுகிறார்கள். எவ்விதம் வெதுவெதுப்பான நீர் ஓர் இயந்திரத்தை ஓட்டிக்கொண்டு செல்லாதோ, அதேபோன்ற கொதிக்கும் மனோநிலையின்றி

வெதுவெதுப்பான மனோநிலையுடன் எச்செயலையும் ஆற்ற இயலாது.

ஒரு பெரும் செயலைச் சாதிப்பதற்குச் சாதாரண ஆவல் மட்டும் இருந்தால் போதாது; சாதாரண முயற்சி மட்டும் இருந்தால் போதாது. பெரும் பலன்களைப் பெறுவதற்கு ஆவல் கொள்ளாதவர்களும், முயற்சியாற்றாதவர்களும் யார்? கொழுந்து விட்டெரியும் ஆவலின்றி, கொதிக்கும் மனோ நிலையின்றி முயற்சியாற்றுகின்றவர்களெல்லாம் சிறு சிறு வெற்றி அடைவார்கள். அவ்வளவேதான்.

சிலர் எவ்வளவோ முயற்சி செய்வர். பாடுபடுவர், ஆனால் எடுத்த காரியம் எதிலும் வெற்றியடைவதில்லை. இதற்குக் காரணம் என்ன? அவர்களுடைய ஆவல் கொழுந்து விட்டெரியும் பெரும் தீயாய் ஆகவில்லை; அவர்களுடைய எண்ணம் போதிய அளவு கொதிக்கவில்லை என்பதுதான். அதன் காரணமாக அவர்கள் முக்காலே மூன்று வீசும் கிணற்றைத் தாண்டியவர்களின் கதியை அடைகிறார்கள். முக்காலே மூன்று வீசம் கிணற்றைத் தாண்டியவர்களின் கதியும் மூன்று வீசம் கிணற்றைத் தாண்டியவர்களின் கதியும் ஒன்றுதான். இருவரும் கிணற்றில் விழவேண்டியவர்களே.

எனவே, நாம் நம்முடைய எண்ணத்தைப் போதிய அளவு கொதிக்க வைக்கவேண்டுமானால், நம் மனத்தை ஒருமுகப் படுத்தி அதில் செலுத்த வேண்டும் அந்த எண்ணம் கொதித்து ஆவியாகி நம்முடைய ஆகமெங்கும் பரவி, குருதிக் குழாய்களில் ஒவ்வொரு மயிர்காம்பு வழியாகவும் வெளியேற வேண்டும். அது நம்முடைய இதயத் துடிப்பைவிட, இழுத்து விடும் மூச்சைவிட நமக்கு நெருங்கியதாக இருக்க வேண்டும். அது நம்முடைய ஒவ்வொரு தசை நாரிலும் தன்னுடைய போட்டோவைத் தொங்கவிட்டிருக்க வேண்டும்.

ஐம்பது ஏக்கர் சூரிய வெளிச்சத்தை ஒருமுகப்படுத்தினால் உலகிலுள்ள எல்லா இயந்திரங்களையும் இயக்க

இயலும் என்று அறிவியல் அறிஞர்கள் கண்டுபிடித் திருக்கிறார்கள். சூரிய வெளிச்சத்தை ஒருமுகப்படுத்துவதைக் கொண்டு ஒரு வைரத்தை ஆவியாக்கிவிடலாம். அவ்வித மானால் ஒரு செயலில் நம் மனத்தை ஒருமுகப்படுத்தினால் எவ்வளவு சிறந்த பலனைஅடையலாம் என்பதைப் பாருங்கள்!

திறமை மிகுந்த மக்கள் உலகில் ஏராளமாய் இருக்கின் றார்கள். ஆனால் தங்களுடைய அற்றலை ஒருமுகப்படுத்திச் செயலாற்ற அவர்களுக்குத் திறமை இல்லை. ஒருமுகப் படுத்தப்படும் எண்ணமே கொதிக்கும் தன்மையை அடைய முடியும். இவ்விதக் கொதிக்கும் எண்ணம் இளைய பிட்டை ஆட் கொண்டதனால்தான் அவர் தாம் கண்ட கனவை, அதாவது தம்முடைய தந்தைபோன்று இங்கிலாந்தின் முதல் அமைச்சராவதை நிறைவேற்ற முடிந்தது.

இளம் வயதிலேயே அவர் தம்முடைய முழு ஆற்றலையும் அக்கனவை நனவாக்குவதிலே செலுத்தினார். கல்லூரியி லிருந்து வெளிவந்ததும் காமன்ஸ் சபையினுள்ளே நுழைந்து ஓராண்டுக்குள் நிதி அமைச்சர் ஆகிவிட்டார். இராண் டாண்டுகளில் இங்கிலாந்தின் முதல் அமைச்சராகி, இருபந் தைந்து ஆண்டு காலம் இங்கிலாந்தின் விதியை தம்முடைய கையில் வைத்து விளையாடினார்.

1857-ஆம் ஆண்டு அவர் டேவன்ஸயர் கோமகனிடம், ''பிரபுவே! நான்தான் இந்நாட்டைக் காப்பாற்ற முடியும். வேறு எவராலும் முடியாது'' என்று கூறினார். ஆம்; அவ்விதமே காப்பாற்றினார். நெப்போலியனைத் தோற்கடித்து, செண்ட் ஹெலினாவிற்கு கப்பலேற்றினார்.

அவருக்குக் கலை, இசை, ஓவியம் ஆகியவற்றின்மீது சிறி தேனும் விருப்பம் இருக்கவில்லை. அவர் விரும்பியதெல் லாம் அரசியல் ஆதிக்கம்தான், அதனைத் தம்முடைய கொதிக் கும் மனோநிலையால் பெற்று வெற்றியடைந்தார் அவர்.

ஜெர்மனி ஐக்கியமடைய வேண்டும் என்னும் எண்ணம் பிஸ்மார்க்கின் இருதயத்திலே கொதித்துக்கொண்டிருந்தது. ஆனால் அவர் கொண்டுவந்த ஒவ்வொரு மசோதாவையும் அந்நாட்டுப் பார்லிமெண்ட எதிர்த்தது. அவற்றையெல்லாம் அவர் பொருட்படுத்தவில்லை. எனினும் எதிர்த்த பார்லி மெண்டுகளை கலைத்தொழித்தார். இவ்வாறு கலைக் கப்பட்டு, கலைக்கப்பட்டுப் பார்லிமெண்ட கூடியது எத்தனையோ தடவையாகும்.

அவருடைய கொழுந்து விட்டெரியும் ஆவல் என்னவென் றால், ஜெர்மனியை ஐரோப்பாவின் நிகரற்ற வல்லரசாக்க வேண்டும் என்பதுதான், அதை நிறைவேற்றும் அவருடைய முயற்சியின் முன் எதுதான் தலைநிமிர்ந்து நிற்க முடிந்தது? பார்லிமெண்டும் பிற நாடுகளும் அவருடைய கொதிக்கும் மனோ நிலையின் முன் வெந்து மடியத்தான் வேண்டியதாயிற்று.

''மனிதனுக்கு வேண்டியவை மூன்றே மூன்றுதான். முதுலாவது முதுகெலும்பு,இரண்டாவது முதுகெலும்பு, மூன்றாவது முதுகெலும்பு என்று கூறுகிறார் ஓர் அறிஞர். கொழுந்து விட்டெரியும் ஆவல், கொதிக்கும் மனோநிலை ஆகியவற்றின் குழந்தைகள்தான் இந்த முதுகெலும்பு என்பது. கட்சிப் போராட்டங்களிலோ, மூளையில்லாத முதுகெலும் பானது முதுகெலும்பில்லாத மூளையை வென்றுவிடும்.)

ஒரு கருத்தை ஒரு மனிதனின் நாவிலே கட்டித் தொங்க விட்டு அவனை அக்கருத்தின் பிரதிநிதியாக ஆக்கிவிட முடியாது. போராட்டம் முடிந்ததும் அவனுடைய பெயரை இறந்தவர்களின் பட்டியலிலோ காயமடைந்தவர்களின் பட்டியலிலோ காண முடியாது; காணாமற் போனவர்களின் பட்டியலிலேதான் காணலாம்.

துவக்கத்தில் 'டைம்ஸ்' செய்தித் தாளானது நாளுக்கு நாள் தேய்ந்துகொண்டே வந்தது. அப்பொழுது இருபத்து ஏழு வயது

நிரம்பிய ஜான் வால்ட்டர் தம்முடைய தந்தையிடம், ''தந்தையே! அதை என்னிடம் ஒப்படையுங்கள். நான் அதை முன்னுக்கு கொண்டு வருகிறேன்.'' என்று கூறினார். தந்தையும் மிகவும் தயக்கத்திற்குப்பின் அதனை மகனிடம் ஒப்படைத்தார்.

ஒப்படைத்ததுதான் தாமதம். அச்செயலகம் முழுவதும் புதுமை மங்கை நாட்டியமாடத் துவங்கிவிட்டாள். செய்தித்தாள் எங்கணும் புதுமை மணம் கமழலாயிற்று. எல்லோருடைய தவறுகளையும் அரசாங்கத்துடைய தவறுகளையும் தயவு தாட்சண்யமின்றி கண்டிக்கத் துவங்கிவிட்டார் இளம் ஆசிரியர் ஜான்வால்ட்டர். உடனே விளம்பரங்கள், அறிக்கைகள் ஆகியவற்றை அப்பத்திரிகக்கையில் வெளியிடுவதை அரசாங்கமும் பொதுமக்களும் நிறுத்திக் கொண்டனர்.

முன்னைவிட இழிந்த நிலைக்குச் சென்றுவிட்டது 'டைம்ஸ்'. தந்தைக்கு ஏற்பட்ட கவலைக்கோ அளவில்லை. செய்தித்தாளை மட்டுமல்லாது தன்னையும் நாசப்படுகுழியில் தள்ளிக்கொள்கிறானே என்று அஞ்சினார் தந்தை.

ஆனால் மகனோ, தகுதியும் தனித்தன்மையும், எழுத்து உரிமையும் பெற்ற செய்தித்தாளை அளிக்கவேண்டுமென்ற தன்னுடைய எண்ணத்தைச் சிறிதேனும் வெதுவெதுப்பாக்கவில்லை. கவனிப்பாரற்றுக் கிடந்த 'டைம்ஸ்' செய்தித்தாளின் பக்கங்களிலே புதுக்குருதி பாய்ந்தோடுவதையும், கொதிக்கும் மனோநிலையுடைய மனிதன் பாதையில்லாவிட்டால் புதுப்பாதை போட்டுக்கொள்ளும் மனிதன்--செய்தித்தாளின் சுக்கானைப் பிடித்துக்கொண்டு நிற்பதையும் மக்கள் கண்டனர்.

விதவிதமான தலைப்புக்களின் கீழ் பல்வேறு செய்திகள் அவ்விதழில் வெளியிடப்பட்டன. அரசாங்கத்தாரின் கட்சிப்

பத்திரிக்கையில் பிசுரிக்கப்படுவதற்குப் பல நாட்கள்முன்பே வெளிநாட்டுச் செய்திகள் 'டைம்ஸ்' பத்திரிக்கையில் பிரசுரிக்கப்பட்டன. 'டைம்ஸ்' பத்திரிக்கைக்குச் சொல் லொணா இடுக்கண்களை விளைவித்தனர் அரசியலார். அதற்குவரும்வெளிநாட்டுச் செய்தித் தபால்களெல்லாம் தடுக்கப்பட்டு அரசாங்கத்தை ஆதரிக்கும் பத்திரிக்கைகள் அவற்றை முன்பே பிரசுரிக்க வகை செய்யப்பட்டது.

எனினும் வால்ட்டர் மனம் தளரவில்லை. ஏராளமான பொருட் செலவு செய்து ஆள் மூலம் அயல் நாட்டுத் தகவல்களைக்கொண்டுவர ஏற்பாடு செய்தார். இவ்வாறு அரசாங்கம் செய்த இடையூறுகளையெல்லாம் வெற்றி கொண்ட அவர் மணிக்கு முந்நூறு பிரதிகள்தாம் தம்முடைய அச்சு இயந்திரத்தில் பதிப்பிக்க இயல்வதைக் கண்டு மனம் நைந்தார். சிறிது நாளைக்குள் மணி ஒன்றுக்குப் பதினே ழாயிரம் பத்திரிக்கைகள் அடிக்கும் புது அச்சு இயந்திரத்தைக் கண்டுபிடித்து உலகிற்கு ஒரு மகோன்னதப்பத்திகையையும் அளித்துவிட்டார்.

எண்ணிய செயலை எய்தியே தீர்வது, என்னும் கொதிக் கும் மனோநிலை பெற்றிருந்ததன் காரணமாகவே கிராண்ட் அமெரிக்கா பெற்ற மாபெரும் தளபதியாக ஆக இயன்றது. அவர் ஒருபோதும் தாம் கொண்ட செயலிலிருந்து அசைவதே கிடையாது. எவ்வளவு தோல்விகள் ஏற்பட்ட போதினும் அவருடைய எண்ணம் 240 டிகிரியிலிருந்து இறங்குவதில்லை.

அவரின் முன் சென்று அவருடைய போர் ஏற்பாடு களைப்பற்றி வினவுங்கள்! அவர் பேசாது சுருட்டைப் பற்றவைத்துக் கொண்டு புகைவிட்டுக்கொண்டிருப்பார். அவரை பலவீனன் என்றும் ஏசுங்கள்! அவர் ஒன்றும் கூறாது மற்றொருரு சுருட்டைப் பற்றவைப்பார். அவரை உலகம்

கண்ட மாபெரும் தளபதி என்று புகழ்ந்துரையுங்கள்! 'பப்' என்று சுருட்டுப் புகையை வெளியிடுவார். 'இந்த மனிதன் என்ன நாக்கில்லாத விசித்திரப் பிராணியாயிருக்கின்றானே' என்று நீங்கள் வியப்படைந்து கொண்டிருக்கும்பொழுது அவருடைய படைகள் எதிரிகளை முறியடித்து வெற்றி முரசு கொட்டுவது உங்களுடைய காதுகளில் ஒலிக்கும்.

நாற்பது வயதில் கலாவில் ஒரு சாதாரண மனிதனாய் வாழந்து வந்த கிராண்ட் நாற்பத்திரண்டாவது வயதில் மாபெரும் தளபதியாகிவிட்டார். சிலோஹ் தோல்வியைப் பற்றி அவர் கூறும்பொழுது, ''நான் தோல்வியடையப் போகிறேன் என்பது எனக்கு நன்றாகத் தெரிந்துதான் இருந்தது. இருப்பினும் தொடர்ந்து போர் செய்தேன்'' என்று எடுத்துரைத்தார். சிலோஹ்வில் அவர் தோல்வியடைந்ததும் காங்கிரஸ் உறுப்பினர்களும் பொதுமக்களும் அவரை நீக்கிவிட வேண்டுமென்று கூக்குரலிட ஆரம்பித்து விட்டனர்.

தம்முடைய நன்மையைக் கருதியும் நாட்டு நன்மையை நினைந்தும் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிடுமாறு ஜனாதிபதி லிங்கனிடம் ஆலேசனை கூறினர் லிங்கனின் நண்பர்கள். பத்திரிகைகள் லிங்கன் மீது விடுத்த வசை அம்புகள் நஞ்சு அம்புகளாகவே இருந்தன. அவர் கிராண்ட்மீது கொண்டிருந்த 'முட்டாள்' தனமான நம்பிக்கை பற்றி நகை ஓவியங்கள் வரையப்பட்டன.

ஒரு நாள் இரவு தம் கால்களை மடித்து உட்கார்ந்து காங்கிரஸ் உறுப்பினர்களும் போர் அலுவலர்களும் கிராண்டுக்கு விரோதமாகக் கூறும் கூற்றையெல்லாம் பல மணி நேரம் கேட்டுக் கொண்டிருந்தார் லிங்கன்.

இரவு ஒரு மணி ஆயிற்று. தம்முடைய நீண்டநேர மௌனத்தைக் கலைத்து லிங்கன் கூறினார்: ''அவர்

'புல்டாக்கின்' (சடை நாயின்) பிடியைப் பெற்றிருக்கிறார். அவர் ஒரு செயலில் பல்லைப் பதித்துவிட்டால் எதனாலும் அவரை அப்பிடியிலிருந்தும் அசைக்க முடியாது. அவர் சண்டை செய்கிறார். எனவே அவரை நான் நீக்க முடியாது'' என்று;

கிராண்டுடைய எண்ணமானது எப்பொழுதும் மளமள வென்று கொதிக்கும் தன்மையைப் பெற்றிருந்ததனால் அவர் தம் செயலைச் சாதிக்கும்வரை ஒருபோதும் திரும்பிப் பார்த்தது கிடையாது. ஒரு தடவை பல நாள் போரியற்றியும் யாதொரு பலனும் ஏற்படவில்லை. உடனே போர் அலுவலாளர்களை அழைத்து ஆலோசனை நடத்தினார் கிராண்ட். ஒவ்வொரு வரும் பின்வாங்குவதற்கான ஆலோசனையைக் கூறினரே யன்றி முன்னேறித் தாக்குவதற்கான ஆலோசனையைக் கூறவில்லை. ஒருவர் தாங்கள் பின்வாங்குவதற்கு எந்த பாதை ஏற்றது என்பதை விவரித்தார். மற்றொருவர் வேறொரு பாதையைச் சிபாரிசு செய்தார்.

பல மணி நேரம் அவர்கள்பேசுவதை யாதொன்றும் கூறி இடைமறியாது அமைதியாக இருந்து கேட்டு வந்தார் கிராண்ட். பின்பு எழுந்து, தம் உள் ஜேபியிலிருந்து ஒரு காகித கட்டை எடுத்து அதில் ஒவ்வொரு தாளாக ஒவ்வொரு ஜெனரலிடம் கொடுத்து கிராண்ட் கூறினார். ''கனவான்களே! நாளை காலையில் நீங்கள் இந்த உத்தரவுகளை நிறைவேற்ற வேண்டும்'' என்று ஒவ்வொரு தாளிலும் எவ்விதம் முன்னேறுவது என்பதற்கான வழிகள் வரையப்பட்டிருந்தன.

விடிந்ததுதான் தாமதம், எல்லாப் படைகளும் இவருடைய உத்திரவின்படி நாலாத்திசைகளிலும் வெற்றிகரமாக முன்னேறிக் கொண்டிருந்தன. மிகவும் பலமான தற்காப்புடன் இருந்த கோட்டையை முற்றுகை இடுமாறு ஒரு தளபதிக்கு

உத்திரவிடப்பட்டிருந்தது. அவர் கிராண்டிடம், ''தளபதி அவர்களே! நான் உங்களுடைய உத்தரவை நன்றாக விளங்கிக் கொள்வதாயிருந்தால் நான் என் படையிலுள்ள ஒவ்வொரு வரையும் பலிகொடுக்க நேரிடும்'' என்று கூறினார். ''என்னு டைய உத்தரவை நன்றாக விளங்கிக் கொண்டாய் என்பதற்காக மகிழ்ச்சியுறுகிறேன்' என்று சட்டென பதில் மொழிந்தார் கிராண்ட். எதிரியிடமிருந்து அவர் நிபந்தனை யற்ற சரணாகதியைத் தவிர வேறொன்றையும் விரும்ப வில்லை.

அவருடைய எண்ணத்திலிருந்து உற்பத்தியாகிய அந்த இரு சொற்களும் எதிரிகளை மட்டுமல்லாது அமெரிக்கா முழுவதையும் ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. உலகம் தோன்றியது முதல் இதுகாறும் அந்த எண்ணமே மக்களின் எண்ணத்திற்கு எட்டாததாயிருந்தது. ஆனால் அவருடைய அந்தக் கொதிக்கும் மனோநிலையானது அமெரிக்காவுக்கு மட்டுமல்ல. மானிட சமுதாயத்திற்கே மாபெரும் வெற்றியை ஈட்டித்தந்தது என்பதை யார்தான் மறுக்க முடியும்?

கொதிக்கும் மனோ நிலையுடையவன் ஆரம்பத்தில் சிறு சிறு தோல்வியடைந்தபோதிலும் இறுதியில் தோல்வியி லிருந்து பெருவெற்றியைப் பிய்த்திழுத்துவிடுவான்.

அமெரிக்கர் ஒருவருக்கும் ஆங்கிலேயர் ஒருவருக்கும் ஓர் உரையாடல் நிகழந்தது. அப்பொழுது அமெரிக்கர் கேட்டார், 'நீங்கள் எந்த போரிலும் ஆரம்பத்தில் தோல்வியுறுகிறீர்கள்; இறுதியில் வெற்றியடைந்து விடுகிறீர்கள். இறுதியிலும் உங்களுக்குத் தோல்வி ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வீர் கள்?'' என்று. உடனே அந்த ஆங்கிலேயர், ''அவ்வித மானால் அது இறுதிச் சண்டையாக இராது'' என்று கூறினார்.

''நம்முடைய மகத்துவம் விழாமல் இருப்பதில் இருக்க வில்லை. விழுந்த ஒவ்வொரு தடவையும் மறுபடியும்

எழுந்திருப்பதில்தான் இருக்கிறது'' என்று கன்ஃப்யூஷியஸ் கூறினார். ''நீ எவ்விதம் பனிக்கட்டியில் வழுக்கி விளையாடக் கற்றுக்கொண்டாய்'' என்று ஒரு சிறுவனிடம் கேட்கப்பட்ட பொழுது, நான் விழுந்த ஒவ்வொரு தடவையும் எழுந்திருப்ப தனால் பழகினேன்'' என்று கூறினான்.

எனவேதான் மெக்காலே, மகா அலெக்ஸாண்டரைப் பற்றிக்கூறும்பொழுது, 'போர்களத்தில் அடிக்கடி தோல்வி யடையும் அவர், போர் முடிவில் வெற்றி வீரராய் வெளி வருவார்'' என்று இயம்பினார். தம்முடைய தளபதி மெக்ஸினா வைப் பற்றி நெப்போலியன் பின்வருமாறு கூறினார்; ''தோல்வியடைந்தபொழுது மெக்ஸினா, வெற்றி வீரர் போன்று மற்றொரு போர் நடத்தத் தயாராக நிற்பார்!''

உலகில் நாம் ஒரு பட்டம்; நம்மை கீழே இழுக்காவிட்டால் நாம் மேலே போக முடியாது. நாம் ஒரு பறவை; காற்று அடிக்காவிட்டால் சூனியத்தில் பறக்க முடியாது. நாம் ஒரு பந்து; பலமாக ஓங்கிக் கீழே அடிக்கப்படவில்லையாயின் நாம் மேலே உயர முடியாது. எனவேதான் பெர்னாட்ஷாவும், ''என்னை எதிர்ப்பு ஆற்றல்கள் படுபாதளத்தில் தள்ள முயன்றன.அதன் காரணமாகவே நான் வானளாவ உயரந்து விட்டேன்'' என்று கூறினார்.

இவ்வாறு ஆரம்பத் துன்பம், தோல்வி ஆகியவை கொதிக்கும் மனோநிலை உள்ளவனை, எவ்விதம் விண்மீன் களை இருட்டு ஒளிவிடச்செய்கிறதோ அதேபோன்று ஒளிவிடச் செய்யும். அவை அவனுடைய மனோநிலையைக் குளிரச்செய்வதற்குப் பதிலாகக் கொதிக்கச் செய்து கொண்டிருக்கும்.

மார்ட்டின் லூதர் மாபெரும் செயலைச் சாதித்தது போப் புடன் பெரும் போராட்டம்நடத்தித்தான், ''வர்ம்ஸ் நகரில்

ஏராளமான கார்டினல்களும் பிஷப்புகளும் இருக்கின்றனர். அவர்கள், நீங்கள் அங்குச் சென்றால் ஜான் ஹஸ்ஸைச் செய்தது போன்று எரித்துச் சாம்பலாக்கி விடுவார்கள்'' என்று ஒருவர் லூதரிடம் கூறும்பொழுது, ''வர்ம்ஸ் நகரிலிருந்து இந்தஊராகிய விட்டன்பர்க் வரையிலும் வானளாவ கொழுந்து விட்டெரியும் பெருந்தீயை மூட்டி எதிர்த்த போதினும் நான் அதை ஊடுருவிப் பாய்ந்து அவர்கள் முன் செல்வேன்'' என்று கூறினார் அவர்.

''நீங்கள் அங்குச் செல்வீர்களாயின் ஜார்ஜ் கோமகன் உங்களை நிச்சயம் கைது செய்வார்'' என்று ஒருவர் அவரிடம் கூறியபொழுது, ''தொடர்ந்தாற்போல் ஒன்பது நாட்கள் ஜார்ஜ் கோமகனாக மழை பெய்தபோதினும் நான் அங்குப் போய்த்தான் தீர்வேன்'' என்று கூறினார் லூதர்.

அதேபோன்று வர்ம்ஸ் நகரம் சென்று மதகுருக்களின் பேரவை முன்பு தோன்றி தம்முடைய எதிரிகளைப் பார்த்து, ''இதோ உங்கள் முன் நான் நிற்கிறேன், நான் செய்ய வேண்டியதை தவிர்த்து வேறொன்றும் செய்ய முடியாது. ஆண்டவன் எனக்கு உதவி செய்வான்'' என்று கூறினார்.

போராட்டம் நடந்து முடிந்தது. வாகைசூடி வெகுநாட்களுக்குப்பின் அவருடைய மனைவி அவரைப் பார்த்து, ''என்ன டாக்டர், நாம் போப்புடன் போராடிக் கொண்டிருக்கும்பொழுது கொதிக்கும் மனோநிலையுடன், பக்தியுடன் வழிபாடுசெய்தோம். ஆனால் இப்பொழுதோ, அந்த மனோநிலை, பக்தியெல்லாம் குளிர்ந்து போய் விட்டதே'' என்று கூறினார்!

யூத குலத்தில் பிறந்த டிஸ்ரேலி இங்கிலாந்தின் முதல் அமைச்சராவதென்றால் எளிய செயலா? எத்தனை எதிர்ப்புகள்! எத்தனை தடங்கல்கள்! அவர் இளைஞராயிருந்த

பொழுது முதலமைச்சர் மெல்போர்ன் பிரபுவிடம் அறிமுகப் படுத்தி வைக்கப்பட்ட சமயம், அவர் டிஸ்ரேலியைக் கேட்டார், ''நீங்கள் யாராக இருக்க விரும்புகிறீர்கள்?'' என்று. ''இங்கிலாந்தின் முதலமைச்சரராக இருக்கவிரும்புகிறேன்'' என்ற பதில் டிஸ்ரேலியின் வாயிலிருந்து உடனே வெளி வந்தது. அவருடைய அந்தக் கொதிக்கும் மனோ நிலையானது எண்ணத் தொலையாஇடையூறுகளையும் எதிர்த்து நின்று எண்ணியதை எய்தியே தீர அவருக்கு உதவி செய்ததைப் பாருங்கள்.

பர்னம் தம்முடைய வியாபார வாழ்வைத் துவக்கியது வெறுங்காலுடன்தான். அவருடைய பதினைந்தாவது வயதில் தந்தை இறந்தபொழுது அவருடைய ஈமச்சடங்கில் கலந்து கொள்ள ஒரு செருப்பு கடனுக்கு வாங்க வேண்டியதாயிற்று. ஐம்பதாவது வயதில் அவருடைய வாணிபம் முறிந்து கடனோ தலைக்கு மேல் நின்றது.ஆனால் முறிந்து விழுந்த அன்றைய தினமே அவர் எழுந்திருக்க ஆரம்பித்து விட்டார்.

பொதுவாழ்வில் ஈடுபட வேண்டும் என்று லிங்கன் முடிவு செய்ததும் அது பற்றித் தம்முடைய நண்பர்களுடன் ஆலோசனை நடத்தினார். பேசிப் பழகவேண்டும் என்பதற்காக ஏழெட்டு மைல் தூரம் நடந்து சென்று பெரும் நா வல்லுனர்களின் பேச்சுக்களைக்கேட்டு வந்தார். இலக்கணம் படிப்பது பற்றிப் பக்கத்தில் குடியிருந்த க்ரஹாம் ஆசிரியரிடம் ஆலாசனை கேட்டார். ''நீங்கள் பொதுவாழ்வில் ஈடுபடுவதாயிருந்ததால் இலக்கணம் படித்துத்தான் தீர வேண்டும்'' என்று கூறினார் அவர்.

ஆனால் இலக்கண நூல் தம் கைவசம் இல்லை என்றும், ஆறு மைலுக்கு அப்பாலுள்ள ஒருவவரிடம் அது இருக்கிறது என்றும் க்ரஹாம் கூறியதும் லிங்கன் மறுசொல் பேசவில்லை.

உடனே புறப்பட்டார். அந்நூலை இரவல் வாங்கி வந்தார். இரவு முழுதும் அதைப் படித்தார்.

அவருடைய நண்பர்கள் அவரைச் சட்டடசபை உறுப்பினர் பதவிக்கு வேட்பாளராக நிறுத்தியபொழுது அவருடைய எதிரிகள் அவரைக் கேலி பண்ணினர். தேர்தல் சொற்பொழிவு நிகழ்த்தும் பொழுது அவர் அணிந்திருந்த உடைகள் சிறியதாக இருந்தன. எனவே, உட்கார்ந்தால் கிழிந்துவிடுமோ என்று அஞ்சி அவர் உட்காருவதில்லை.

சட்டம் படிக்குமாறு அவருடைய நண்பர்கள் அவரிடம் கூறியபொழுது லிங்கன் சிரித்தார். ''சட்டம் படிப்பதற்கு எனக்கு அறிவு பற்றாதே'' என்று கூறினார். ஆனால் அதை படிக்க வேண்டுமென்னும் எண்ணம் கொழுந்துவிட்டெரிந்து கொதிக்க ஆரம்பித்ததும் அவர் எவ்விதத் துன்பங்களையும் ஒரு பொருட்டாகக் கருதவில்லை.

வெறுங்காலுடன் மரங்களின் கீழே அமர்ந்து கொண்டு சட்டப் புத்தகங்களைப் படிக்கலானார். சட்டசபையில் சிறிது கம்பீரமாக தோற்றமளிக்க வேண்டுமென்பதற்காகக் கடன் வாங்கி ஒரு புதிய உடையைத் தைத்துக் கொண்டார். ஊர்திகளில் செல்லக் கையில் காசில்லாததால் நூறு மைல் நடந்து சென்று சட்டசபை கூட்டத்திறகு ஆஜரானார்.

இவ்வாறு துன்பங்களின் நடுவே கொதிக்கும் மனோநிலையைப் பெற்றிருந்ததனால்தான் லிங்கன் முன்னேற முடிந்தது. ஆனால் உலகில் பெரும்பாலோர் சீக்கிரம் முன்னேற இயலவில்லையாயின் அவர்களுடைய மனோ நிலை வெதுவெதுப் பாகிவிடுகிறது. ஆரம்பத்திலேயே மடமடவென்று வெற்றி பெறுவதானது ஒருவனைச் செருக் குடையவனாய் ஆக்கி படுபாதாளத்தில் தள்ளுகிறது என்பதை யும், அவனிடமுள்ள போராடும் ஆற்றலே நசித்தொழிக்கப்படு கிறது. என்பதையும் அவர்கள் உணர்வதில்லை.

விரைவில் பழுக்கும் பழம் விரைவில் அழுகிவிடு மல்லவா? பூக்கள் வேண்டாமென்றால் பழங்கள் எவ்விதம் கிடைக்கும்? சிறு குழந்தைகள் விதையை விதைத்துவிட்டு அது முளைத்து விட்டதா, அல்லவா என்று அடிக்கடி தோண்டிப்பார்ப்பது போன்று அவர்கள் செய்கிறார்கள். நீண்ட காலம் வாழக் கூடிய மகிழ மரம் சீக்கிரம் செத்துவிடும் கீரைக்கன்று மாதிரி விரைவில் முளையிட்டு வளர்ந்துவிடாது.

தான் கூறும் வார்த்தையை அதே தொனியுடன் கிராம போனும் கூறவேண்டும் என்பதற்காக எடிஸன் கொண்ட முயற்சி கொஞ்சமல்ல; அவர் கூறுகிறார். ''கடந்த ஏழு மாதங்களாக ஒரு நாளைக்குப் பதினெட்டு முதல் இருபதுமணி நேரம்வரை 'ஸ்பீஸியா என்ற ஒரே சொல்லிற்காக வேலை செய்தேன். ஸ்பீஸியா, ஸ்பீஸியா, ஸ்பீஸியா என்று நான் கூறும் பொழுது ஃபோனாகிராஃபானது பீஸியா, பீஸியா, பீஸியா என்று கூறியது. இந்நிலையானது ஒருவனைப் பைத்தியம் பிடிக்கச் செய்துவிடும் ஆனால் நான் உறுதியாய் நின்றேன். அதனால் வெற்றி பெற்றேன்'' என்று.

நெப்போலியன் பள்ளியில் பயிலும்பொழுது மிகவும் கடினமான கணக்கொன்று அவருடைய வகுப்புக்கு கொடுக்கப் பட்டடது. வகுப்பில் ஒருவரும் அதனை சரிவரச் செய்யவில்லை. ஆனால் நெப்போலியன் தம் அறைக்குள் சென்று 72 மணி நேரம் ஓயாது முயன்று அக்கணக்கை செய்து முடித்துத்தான் வெளிவந்தார். அக்கணக்கு இன்றளவும் 'நெப்போலியன் கணக்கு' என்று வழங்கப்படுகிறது.

''இதோ! இந்தக் குறியை ஏழு தடவை அடிக்க வேண்டும். யார் இதை ஏழு தடவை சரியாக அடிக்கின்றானோ அவனுக்கே பதவி கிடைக்கும்'' என்று கூறினார் முதலாளி ஒருவர், தம்மிடம் வேலை தேடிவந்த முப்பது இளைஞர்களை நோக்கி.

அவர்களுள் ஒருவன்கூட அதனை ஏழு தடவையும்சரியாக அடிக்கவில்லை. ''இன்று போய்விட்டு நாளை வந்து அந்தக் குறியை அடியுங்கள்!'' என்றார் முதலாளி.

அடுத்த நாள் அந்த முப்பது பேர்களில் எத்தனை பேர் வந்தார்கள் என்று நினைக்கிறீர்கள். ஒரே ஒருவன்தான். அவன் அந்த குறியை ஏழு தடவையும் சரியாக அடித்தான். இதைப் பார்த்ததும் அந்த முதலாளிக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. ''எவ்வாறு அதனை ஏழு தடவையும் ஒழுங்காக அடித்தாய்?'' என்று வினவினார் அவனை நோக்கி. அப்பொழுது அந்த இளைஞன், ''நான் என் தாயைக் காப்பாற்று வதற்காக அந்தப் பதவியைப் பெற விரும்பினேன். அதனால் வீட்டில் இரவு முழுவதும் இதேபோன்று குறி வைத்து அடித்து பழகினேன்'' என்று கூறினான்.

இவ்வாறு வெற்றியடைகிறவர்களுக்கும் தோல்வியடை கிறவர்களுக்கும் உள்ள ஒரே வேறுபாடு இந்த மனோ நிலைதான். மனோநிலையைத் திடம் என்னும் நெருப்பு மூட்டிக் கொதிக்கவிடாது தளர்வு என்னும் தண்ணீர் ஊற்றிக் குளிரச் செய்துவிட்டால் வெற்றியானது தோல்வியாக மாறிவிடும்.

வேட்டையாடும் பொழுது ஒருவர் சுட்ட சூடு குறி தவறி அவருடைய மகனின் கண்களில் பட்டு இரண்டு கண்களை யும் குருடாக்கிவிட்டது. அப்பொழுது மகன் தந்தையை நோக்கி, ''தந்தையே! கவலைப்படாதீர்கள், நான் வாழ்க்கை யில் வெற்றி பெறுவதற்கு என்னுடைய கண்கள் குருடானது ஒரு தடையாய் இருக்காது'' என்றுகூறினான். குருடாயிருந்த போதிலும் அவர் பிற்காலத்தில் இங்கிலாந்தின் போஸ்ட் மாஸ்டர் ஜெனரலாகி வெகு திறமையுடன் பணியாற்ற வில்லையா?

கொதிக்கும் மனோநிலையுள்ளவர் தங்களின் உலகைத் தாங்களே உண்டுபண்ணிக்கொள்ள எதுதான் தடையாக நிற்க முடியும்? எனவேதான் கன்ஃப்யூஷியஸும், ''ஒரு பெரிய படையின் தளபதியைத் தோற்கடித்துவிடலாம். ஆனால் ஒரு குடியானவனின் உறுதி நிறைந்த மனத்தைத் தோற்கடிக்க முடியாது'' என்று கூறினார்.

ஒரு தடவை சர் தாமஸ் லிப்டன் தம்முடைய கடையின் பல்வேறு பிரிவுகளையும் பார்வையிட்டு கொண்டு வந்தார். அவர் யார் என்பதை அறியாத கடை விற்பனையாளன் ஒருவன் அவர் யாதொரு சாமானும் வாங்காது வெளியே செல்வதைக் கண்டு அவரை நெருங்கி, ''லிப்டன் வெண்ணெய்க் கட்டி' யைப்பற்றி வெகுவாக அவரிடம் சிபாரிசு செய்ய ஆரம்பித்துவிட்டான். தமக்குத் தற்போது வெண்ணெய்க் கட்டி தேவையில்லை என்றும், வெறுமனே பார்க்கதான் தாம் வந்தாகவும் லிப்டன் அவரிடம் எவ்வளவோ கூறியும் அதை அவரிடம் விற்றுத்தான் தீர வேண்டுமென்னும் கொதிக்கும் மனோநிலையின் காரணமாய் அவன் அவரை விட்டானில்லை. கடைசியில் லிப்டன் தம்முடைய ஜேபியிலிருந்து பணத்தை எடுத்து ஒரு ராத்தல் வெண்ணெய்க் கட்டியை வாங்கிக் கொண்டு சென்றார். சிலநாள் கழித்து அந்த விற்பனையாளனுக்கு உயர் பதவி கிடைத்தது.

'வேலைக்கு ஒரு பையன் தேவை' என்னும் விளம்பர அட்டை கடையொன்றில் தொங்கவிடப்பட்டிப்பதைக் கண்ட பையன் ஒருவன் அந்த விளம்பர அட்டையைக் கழற்றிக் கையில் எடுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தான். இதைப் பார்த்த கடை முதலாளிக்கு ஏற்பட்ட கோபத்திற்கு அளவில்லை. ''ஏன் அதைக் கழற்றிக் கொண்டு வருகிறாய்?'' என்று உரத்த குரலில் கேட்டார் அவர்.

''இனிமேல் அது அங்கிருக்கத் தேவையில்லை. அந்த வேலையை நான் செய்யப்போகிறேன்'' என்றான் பையன். இதைக் கேட்டு மகிழ்ச்சியுற்ற அந்த முதலாளி உடனே அந்தப் பையனை அவ்வேலையில் நியமிர்த்தார். அவன்தான் பிற்காலத்தில் அமெரிக்காவின் பிரசித்திபெற்ற வழக்கறிஞனாய் விளங்கினான். அவனுடைய மனம் சில நிமிடங்களில் அவனுடைய வாழ்க்கை இயந்திரத்தை ஓட்டும்படியான கொதிப்பு நிலையை அடைந்துவிட்டதைப் பாருங்கள்.

1837-ஆம் ஆண்டு நியூயார்க் நகரத்தில் சான்ஸலர் பெண்டுடைய வீட்டில் விருந்தொன்று நடைபெற்றது. அதில் பிரபலஸ்தர்கள் கலந்துகொண்டனர். ஒரு பிரெஞ்சுக்காரரும் அதற்கு வந்திருந்தார். அவர் யாதொன்றும் பேசவில்லை. ஆழந்த சிந்தனையிலிருப்பது போன்று அவருடைய முகக் குறியிலிருந்து தெரிந்தது. அவ்விருந்திற்குப் பேராசிரியர் மோர்ஸீம் வந்திருந்தார். அவர் பக்கத்திலிருந்த தம் நண்பரிடம், ''அதோ வீற்றிருக்கிறாரே, அவருடைய நெற்றியைப் பார்த்தால் பெரிய அறிவாளி போன்றல்லவோ தோன்றுகிறது'' என்று கூறினார்.

அதற்கு அந்த நண்பர், ''அவருடைய தலையில் மிகுந்த அறிவு இருக்கத்தான் செய்கிறது. ஆனால்அதில் விசித்திர எண்ணம் ஒன்று புகுந்து கொண்டிருக்கிறது. அவர் ஒரு நாள் பிரான்ஸின் அரசராவாராம். இதைவிட நிறைவேறாத எண்ணம் உலகில் உண்டா?'' என்று கேட்டார். அது அப்பொழுது பலருக்கு நிறைவேறாத எண்ணமாகத்தான் தெரிந்தது.

ஏனெனில், அவர் இப்பொழுது நம் நாட்டை விட்டு விரட்டப்பட்டு அமெரிக்காவில் அடைக்கலம் புகுந்திருந் தார்.ஆனால் இந்த பரிதாபகரமான நிலையிலும் தாம் பிரெஞ்சு

அரசராக வேண்டுமென்னும் அவருடைய எண்ணம் குளிர்ச்சியடைந்து விடவில்லை. பலன் என்ன? பதினான்கு ஆண்டுகளுக்குப் பின் மூன்றாவது நெப்போலியன் என்னும் பெயருடன் பிரெஞ்சு அரியாசனம் ஏறினார் அவர்.

இரண்டாவது உலகப் போரின்போது ரஷ்யா வீழ்வது இன்றோ, நாளையோ என்று உலகம் முழுவதும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது முப்பெரியார் மாநாட்டில் ஸ்டாலின் என்ன பேசினார் தெரியுமா? 'எங்களின் கதி இவ்விதம் ஆயிற்றே' என்றா? இல்லை; பெர்லினை எவ்விதம் முற்றுகையிட்டு வெல்வது எனபது பற்றி.

நேச நாட்டினருக்கு எங்கணும் தோல்விமயமாக இருக்கும் பொழுது கஸப்ளாங்காவில் முப்பெரியார் மாநாடு கூடியதை நீங்கள் அறிவீர்கள். அம்மாநாட்டில் ரூஸ்வெல்ட் எதைப் பற்றி பெரும்பாலான நேரம் பேசினார் என்று நினைக்கிறீர்கள்? நம்முடைய நிலை இவ்விதம் இருக்கின்றதே நாம் என்ன செய்வது என்றா? இல்லை, இல்லை; ஜெர்மனியைத் தோற் கடித்தபின் அதனை எவ்விதம் ஆட்சி செய்வது என்பது பற்றி.

சிறிய மனிதனுக்கும் பெரிய மனிதனுக்கும் உள்ள வேறுபாடு இதுதான், இருவரும் வாழக்கைப் பாதையில் செல்கின்றனர். நடுவில் ஓர் ஆறு குறுக்கிடுகிறது. அதோ, வெள்ளம் அலைவீசி வருவதுஅவர்களின் கண்களுக்குத் தெரிகிறது. இன்னும் சில வினாடிகளில் அவர்கள் நிற்கும் இடத்திற்கு வெள்ளம் வந்துவிடலாம். சிறிய மனிதன் இதைக்கண்டு பயந்து நடுங்குகிறான். என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியவில்லை, ஆனால் பெரிய மனிதனோ, முன்னேற வேண்டுமென்னும் கொதிக்கும் மனோ நிலையி னால் ஒரே பாயச்சலாய்ப் பாய்ந்து அக்கரையை அடைந்து விடுகிறான்.

'துன்ப வெள்ளமே! இனி நீ எக்கேடும் கெட்டுப்போ, இனிமேல் உன்னைப் பற்றி எனக்கென்ன கவலை' என்று நகைத்துவிட்டு விறுவிறுவென்று அவன் முன்னேறுகிறான். துன்ப வெள்ளத்தைக் கண்டு யாது செய்வதென அறியாது திகைத்து நின்ற சிறிய மனிதனோ, அந்தத் துன்ப வெள்ளத்திற்கே இரையாகி துன்பக் கடலால் மூழ்கடிக்கப் படுகிறான்.

கொதிக்கும் மனோநிலை உடையவனின் முன் எல்லாம் அடிபணிந்து விடுகின்றன. அவனைக் கண்டதும் எல்லா வாசல்களும் திறந்து விடுகின்றன. தோல்வி அவனைக் கண்டதும் தூரத்தில் ஓடுகிறது. அற்ப விஷயங்கள் அஞ்சி ஒளிகின்றன. இரும்பைக் காந்தம் இழுப்பதுபோன்று, உலகில் மூலை முடுக்குகளில் இருப்வர்களெல்லாம் அவனுடைய கொதிக்கும் மனோ நிலையால் இழுக்கப்பட்டு ஓடோடி முன் வருகின்றனர். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது போன்று வெற்றி மங்கை அவனை நடுவழியிலேயே சந்தித்து அவனுக்கு மாலை சூட்டுகிறாள். காந்தி என்ற கொதிக்கும் மனோ நிலையுடைய ஒரு மனிதரின் போராட்டத்தை இந்தியா முழுவதும் ஆதரித்து நின்று அவரை வெற்றிச் சிகரத்தில் ஏற்றவில்லையா?

கொதிக்கும் மனோநிலையுடன் ஒருவன் செயலாற்றும் பொழுது அந்த உண்மையை அனுபவபூர்வமாக அறியலாம். ஒரு வழக்கை வெற்றி காண்பதற்கான சட்ட நுணுக்கங்களைத் தாம் பல நாட்களாக ஆராய்ந்து கொண்டிருந்ததாகவும், அப்பொழுது அதன் மேலே சுற்றியிருந்த 'மெயில்' பத்திரிக்கைக்காகிதத்தில் அதே போன்ற வழக்கொன்று கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் அனுகூலமாக முடிந்திருக் கின்ற விஷயமும் சட்டக் குறிப்புகளும் பொறிக்கப்பட்டிருந்தன

வென்றும், மற்றொரு சமயம் ஒரு வழக்கு பற்றிய சட்டக் குறிப்புகள் அடங்கிய அட்டவணையில் பொறிக்கப்பட்டிருந்த பக்கத்தை மறந்துவிட்டு வேறு ஒரு பக்கத்தைத் திருப்பும் பொழுது அதில் தமக்கு அனுகூலமான எல்லாக் குறிப்புகளும் அடங்கியிருந்ததாகவும், மறுபடியும் அட்டவணையைத் திருப்பி அதில் தாம் மறந்துவிட்ட பக்கத்தைப் பார்க்கும் பொழுது அதில் தமக்குப் பிரதிகூலமான சட்டக் குறிப்புகளே அடங்கியிருந்ததாகவும். முன்னேற்றம் அடைந்து வரும் ஒரு வாலிப வழக்கறிஞர் கூறுகிறார்.

இவ்வாறு அவருக்கு அனுகூலமான சட்டக் குறிப்புகள் காட்சியளிப்பதற்கும், மேற்கொள்ளும் எல்லா வழக்குகளிலும் அவர் வெற்றி பெறுவதற்கும் காரணம் என்ன? அவருடைய கொதிக்கும் மனோ நிலைதான்.

ஹாரியட் பீச்சர் ஸ்டவ் என்பவர், ''நீ உன்னுடைய வேலையில் நெருக்கடியான இடத்தை அடைந்த பொழுது இனி மேல் ஒரு நிமிடம் கூட அங்கு நின்று சமாளிக்க முடியாது என்ற நிலைமை ஏற்படும். அப்பொழுதுதான் நீ உன்னுடைய மனோ உறுதியைக் காட்டவேண்டும். ஏனெனில் அந்த கனத்தில் அந்த இடத்தில் வைத்துத்தான் அலைகள் வேறு பக்கம் அடிக்க ஆரம்பிக்கும்'' என்று கூறுகிறார்.

போரில் இனிமேல் ஒரு கணமும் தாக்குப் பிடிக்க முடியாது என்ற நிலை ஏற்படும் பொழுதுதான் ஓடாது மிகவும் உறுதியாக நிற்க வேண்டும் என்றும், அந்த ஒரு சில நிமிடங்களே போரின் விதியைத் தீர்மானிக்கும் என்றும் போர்த் தளபதிகள் ஒருமித்துக் கூறுகின்றனர். விடியும் முன் ஏற்படும் கடும் இருட்டானது விடியப் போவதின் அடையாள மல்லவா?

சிகாகோவிலுள்ள ஒரு வாணிப நிலையத்திற்குப் பெரும் கடன் ஏற்பட்டு முறிந்துவிடும் நிலை வந்தது. பங்காளிகள்

கூடிப் பல நாட்கள் ஆலோசித்தபின் வாணிபத்தை ஒரு முடிவுக்குக்கொண்டுவரத் தீர்மானித்தனர். இந்தத் தீர்மானத்துக்குப்பின் மனச் சோர்வுடன் பங்காளிகளில் ஒருவர் தம்முடைய வீட்டிற்குச் சென்று ஒரு பத்திரிகையை எடுத்துப் பிரித்தார். ''விட்டுவிடாதே! இன்னும் கொஞ்சம் தாக்குப் பிடி!'' என்னும் சொற்கள் அதில் பொறிக்கபட்டிருந்தன. அவ்வளவு தான். அவருடைய உடலெங்கும் ஓர் ஆற்றல் ஊடுருவிப்பாய்ந்தது.

டெலிபோனை எடுத்தார். கடையைத் தொடர்ந்து நடத்தி துன்பத்திலிருந்து அதை மீட்கக் கடைசி முயற்சி ஆற்ற போவதாகத் தம் பங்காளிகளிடம் தெரிவித்தார். ஓராண்டு காலத்திற்குள் அந்தக் கடை தனக்கேற்பட்ட கடன்களை யெல்லாம் ஒழித்து ஊதியத்தைப் பொழியத் துவங்கி விட்டது.

தங்கச் சுரங்கத்தைக் கண்டுபிடிக்க நினைத்த ஒருவர் ஒரு லட்சம் ரூபாய் செலவிட்டு ஒன்றரை ஆண்டுகள் உழைத்து ஒரு மைல் தொலைவு தோண்டியும் தங்கம் கிடைக்கவில்லை. ஆனால் அதை மற்றொரு கம்பெனியார் குத்தகைக்கு எடுத்து அதற்கப்பால் ஒரு கெஜம்தான் தோண்டினார்கள். தங்கச் சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டவிட்டது! அதேபோன்று வாழ்வில் தங்கச் சுரங்கமும் இன்னும் ஒரு கெஜ தூரத்தில்தான் இருக்கிறது. அதை அடைவதற்கு உங்க ளுடைய மனோநிலையை 240 டிகிரி அளவு கொதிக்கும்படி செய்து கொள்வீர்களாக!



# 3. புதிய காரியத்தைச் செய்யுங்கள்!

கொதிக்கும் மனோநிலையுடன் செயலில் ஈடுபட வேண்டுமென்று நான் கூறுவது, எச்செயலையும் முன்பின் எண்ணாது அவசரப் புத்தியுடன்செய்து பின் பலனைக் கெடுத் துக்கொள்ள வேண்டுமென்று பொருளல்ல, இலௌகீதத் துடன் நடந்து, யுக்தியுடன் செயலாற்றி வெற்றி காண வேண்டுமென்பதுதான் அதன் பொருள்.

யுக்தி என்றால் என்ன? அறிவின் சிகரமேயாகும். ''நடுத்தர அறிவை அனுகூலமான வழகளில் பயன்படுத்துவது ஒளிமய மான புத்தி தீட்சண்யத்தை விட அதிகப் பெருமையயைப் பெற்றுத் தரும்'' என்று கூறுகிறார் ரோச் போகால்ட். இதையே கோல்ட்டனும் பின்வருமாறு சொல்கிறார்:

''இலௌகீகமுள்ள மனிதன், தான் அறிந்த பலவற்றையும் செய்வதோடு, தான்அறியாத பலவற்றையும் செய்து முடித்து விடுகிறான். படிப்பாளி தன்னுடைய படிப்பை விளம்பரப் படுத்த ஆபாசமாக முயற்சி செய்யும்பொழுது இவனோ, தன்னுனைடய கல்விக் குறைவைத் திறமையுடன் மறைத்து அவனைவிடப் பெரும் பலனைப் பெற்று விடுகிறான்.''

ஒருவன் பெரிய அறிவாளியாகவும் படிப்பாளியாகவும் இருக்கலாம். ஆனால் யுக்தியுடன் செயலாற்றவில்லையாயின் அவன் பெரும் பலனைப் பெறமுடியாது. இலௌகீகம் இல்லையாயின் அவன் ஒளிமயமான வாழ்வையும் எய்த

இயலாது. தேன் சேகரிக்க விரும்பி தேன் கூட்டில் நேரடியாக அடித்தோமாயின் தேனீக்களின் கடியைத்தான் பெறவேண்டு மேயன்றி தேனைப் பெற முடியாதல்லவா?

பலருக்கு சமயோசிதமாக நடக்கத் தெரியாது; சாடை அறிந்து செயலாற்றவும் விளங்காது. மனிதர்களின் தராதர மறிந்து உரையாடவும், அவர்களின் மனோநிலை அறிந்து உரையாடவும் அவர்கள் அறியமாட்டார்கள். 'சாடை அறியாத வன் சண்டாளன்' என்று ஒரு நாடோடிப் பழமொழி உண்டு. அதேபோன்று சண்டாளத்தனமாக நடந்து இத்தகை யவர்கள் காலம், இடம் அறிந்து காரியமாற்றாது தங்களுக்கே தாங்கள் தீமை செய்து கொள்வார்கள். முன்வைத்த காலைப் பின் வைக்கக் கூடாது என்று வீராப்புடன் நிற்பர். ஆனால் காலம், இடம் ஆகியவற்றிற்கேற்ப ஓர் அடி பின் வாங்கினால் அடுத்தகணம் பத்து அடி முன்னால் பாய ஏதுவாகும் என்பதை அவர்கள் அறிகின்றார்களில்லை.

உண்மை ஒரு கூரிய கத்திபோன்றது. அதை உபயோகிக் கத் தெரியாது உபயோகித்தால் நம்முடைய கையையே வெட்டிக் கொள்ள வேண்டியதுதான். இவ்வுண்மை அவர்களுக்குத் தெரிவதில்லை. ''ஏன் இவ்விதம் கூறினாய்?'' என்று நாம் அவர்களைக் கேட்டபின், நான் உண்மையைத் தானே கூறினேன். பொய் சொல்லலாமா? என்று நமக்கே அறிவுரை பகர ஆரம்பித்துவிடுவர்.

எங்கள் ஊரில் நான் சிறுவனாயிருக்கும் பொழுது நடந்த நிகழ்ச்சி ஒன்று எனக்கு இப்பொழுது நினைவிற்கு வருகிறது. தர்மம் செய்ய விரும்பிய ஒருவர் தெரு வழியே சென்று கொண்டிருந்த மற்றொருவரை கைதட்டிக் கூப்பிட்டார். அவர் திரும்பிப் பார்த்ததும், ஆஹா, நீங்களா? கூனப்பக்கீர் எனறல்லவா நினைத்தேன்'' என்றாராம்.

அவ்வளவுதான் இருவருக்கும் சண்டை வரும் நிலை ஏற்பட்டு பிறர் வந்து சமாதானப்படுத்த வேண்டிய தாயிற்று.

அவர் அவ்விதம் நினைத்தது உண்மை. அந்த உண்மையைக் கூறியது அவருக்கு எவ்வளவு துன்பத்தை உண்டு பண்ணியது என்பதைப் பாருங்கள்! அதற்குப் பதிலாக, 'நீங்களா? வேறு ஆள் என்றல்லவா நினைத்தேன்' என்று அவர் கூறியிருப்பின் அதுவும் உண்மைதான். ஆனால் அது அவருக்கு எவ்விதத் தீங்கும் செய்திருக்காதல்லவா?

அறிவு, மோர் என்றால் அதில் திரண்டுவரும் வெண்ணெய் தான் யுக்தி. சிலருக்கு மோர் செய்யத் தெரியாது. அதேபோன்று பலருக்குப் படிக்கவும் சிந்திக்கவும் தெரியுமேயன்றி அதனைத் கடைந்து வெண்ணெய் எடுக்கத் தெரியுமேயன்றி அவற்றை யுக்தியுடன் பயன்படுத்தி வெற்றி காணத் தெரியாது.

ஆடம் ஸ்மித் தம்முடைய உலகப் புகழ் பெற்ற நூலாகிய 'வெல்த் ஆஃப் நேஷன்ஸ்' என்பதில் உலகப் பொருளாதாரத்தைப் பற்றி விரிவாய் எடுத்துரைக்கிறார். ஆனால் அவருக்கோ தம்முடைய வீட்டின் வரவு செலவை ஒழுங்காக நிர்வகிக்கத் தெரியாது. மாபெரும் இசைப் புலவராகிய பீதோவனுக்கு இலௌகீகமே தெரியாது. ஆறு சாதாரணச் சட்டைகளும், ஆறு கைக்குட்டைகளும் தைப்பதற்குத் தையற்காரனிடம் முந்நூறு பவுன்களைக் கொடுத்தாராம் அவர்.

ஒரு பெரிய கல்விமான் முன் பசியாற இடியாப்பம் வைக்கப் பட்டபொழுது, 'இதன் தலைப்பு எங்கே இருக்கிறது' என்று கேட்டாராம் அவர்.

அரபு நாட்டில் பேரறிவு பெற்ற ஆசிரியர் ஒருவர் இருந்தார். ஒருநாள் அவரிடம் கல்வி பயின்று வந்த மாணவர்கள் ஓர் ஒட்டகத்தை அறுத்து அதன் தலையை, நாக்கைக் தங்களுக்கு வெட்டி எடுத்துக் கொண்டு தங்களின் ஆசிரியருக்கு சன்மானமாய் அளித்தனர்.

அவருடைய மனைவி அதனைக் கறிசெய்யத் துண்டு துண்டாக வெட்டும்பொழுது அதில் நாக்கில்லாததைக் கண்டதும் தம் கணவரிடம் கேட்டார், 'என்ன இதில் நாக்கைக் காணோமே? என்று. உடனே ஆசிரியர் தம் மாணவர்களிடம் சென்று. 'என்ன அதில் நாக்கில்லையாமே' என்று வினவினார். உடனே அவர்கள் ஒருமித்துக் கூறினர், 'ஒட்டகத்திற்கு நாக்கு ஏது?' என்று. இதைக் கேட்டதும் ஆசிரியர் தம் வீட்டிற்குச் சென்று, 'ஒட்டகத்திற்கு நாக்கு இல்லையாமே' என்று கூறினார்.

இவ்வாறு படிப்பாளிகளில் பலர் இலௌகீகம் அறியாத வர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் தங்களின் ஓர் ஆற்றலை அதிகமாக அபிவிருத்தி செய்து மற்ற ஆற்றல்களைச் செத்து மடியுமாறு செய்துவிடுகின்றனர். ஒரு காரியத்தில் தங்க ளுடைய மூளையைப் பயன்படுத்தி அதனை மற்றவர்கள் செய்ய இயலாதபடி மேலான முறையில் செய்து முடிக்கின் றனர். ஆனால், மற்றவர்களிலோ நகைப்பிற்கிடமாக நடந்து கொள்கின்றனர்;

அமெரிக்காவின் மிகப்பெரும் வழக்கறிஞரான டேனியல் வெப்ஸ்டர் தம்முடைய படிப்பறையில் அமர்ந்து படித்துக் கொண்டிருக்கும்பொழுது ஒரு கட்சிக்காரர் வந்து தம் வழக்கை நடத்த ஆயிரம் டாலர் கூலி கொடுத்தார். அடுத்த நாள் வெப்ஸ்டர் அப்பணத்தை அங்குமிங்கும் தேடிய பொழுது அதனை எங்கும் காணோம். பல்லாண்டுகள் கழிந்தபின் அவர் புத்தகம் ஒன்றை எடுத்துப்படிக்க விரிக்குங்கால் அதனுள் அந்த டாலர் நோட்டுகள் அழுக்குப்படியாது அப்படியே புதிதாகக் காணப்பட்டன.

அரசாங்கக் கருவூலகத்தில் புதிய தங்க நாணயங்களை வெளியிட்டிருக்கிறார்கள் என்பதை அறிந்ததும் அவர் தம்முடைய செயலாளரைக் கருவூலகத்திற்கு அனுப்பிப் பலநூறு டாலர்களுக்குஅந்தத் தங்க நாணயங்களை வாங்கி வருமாறு செய்தார். அவை வந்ததும் தம் ஜேபியில் போட்டச்

கொண்டார். அனால் பல நாட்கள் சென்று தம் ஜேபியில் கையை விட்டுப் பார்க்கும்பொழுது அதில் ஒன்றையும் காணோம். அந்த நாணயத்தின் அழகைப் பற்றி புகழந்துரைத்த தம்முடைய நண்பர்களுக்கு அதனை எடுத்துச் சன்மான மளித்துவிட்டது அப்பொழுதுதான் அவரின் நினைவிற்கு வந்தது.

ஒருகணிதப் பேராசிரியரை அவருடைய மனைவி கடைக்குச் சென்று காப்பிகொட்டை வாங்கி வருமாறு கூறினாள். அவரும் கடைக்குச் சென்றார். 'காப்பிகொட்டை எவ்வளவு வேண்டும்?' என்று கேட்டான் கடைக்காரன். அதைப் பற்றி என் மனைவி யாதொன்றும் கூறவில்லை. ஒரு புஷல் (அதாவது எட்டு காலன்) போதுமென்று நினைக் கிறேன்'' என்று கூறினாராம் அவர்.

பேராசிரியர் லெஸ்ஸிங் சிந்தனையில் மிதந்தவண்ணம் தம் வீட்டிற்குத் தரும்பிக் கதவைத்தட்டினார். இருட்டி விட்டதனால் சன்னல் வழியே பார்த்த வேலைக்காரனுக்கு அவரை இலக்குக் கண்டுபிடிக்க இயலவில்லை. எனவே யாரோ என்று நினைத்துக்கொண்டு 'பேராசிரியர் வெளியே சென்றிருக்கிறார்' என்றான் அவன். 'அப்படியா? பரவா யில்லை. நான் மற்றொரு தடவை வருகிறேன்' என்று கூறிச் சென்றுவிட்டார் லெஸ்ஸிங்.

ஒருநாள் ஸி.வி.ராமன் வகுப்பறைக்குள் நுழைந்ததும் பையன்களெல்லாம் அவரைப் பார்த்து சிரித்தனர். அதற்குக் காரணம் யாதென அவருக்கு விளங்கவில்லை. பிறகு கண்ணாடியின் அருகில் சென்றபொழுதுதான் தாம் ஒரு கன்னத்தை சவரம் செய்து மற்றொரு கன்னத்தில் சவுக்காரம் பூசிச்சவரம் பண்ணாது விட்டிருப்பது தெரியவந்தது.

ஒருசமயம் அவர் தம்முடைய பாட்டியை அழைத்து வரப் புகைவண்டி நிலையத்திற்குச் சென்றிருந்தார். வண்டி வந்தது. அதிலிருந்து அவருடைய பழைய நண்பரொருவர் இறங்கிய தும் ஸி.வி.ராமன் அவரை அன்புடன் வரவேற்று தம் காரில் வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிட்டார். வீடு சென்றதும்

வீட்டிலுள்ளோர், 'பாட்டி எங்கே!' என்று வினவிய பொழுதுதான் பாட்டி நினைவு அவருக்கு வந்தது.

அலிகர் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக இருந்த ஸியாவுத்தீன் அஹ்மது ஒருநாள் காட்டிற்குச் சென்று வேட்டையாடிவிட்டு ஆழந்த சிந்தனையுடன் வீடு திரும் பியவர் துப்பாக்கியை வைக்கும் ஸ்டாண்டில் துப்பாக்கியை வைப்பதற்கு பதிலாக தாம் போய் நின்று கொண்டு துப்பாக் கியை தரையில் ஊன்றிக் கையில் பிடித்தவண்ணம் இருந்தா ராம். இதை பார்த்து வீட்டிலுள்ளோர் சிரித்த போதுதான் அவருக்கு சுய உணர்வு ஏற்பட்டதாம்.

சிந்தனையில் ஆழ்ந்திருந்த நியூட்டன் கோழிமுட்டை என நினைத்து தம் கடிகாரத்தை அடுப்பிலிருந்த தண்ணீரில் போட்டு வேகவைத்ததை நீங்கள் அறிவீர்கள்.

ஓர் அறிஞர் சிந்தித்தவண்ணம் குதிரைமீது சவாரி செய்து கொண்டிருந்தார். குதிரை ஓரிடத்தில் கால்தவறிக் கீழே விழுந்து விட்டது. ஆனால் அந்த அறிஞருக்கு அது விழுந்த விஷயமே தெரியவில்லை. லகானைப் பிடித்தமாதிரியே கையை வைத்து கொண்டு வீடு வந்து சேர்ந்தார். வீடு வந்ததும், குதிரை எங்கே? என்று வீட்டிலுள்ளோர் கேட்டதும் தாம் இவரும் அவர்களைப் பார்த்து, 'குதிரை எங்கே?' என்று கூறிக்கொணடே அங்குமிங்கும் பார்த்தாராம்.

அறிவானது ஒருபோதும் யுக்தியுடன் போட்டியிட்டு அதனை வென்றுவிட முடியாது. அறிவுக்கு எதைச் செய்வது என்பது மட்டும் தெரியும். அனால் யுக்தியோ அதனை எவ்விதம் செய்வது என்பதையும் அறயும். அறிவாளிகள் சிந்தனை செய்கிறார்கள். ஆனால் யுக்தியுள்ளவர்களோ வெற்றிகரமாகச் செயலாற்றுகிறார்கள்.

''காமன்வெல்த் என்றால் என்னவென்று அறியாத பலர் நன்றாக அரசாட்சி செய்திருக்கிறார்கள். பூமியின் உருண்டை தன்மையை அறியாத பலர் பூமியின் பெரும்பாலான பாகத்தை

ஆட்சி செய்திருக்கின்றனர்'' என்று கூறுகின்றார் சர் தாமஸ் ப்ரெளன்.ஆம்; எழுத்து வாசனையற்ற அக்பரும், சார்லி மேனும் பெரும் பேரரசுகளைத் திறமையுடன் ஆட்சி செய்ய வில்லையா? படிப்பு இல்லாத வால்போல் இங்கிலாந்தின் முதலமைச்சராய் இருபத்தைந்து ஆண்டு காலம் இருக்க வில்லையா? கையெழுத்துப் போடத் தெரியாத பலர் லட்சோப லட்சமாகச் சம்பாதிக்கவில்லையா?

யுக்தியானது தவிர்க்க முடியாததற்குத் தலைசாய்த்து அதனையே தனக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்கிறது. அறிவானது தமக்குச்சிலவற்றைதாம் பெற்றுத்தரும். ஆனால் யுக்தியானது நமக்கு எல்லாவற்றையும் பெற்றுத் தந்து விடுகிறது. அதுவே எல்லா விடுகதைகளையும் அவிழ்த்து விடுகிறது. எல்லாத் துன்பங்களையும் வெற்றிக்கொண்டு விடுகிறது; எல்லாத் தடங்கல்களையும் அகற்றி விடுகிறது.

ஆனால் இந்தக் கட்டத்தில் வைத்துத்தான் நாம் யுக்திக்கும் குயுக்திக்கும் உள்ள வேறுபாட்டை அறிந்து கொள்ள வேண்டும். குறுகிய யுக்தியே குயுக்தி. நேர்மையுடன் செயலாற்றுவதே யுக்தி.நெறிதவறி, கோணல் புத்தியுடன் செயலாற்றுவதே குயுக்தி. யுக்தி விரும்பத் தக்கது. இரண்டும் பாமர மக்களுக்கு ஒன்றேபோல் தோற்றமளிக்கும். ஆனால் இரண்டுக்குமுள்ள வேறுபாடு, வெண்ணெய்க்கும் சுண்ணாம்புக்கு முள்ள வேறுபாடேயாகும்.

சர் தாமஸ் லிப்டன் தம்முடைய தேயிலையை எவ்விதம் விளம்பரப்படுத்தினார் தெரியுமா? பண நோட்டுக்கள் மாதிரி அச்சடித்து அவற்றைத் தெருக்களில் அங்குமிங்கும் வீசி எறியுமாறு செய்தார். அது வீசி எறியப்பட்டதும் மக்கள் முண்டிஅடித்துக் கொண்டு அதனை எடுக்க முற்பட்டனர். ஆனால் அதனை எடுத்ததும் அதில், ''லிப்டன் டீயை வாங்குங்கள்!'' என்ற சொற்கள் பொறிக்கப்ட்டிருப்பதைக் கண்ணுற்றார்கள். இவ்வாறு லிப்டன் தேயிலைக்கு எங்கும் விளம்பரம் ஏற்பட்டது.

ஒரு சிகரெட் கம்பெனியார் தங்களுடைய சிகரெட்டை பிரபல்யப்படுத்த என்ன அபூர்வமான யுக்தியைப் பின்பற்றி னார்கள் என்பதைப் பாருங்கள். லண்டனில் பூமியின் கீழே போக்குவரத்துப் பாதை இருக்கிறதல்லவா? அங்கு எங்கணும் 'புகை பிடிக்கக்கூடாது!' என்னும் சொற்கள் பொறிக்கப் பட்டிருக்கும். இப்படிப்பட்ட இடம்தான் தங்களின் சிகரெட் பற்றிய விளம்பரத்திற்கு ஏற்ற இடம் என்று அவர்கள் கண்டார்கள். எபபடி என்று நீங்களும் நானும் மூளையை உடைத்துக் கொள்ளலாம்.

ஆனால் அவர்கள் கையாண்ட முறையோ வெகுபுத்தி சாலித்தனமானது. வெகு இலகுவானது. 'புகை பிடிக்கக் கூடாது!' என்னும் அறிக்கையின் கீழே அவர்கள் எழுதியது இதுதான். 'அப்துல்லா சிகரெட்டைக் கூடப் புகைபிடிக் கக்கூடாது!' இதைப் பார்த்தும் 'சபாஷ்' என்று நீங்கள் உரத்துக் கூறுகிறீர்களல்லவா? யுக்தி எனறால் இப்படியல்லவா இருக்க வேண்டும்.

ரூஸ்வெலட் முதன் முதலில் அமெரிக்காவின்ஜனாதிபதி யானபோது அமெரிக்கா முழுவதும் பாங்குகள் முறிந்து விழுந்து மூடப்பட்டன. அதனால் நாட்டின் பொருளாதாரம் சீரழிந்துவிடும்போல தோன்றியது. இந்த நிலையை எவ்விதம் சமாளிப்பது? உடனே ரூஸ்வெல்ட் ஓர் அறிக்கை வெளி யிட்டார். 'அடுத்த உத்தரவு வரும்வரை எந்த பாங்கும் திறந்து வேலை செய்யக்கூடாது' என்று.

இதைப் பார்த்ததும் பொதுமக்கள், அரசாங்க உத்தர வின்மீதுதான் பாங்குகள் மூடப் பட்டிருக்கின்றன என்று நினைத்தனர். உடனே அவர் அவ்விஷயத்தில் தலையிட்டு பாங்குகளின் பொருளாதாரநிலையை ஒழுங்கு பண்ணி விட்டார். ஆனால் பாங்குகள் பொருளாதாரக் குறைவால் முறிந்து விழுந்த விஷயமே பொதுமக்களுக்குத் தெரியாமல் போய்விட்டது.

ஔரங்கசீபின் மகன் ஒருவன் தன்னுடைய தந்தையுடன் கோபித்துக் கொண்டு எதிரிகளின் பக்கத்தில் சேர்ந்து முகலாயப் பேரரசிற்கு விரோதமாக அவர்களுக்கு உதவி செய்து வந்தான். அவன் முகலாயப் பேரரசின் இராணுவ இரகசியங்களை எதிரிகளுக்கு எடுத்துரைத்து விட்டால் என் செய்வது? ஔரங்கசீபின் மூளை வேலை செய்யலாயிற்று.

உடனே ஒரு காகிதத்தை எடுத்துத் தம் மகனுக்கு எழுதினார். 'மகனே! நீ இவ்விதம் செய்யலாமா? எதிரிகளுக்கு உதவி செய்து முகலாயப் பேரரசைக் காட்டிக் கொடுக்கலாமா? உடனே இங்கு வந்து சேர்' என்றா? அவ்விதம் அறிவற்ற தனமாய் எழுதுபவர் ஔரங்கசீப்பா? அவர் எபதினார். 'மகனே! அவசரப்பட்டு வந்துவிடாதே! எதிரிகளுடன் மிகவும் அன்னியோனியமாகப் பழகி, அவர்களுடைய இராணுவ இரகசியங்கள் அத்தனையையும் விடாது அறிந்து கொண்டு வந்து சேர்' என்று.

இவ்விதம் கடிதம் எழுதிய ஔரங்கசீப், அந்தக் கடிதம் எதிரிகளின் கையில் சிக்குமாறு செய்துவிட்டார். பார்த்தார்கள் கடிதத்தை எதிரிகள். அவர்களுடைய கண்கள் சினத்தால் சிவந்தன. 'என்ன துரோகம்! என்ன துரோகம்!' என்று கூறிக் கொண்டே அவர்கள் தங்களின் பற்களை நெறு நெறுவெனக் கடித்தனர். 'அடுத்துக் கெடுக்க வந்த அயோக்கியப் பயலை அடித்து விரட்டுங்கள்!' என்று கூறி அவனை விரட்டியடித் தார்கள். ஔரங்கசீபின் யுக்தி எவ்வளவு பெரிய பலனை அளித்தது என்பதைப் பாருங்கள்!

சிவாஜி ஒரு சமயம் கதாப்பிரசங்கம் கேட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் வீற்றிருந்த இடத்தை எதிரிப் படைகள் நெருங்கி வருவது அவருக்குத் தெரிந்தது. அதைக் கண்டு அவர் கொஞ்சமேனும் அமைதி குலைய வில்லை. பக்கத்தில் இருந்த ஒருவனை அழைத்து முகத்தை மூடி முக்காடிட்டுக் கொண்டு பதுங்கிப் பதுங்கி ஓடுமாறு

கூறினார். அவன் ஓடியது தான் தாமதம். அவன் சிவாஜி எனக் கருதி எதிரிப் படைகள் அனைத்தும் அவனைத் துரத்திக் கொண்டு சென்றன. அதற்குள் அங்கிருந்து வேறு வழியாக கம்பி நீட்டிவிட்டார் சிவாஜி.

கொலம்பஸ் சிவப்பு இந்தியத் தலைவர்களைப் பார்த்து ''நாங்கள் பல வாரங்களாக உங்களின் மத்தியில் வாழந்து வருகிறோம். துவக்கத்தில் நீங்கள் எங்களை நண்பர்களாகக் கருதி நடந்தீர்கள். ஆனால் இப்பொழுதோ எங்கள்மீது பொறாமைப்பட்டு எங்களை விரட்டியடிக்க முயல்கிறீர்கள் முன்பெல்லாம் ஒவ்வொரு நாள் காலையிலும் எங்களுக்கு ஏராளமான உணவுப் பொருள்களை கொண்டு வந்தீர்கள். இப்பொழுது குறைவாகதான் கொண்டுவருகிறீர்கள். அது மட்டுமல்லாது ஒவ்வொரு நாளும் அதனுடைய அளவு குறைந்து கொண்டே வருகிறது. நீங்கள் எங்களிடம் முன்பு கூறிய அளவுப்படி பொருள்கள் அளிக்காததன் காரணமாக ஆண்டவன் உங்கள்மீது கோபமாக இருக்கிறான். அதைக் காட்டிக் கொள்ள இன்னகிழமை இத்தனை மணிக்கு சூரியனையே இருட்டாக ஆக்கிவிடப் போகிறான்'' என்று கூறினார்.

பஞ்சாங்கத்தைப் பார்த்து சூரிய கிரகணம் ஏற்படப் போவதை அறிந்த கொலம்பஸ் அதனைத் தமக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொள்ள இவ்வாறு கூறினார். ஆனால் சிவப்பு இந்தியர்களோ அவருடைய மொழியில் நம்பிக்கை கொள்ள வில்லை. நாளாக ஆக ஸ்பானியர்களுக்குக் கொடுக் கப்பட்ட உணவுப் பொருளின் அளவும் குறைந்து கொண்டு வந்தது.

குறிப்பிட்ட நாளில் கதிரவன் பேரொளியுடன் தோற்ற மளித்தான். இதைக் கண்டதும் சிவப்பு இந்தியர்கள் மகிழ்ச்சி யால் துள்ளிக் குதித்தனர். பொய் சொல்லி தங்களை ஏமாற்றி உறிஞ்சிக் கொண்டிருக்கும் ஸ்பானியர்களை விரட்டியடிக்கத் தீர்மானித்தார்கள் அவர்கள். ஆனால் சிறிது நேரத்திற்குள்

சூரியனின் ஒரு நுனியில் இருள் காணப்பட்டது. அது சிறிது சிறிதாகப் பெரிதாகி சூரியனையே விழுங்கி விட்டது. இதைப் பார்த்ததும் சிவப்பு இந்தியர்களுக்கு ஏற்பட்ட அச்சத்திற்கு அளவில்லை. ஓடோடிச்சென்று, 'காப்பாற்ற வேண்டும்' என்று கதறிக்கொண்டே கொலம்பஸின் காலில் விழுந்தனர். முடிந்தால் காப்பாற்றுவதாகக் கூறித் தம் கூடாரத்திறகுள் நுழைந்தார் கொலம்பஸ்.

கிரகணம் நீங்குகின்ற சமயத்தில் அவர் அதிலிருந்து வெளிவந்து, இறைவன் அவர்களை மன்னித்துவிட்டான் என்றும், சூரியனை விழுங்கிய பிசாசை விரட்டியடித்து விட்டானென்றும், இனிமேல் அவர்கள் ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டுமென்றும் சிவப்பு இந்தியர்களிடம் கூறினார். அவர்கள் அவ்விதமே செய்வதாக வாக்களித்தனர். கிரகணம் நீங்கிச் சூரியன் நன்றாக ஒளி வீசியதும் அவர்கள் மகிழ்ச்சியால் பாட்டுப் பாடிக்கொண்டு நாட்டியமாடத் துவங்கிவிட்டார்கள். அதன்பின் ஸ்பானியர்களுக்கு ஏராளமான பொருள்களைக் கொணர்ந்து காணிக்கையாகக் குவிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

இவ்வாறு, யுக்தியுள்ள மக்கள் எந்தச் சூழ்நிலையில் இருந்த போதிலும் வெற்றி காண்கிறார்கள். இந்த யுக்தி ஒவ்வொருவருக்கும் மிகவும் வேண்டற்பாலதாகும். இதனையே இராஜ தந்திரம் என்று கூறுவர். அரபிகள் இதனை 'ஹிக்மத்' என்று அழைப்பார்கள். இறைவனை, 'ஹக்கீம்' -யுக்தியுள்ளவன் என்றும் கூறுவார்கள். அறிவாளி ஆறு மாதங்களில் ஆற்றக்கூடிய வேலையை யுக்தியுள்ளவன் ஆறு நிமிடங்களில் ஆற்றிவிடுவான். அவ்விதமானால் யுக்தியின் பெருமையை நாம் எவ்விதம் புகழ்வது?



# 4. தனித்தன்மையுடன் செயலாற்றுக!

உலகில் தோன்றியிருக்கும் மக்கள் தலைவர்களெல்லாம் நூதனமாகச் செயலாற்றியவர்களேயாவர். அவர்களின் முன் பத்தாம் பசலிக் கொள்கைகளெல்லாம் பஞ்சாய்ப் பறந்து விடுகின்றன. பழையன என்பதற்காக அவர்கள் அவற்றை மதிப்பதில்லை. அவர்களின் ஒவ்வோர் அடியும் முன்னையதைவிட முன்னேற்றமேயன்றி பின்வாங்குதல் அல்ல.

அவர்கள் அடிமைகள் போன்று பிறரைப் பின் தொடர்ந்து செல்வதில்லை; வீரர்கள் போன்று தலைநிமிர்ந்து தனித்து முன்னேறிச் செல்கிறார்கள். அவர்கள் தங்களின் உள்ளே உள்ள ஒன்றின் கட்டளையைத் தலைமேற்றாங்கிச் செயலாற்றுகிறார்கள். அவர்கள் தாங்கள் எண்ணுவதையே பூரணமாக நம்புகிறார்கள். அவர்கள் பின்னால் ஒரு கூட்டம் நின்று அவர்களைத் தாங்கி நிற்காதபோதினும் அவர்கள் தனித்து எண்ணுகிறார்கள்; செயலாற்றுகிறார்கள்.

மற்றவர்கள் செல்லவோ, செயலாற்றவோ செய்யாத புது துறைகளில் எல்லாம் துணிந்து செல்லவோ, செயலாற்றவோ செய்கிறார்கள். அவர்கள் தாங்களாகவே இருக்க; பயப்படாது செயலாற்றித் தங்களின் பெயரை உலக வரலாற்றில் பதித்து விடுகிறார்கள். அதன்பின் அவர்களை உலகம் முழுவதும் வியப்புக் கண்கொண்டு பார்க்கிறது.

துவக்கத்திலிருந்தே மார்ஷல் ஃபீல்ட் தம்முடைய வணிக நிலையத்திற்கு மனிதர்கள் வந்தால் அங்குத் தாங்கள் முன்பு பார்க்காத நூதனங்களைப் பார்க்க வேண்டுமென்றும், தனித்தன்மை இறங்கிக் கொண்டிருப்பதைக் கவனிக்க வேண்டுமென்றும் தீர்மானித்தார். தாம் செய்யும் எந்த செயலிலும் தனித்தன்மை பிரதிபலிக்க வேண்டுமென்றும் விரும்பினார். அவர் தம்முடைய திட்டத்தை தாமே வகுத்தார். தம்முடைய அறிவின்மீது நம்பிக்கை கொள்ள அவர் ஒருநாளும் தயங்கியதில்லை. அவர் ஒரு பிறவித் தலைவராதலின் தம்முடைய பாதையைத் தாமே வகுத்துக் கொண்டு செல்லவும், மற்றவர்கள் எட்டிப் பிடிக்காத சிகரங்களைத் தாமே எட்டிப் பிடிக்கவும் அஞ்சவில்லை.

இவ்வாறு உலகில் மேலானபதவியை அடைந்தவர்களெல்லாம் தாங்களாகவே இருந்தனரேயன்றி பிறருடைய மாணவர்களாக இருந்ததில்லை. அவர்களுடைய குருவும் சீடனும் அவர்களேதாம். ஏ.டி.ஸ்டூவர்ட் அமெரிக்காவின் வியாபார மன்னராக இருந்தார் என்பதற்காக ஜான்வானாமேக்கர் அவரைப் பின்பற்றுபவராக இருக்கவில்லை, இருவரும் ஒரேவிதமான வாணிபம் செய்தபோதினும் ஒவ்வொருவருடைய வாணிப முறையும் வெவ்வேறு விதமாக இருந்தது. இருவரும் அமெரிக்க வாணிப வானில் சுடர் விட்டொளிரும் தாரகைளாக விளங்கினர்.

பெரிய மனிதர்கள் ஒருவரையொருவர் 'காப்பி' அடிப்பதே கிடையாது. காந்தியடிகளைப் பார்த்து ஜின்னா 'காப்பி' அடிக்கவுமில்லை. ஜின்னானவைப் பார்த்து காந்தியடிகள் காப்பி அடிக்கவுமில்லை. இருவருடைய செயல்முறைகளும் வெவ்வேறுவிதமாக இருந்தன. எனினும் அவை இருவருக்கும் வெற்றிப் பழங்களைச் சொரியாமல் இல்லை.

எவனுடைய வேலையில் பிறர் ஒளிந்து கொண்டிருக்க நாம் காணவில்லையோ அவனே உண்மையான பெரிய

மனிதன். தன்னில் பொதிந்து கிடப்பவையேயன்றி பிறரில் பொதிந்து கிடப்பவை அவன் செய்யும் வேலையிலே, எழுதும் எழுத்திலே, தீட்டும் ஓவியத்திலே, ஆற்றும் சொற்பொழிவிலே பரிணமிக்கவில்லையோ அவனே உண்மையான பெரிய மனிதன். அவனையே உலகம் வரவேற்று மதிக்கிறது.

ஜெனரல் கிராண்ட் பின்பற்றிய போர்முறையானது அவருக்கே உரியதாகும், போர்க்கலை நூல்களில் கண்ட முறைகளில் ஒன்றைக்கூட அவர் பின்பற்றவில்லை.அதற்காக அவருடைய தளபதிகளெல்லாம் அவரைக் குறை கூறினர். அவ்விதமானால் அவர் யாரைப் பின்பற்றினார். எதனைச் செயலாற்றினார்? தம்மைத்தான்; தம்முடைய திட்டங் களைத்தாம். நெப்போலியன் ஐரோப்பா முழுவதும் சூறாவளி போன்று படை நடத்தியபொழுது முந்தைய போர்முறை களையெல்லாம் உதறித் தள்ளி தமக்கே தாம் திட்டம் வகுத்துச் செயலாற்றினார்.

இவ்வாறு ஆற்றலும் முற்போக்கும் உள்வர்கள் முந்தைய வற்றயைல்லாம் உதறித்தள்ளி, தனித்துச் சிந்தனை செய்து செயலாற்றுகிறார்கள். ஆனால் வலுவின்மையும் பிற்போக்குத் தன்மையும் உள்ளவர்கள் அவற்றை உதறித்தள்ள அஞ்சி, செம்மறி ஆடு போன்று அவற்றை எழுத்துப் பிசகாது பின்பற்றிச் செல்கின்றனர்.

பழைய பத்தாம்பசலிக் கொள்கைகளால் கட்டுண்டு செயலாற்றியவர்களும், வழக்கத்தை மீறக்கூடாதென்று தம்மையே தாம் பந்தப்படுத்திக் கொண்டவர்களும், மீறினால் பிறரின் வெறுப்புக்கு ஆளாக நேரிடுமோ என்று பயந்து நடுங்கியவர்களும் இன்று மறக்கப்பட்டு விட்டார்கள்.

தியோடர் ரூஸ்வெல்ட் எபபொழுதும்-போலீஸ் கமிஷன ராயிருக்கும்போதும், கவர்னராயிருக்கும்போதும், உதவி ஜனாதிபதியாயிருக்கும் போதும் -தனித்தன்மையுடன்

விளங்கினார். பழைய பழக்க வழக்கங்கள் நம்மை கட்டுப் படுத்த அவர் ஒரு போதும் அனுமதிக்கவில்லை. அவர் அவராகவே வாழ்ந்தார்; அவராகவே செயலாற்றினார். அதன் காரணமாகவே அவருடைய ஆற்றல்களெல்லாம் முழு வளர்ச்சியடைந்து பெரும் பலனைச் சொரிந்தன.

சில புத்தகங்கள் தனித்தன்மையுடன் விளங்கக் காரணம், அவை பிறருடைய எதிரொலியாய் இராததுதான். அதனால் அவை இதயத்தைத் தொடுகின்றன; அறவுக்கு விருந்தளிக் கின்றன. இறவாத் தன்மையுடன் வாழ்கின்றன! காலமானது அவற்றின் பெருமையை மங்கச் செய்யவில்லை; பெருகச் செய்கிறது.

மக்களில் பெரும்பாலோர் தங்களின் வாழ்நாள் முழுதும் சித்திரக்குள்ளர்களாகவே வாழக்கை நடத்துகிறார்கள். அவர்கள் ஒரு போதும் பெருமனிதர்களாவதில்லை. காரணம், தங்களாகவே இருக்க அவர்களுக்குத் துணிவு இல்லாததுதான். முதலில் முன்னுக்குப் பாய்ந்து செயலாற்ற அவர்களுக்குத் தொடை நடுங்குவதனால் அவர்கள் தங்களுடைய அறிவைப் பயன்படுத்தாது அதனை ஸ்தம்பிக்கச் செய்துவிடுகிறார்கள் தங்களை நம்பாது பிறரை நம்புகிறார்கள்; பிறரிடம் ஆலோசனை கேட்க ஓடுகிறார்கள்; பிறர் நடந்த தடத்திலேயே தாங்களும் அடியெடுத்து வைக்கிறார்கள்.

எவன் கும்பலிலிருந்து வெளியாகி முந்தையதைக் கண் மூடித்தனமாகப் பின்பற்றாது தனித்தன்மையுடன் சிந்தித்துச் செயலாற்றுகிறானோ அவனை--அந்த ஒருமனிதனை- பல்லாயிரக்கணக்கான மக்கள் பின் தொடர்ந்து செல்கிறார்கள். அவனே இறுதி வெற்றி அடைகிறான். இது உலகறிந்த உண்மையாகும்.

உலகம் கனவு காண்பவர்களுக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறது. 'கனவுகளைக் கனவு காண்பவர்' என்று

அமெரிக்க அறிஞர் எமர்ஸன் கூறப்பட்டார். காரணம் என்ன? முன்னோர் மனத்திற்கு எட்டாத புதிய கருத்துக்களை அவர் வெளியிட்டதுதான். புதிய கருத்துக்களின் தந்தையாய் அவர் விளங்கினார். அவருடைய புதிய கருத்துக்கள் அமெரிக்க மக்களைப் புது மனிதர்களாய் ஆக்கியது எனலாம்.

உலக வரலாற்றிலிருந்து கனவு காண்பவர்களை நீக்கி விடுங்கள்! அதன்பின் அதனை ஏறிட்டுப் பார்ப்பவர் யார்? உலக நாகரிகத்தின் ஆணிவேர் அந்தக்கனவு காண்பவர்கள் தாம். அவர்கள் தாம் மனிதவர்க்கத்தின் பாதுகாவலர்கள். நெற்றி வியர்வை நிலத்தில் விழ, கூனியமுதுகுடன் புது வழிகளை வகுத்துத் துணிவுடன் முன்சென்ற அவர்கள் ஊழிகாலம் வரை மனிதவர்க்கம் செல்லக்கூடிய மகத்தான ராஜபாட்டையை உண்டுபண்ணியவர்களாவார்கள்.

நம்முடைய வாழ்வை வாழ்வதற்கேற்றதாய் ஆக்கியிருப்பது அந்தக் கனவு காண்பவர்களின் கனவுகள்தாம். இன்றைய உலகம் முன்பு அவர்கள் கண்ட கனவுகளின் பலன்தான். கப்பல்கள், விமானங்கள், பாலங்கள், பல்கலைகழகங்கள், நூல் நிலையங்கள், நகரங்கள், ரஸாயனக் கண்டுபிடிப்புகள் கலைச் செல்வங்கள், நாம் அனுபவிக்கும் சௌகரியங்கள் வசதிகள் ஆகியவைகள் எல்லாம் அவர்கள் ஒரு காலத்தில் மற்றவர்களை விட்டுத் தனிப்பட்டு பிரிந்து கண்ட கனவுகளின் பலன்கள்தாம்.

தங்களுடைய அடிச்சுவடுகளைப் பூமியின்மீதும் தலையை வானிலுள்ள நட்சத்திரத்தின் மிதும் வைத்திருக்கின்ற அவர்கள் அனுபவ சாத்தியமற்ற வீண் எண்ணம் எண்ணிச் செயலாற்றுகிறவர்கள் என்று ஒரு காலத்தில் கருதப்பட்டனர். ஆனால் அந்தக் கனவு காண்பவர்கள் மட்டும் தோன்றியிராவிட்டால் உலகில் நாகரிகம் என்பது ஏது?

இன்று விமானத்தில் பறந்து கொண்டிருக்கும் நாம் கால்நடையாகவே பிராயணம் செய்து கொண்டிருப்போம்.

இன்று வானளாவும் மாளிகைகளில் வாழந்து உலகின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் நடப்பவற்றை 'டெலிவிஷன்' (தொலைக்காட்சி) மூலம் நேரடியாய்ப் பார்க்கவும் கேட்கவும் சக்தி பெற்ற நாம், மலைக் குகைக்குள் வாழ்ந்து அதற்கு முன்னாலுள்ள மரம், செடிகளைப் பார்த்துக் கொண்டிருப்போம்.

சாதாரணத் தன்மை என்னும் சாபத்திற்குட்பட்டு தன் மூக்குக்கப்பால் பார்க்க இயலாதவன் அதைச் செய்ய முடியாது என்று கூறுகிறான். ஆனால் அசாதாரணத் தன்மை பெற்று அடிவானத்திற்கு அப்பாலும் பார்க்கும் ஆற்றல் பெற்றவன் அதைச் செய்யமுடியும். அதைச் செய்துதான் தீரவேண்டும் என்று சொல்கிறான். அவனுடைய கனவுகள், கண்டுபிடிப்புகள் ஆகியவை எல்லாம் மனித இனத்திற்கு நன்மை பயக்கும் வகையில் அனுபவ சாத்தியமாக்கப்டும் வரையில் எண்ணத் தொலையாத் துன்பங்களை அனுபவித்து, சாதித்து வெற்றி மாலை சூடுகிறான்.

கொலம்பஸை ஐரோப்பா முழுதும் எள்ளி நகையாடியது. அவர் தெருவில் செல்லும்போது சிறுவர்கள் தங்களின் முன்னந்தலையைத் தொட்டுக் காண்பித்து அவரைப் 'பைத்தியக்காரன்' என்று கேலி பண்ணினர். உலகம் தட்டை என்று உலகினரெல்லாம் கருதிக் கொண்டிருக்கும் பொழுது உலகம் உருண்டை என்று துணிவுடன் கூறி மாபெரும் கடலைக் கிழித்துக் கப்பலைச் செலுத்திய மாமனிதராவார் அவர். அவரது தனித்தன்மை எவ்வளவு பலனைப் பெற்றுத் தந்தது என்பதை பாருங்கள்!

சாதாரணத் தன்மை என்னும் சாபத்திற்குட்பட்டு பிறர் வகுத்த வழியிலே அடியெடுத்து வைத்த கோடானு கோடி மக்கள், எடிஸன், பெல் மார்கோனி ஆகியவர்கள் உலக நாகரிகத்திற்குச் செய்ததில் கோடியில் ஒரு பகுதியையாவது செய்திருப்பார்களா? மார்க்கோனி ரேடியோவைப் பற்றி எடுத்துரைத்தும் அவருடைய நண்பர்கள் அவருக்குப்

பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று கருதி ஆஸ்பத்திரிக்கு இழுத்துச் சென்று அவருடைய மூளையை பரிசோதித்தனராம். லெனினை, ஹெச்.ஜி. வெலஸ் 'கிரெம்ளினிலே கனவு காண்பவர்' என்று கூறினார். அவர் கண்ட கனவுதான் இன்று உலகம் முழுவதும் பரவி வருகிறது.

நம் நாட்டுத் தலைவர்களான கோகலே, காந்தியடிகள் ஆகியோர் கனவு கண்டிராவிட்டால் இன்றைய நம்முடைய நிலை எண்ணவாயிருந்திருக்கும் என்பதை சிந்தித்துப் பாருங்கள்! செயல் வீரர்கள் என்றால் யார்? வருங்காலத்தைத் தங்களின் கழுகுப் பார்வையால் கண்டு செயலாற்றுகின்ற வர்கள் தாம்; இப்பொழுது மனிதனைத் தடைப்படுத்தி நிற்கும் தளைகள் மூடப்பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை உடைத் தெறிந்து முன்னேறி வரும் நூதன மனிதனைத் தங்களின் மனக்கண் முன் பார்க்கிறவர்களதாம்; மனித இனத்தின் நற்காலத்தைத் தங்களின் தூரப்பார்வையால் கண்டவர்கள் தாம்.

மனித இனத்தைக் காட்டுமிராண்டித்தனத்திலிருந்து விடுதலை செய்து முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்லும் தங்களின் கனவைப் பலிதமாக்குவதற்காக அவர்கள் எவ்வளவு துயரங்களை அனுபவித்திருக்கின்றனர்! எத்தனை சிறைகளில் உழன்றிருக்கின்றனர்!

நம்முடைய கனவுகள் நம்மைக் கண்டு நகைக்கவில்லை வருங்காலத்தின் முன்னறிவிப்புகளும் பின் நிகழ்ச்சிகளின் நிழல்களும் அவைதாம். வானில் எழுப்பப்படும் கோட்டைக ளாகிய அவை விரைவில் பூமியில் வந்து அமர்ந்துவிடும் எனபதில் ஐயமில்லை. வானில் பறக்கும் பருந்தானது பூமியில் வந்து அமர்ந்துதானே ஆக வேண்டும். ஆனால் சிலர் வானில் பறந்து கொண்டே இருந்து மடிந்து விடுகின்றனர். அவர்களுக் குப் பூமியில் வந்து தங்கும் எண்ணமே ஏற்படுவதில்லை. அவர்களைக் கண்டு நாம் எபபடி வருந்தாமலிருக்க முடியும்.

நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்துவந்த ஏழையாகிய ஜார்ஜ் ஸ்டீவன்ஸன் கட்டை மாட்டு வண்டியைக் கொண்டும், குதிரை வண்டியைக் கொண்டும் திருப்தியடைந்து விடவில்லை. நிலக்கரிச் சுரங்கத்தில் நாள் ஒன்றிற்கு ஆறு பென்ஸ் சம்பாதித்துக் கொண்டும், அதற்குமேல் சிறிது வருவாயைப் பெறுவதற்காகத் தம்முடைய நண்பர்களின் கிழிந்த துணிகளைத் தைத்துக்கொண்டும், அந்த மேல் வருவாயைக் கொண்டு இரவுப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டும் கண் குருடான தம்முடைய தந்தையைப் பாதுகாத்துக் கொண்டுமிருந்த அவர், நீராவி இயந்திரத்தைப் பற்றி கனவு கண்டார்.

'பைத்தியக்காரன்' என்று எல்லோரும் அவரைப் பரிகசித்தனர். பயங்கரமான சப்தம் செய்யும் அந்த இயந்திரம் நெருப்பு கங்குகளைத் தூக்கி எறிந்து வீடுகளைப் பொசுக்கி விடும் என்று எல்லோரும் ஏகமானதாகக் கூறினர். அதிலிருந்து வரும் புகை காற்றையே நஞ்சாக்கிவிடும் என்றும் அதனால் குதிரை வண்டிக்காரர்களுக்கு வேலை இல்லாமல் போய்விடும் என்றும் கூப்பாடு போட்டனர்.

அவரைப் பார்லிமெண்டுக்குக் கூட்டிவந்து குறுக்குக் கேள்வி கேட்டபொழுது, ''நீராவி இயந்திரம் குதிரையைவிட இரண்டு மடங்கு அதிகமாகச் செல்லும் என்று கூறப்பட்டால் அதைவிட அபத்தமான பேச்சு வேறு உண்டா? என்று கேட்டாராம் ஓர் உறுப்பினர். ''அதனை மணிக்கு எட்டு அல்லது ஒன்பது மைலுக்கு அதிகமாகச் செல்ல அனுமதிக்கக் கூடாது'' என்று கூறினார் மற்றொரு உறுப்பினர் ''அதாவது அவ்வளவு வேகத்தில் செல்வதாவது? அது அவ்விதம் சென்றால் அதனை என்னுடைய காலைச் சாப்பாடாக அருந்தி விடுகிறேன்.'' என்று இடக்குப் பேசினார் ஓர் அதிகாரி. இவ்வாறு கூறி ஸ்டீவன்ஸனைப் பார்த்து நகைத்தனர் பலர் ஆனால் இன்று நாம் அவர்களைப் பார்த்து நகையாடுகிறோமல்லவா?

1907-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 4-ம் தேதி ராபர்ட் கல்ட்டனின் நூற்றாண்டு விழா நியூயார்க் நகரில் வெகு கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. அப்பொழுது அவரை புகழாதார் யாருமில்லை. ஆனால் ஒரு நூற்றாண்டுக்கு முன் அதாவது 1807-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 1-ஆம் தேதி மாலை அவர் கட்டிய 'க்ளர்மண்ட்' என்ற நீராவிக் கப்பல் ஹட்ஸன் நதியில் செலுத்தப்படுவதைப் பார்க்கக் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள் அவரைப் பைத்தியக்காரர் என்று நகையாடிக் கொண்டிருந்தனர்!

தம்முடைய பணத்தையும் நேரத்தையும் அவர் அந்த நீராவிக் கப்பலில் செலவழித்ததைக் கண்டு, அவரைவிட முட்டாள் வேறு உண்டா;'' என்று கேட்டவர் பலர். ''ஹட்ஸன் நதி நீரோட்டத்தை எதிர்த்துப் பாய்மரமின்றிக் கப்பல் செலுத்துவதாம். என்ன வேடிக்கை இது!'' என்றனர் பலர். மீன்பிடித் தோணிக்காரர்களெல்லாம் பயப்பட்டு கரைக்கு ஓடி வந்துவிட்டனர்.

ஆனால் 'பைத்தியக்காரர்' என்று கூறப்பட்ட அவருடைய தனித்த முயற்சியானது அன்றைய தினம் வெற்றி பெற்று இன்றைய வரையிலும் மக்களுக்கு எண்ணற்ற நன்மைகளைச் செய்து வருவதைப் பாருங்கள்!

மோர்ஸ் தந்தியை கண்டுபிடித்ததும் வாஷிங்டனிலிருந்து பால்டிமோர் வரைத் தந்திக்கம்பிகள் நாட்டி அதனைச் சோதித்துப் பார்க்கச் சில ஆயிரம் டாலர்கள் உதவி செய்யுமாறு அமெரிக்க காங்கிரசை கேட்டபொழுது காங்கிரஸ் உறுப்பினர்கள் அவரை எள்ளி நகையாடினர். எவ்வளவோ ஏமாற்றத்திற்குப் பிறகு தந்திக் கம்பிகள் போடப்பட்டு முடிந்ததும் அதன் மூலம் பால்டிமோரிலிருந்து செய்தி வருவதைக் கேட்க காங்கிரஸ் உறுப்பினர்கள் காத்திருந்த பொழுது, அது வரச் சிறிது தாமதித்ததும் அவர்களில் ஒருவர், ''எவ்வளவு பெரிய பொட்டலத்தில் செய்திகள் தந்திக் கம்பிகள் மூலம் வந்து சேரும்?'' என்று கேலியாகக் கேட்டார்.

அவர் சொல்லி வாய் மூடியதுதான் தாமதம்- கடகட வென்று தந்தி அடிக்க ஆரம்பித்து விட்டது. பால்டிமோரி லிருந்து வந்த தந்திச் செய்தியை வாஷிங்டனிலுள்ளோர் அறிந்துவிட்டார்கள். அவ்வளவுதான்; ஏளனச் சொற்க ளெல்லாம் புகழ்மாரியாக மாறிவிட்டன.

ஸைரஸ் டிபிள்யு ஃபீல்ட் கடல் தந்தியைப் பற்றி கனவு கண்டு செயலாற்றியபோது அவரை முட்டாள் என்று கூறாதார் ஒருவருமில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பாகத்தில் வில்லியம் மோட்டாச் லண்டன் நகருக்கு நிலக்கரி காற்றால் தீப மேற்றக் கனவு கண்டபொழுது ஆங்கில இலக்கிய மேதை சர் வால்டர் ஸ்கார்ட் கூட 'புகையால் லண்டனில் விளக்கேற்று வதாம்' என்று நையாண்டி பண்ணினார். 'திரிஇல்லாமல் விளக்கு எவ்விதம் எரியும்?' என்றனர் பலர். ஆனால் அது எரிந்ததும் அவர்களின் குருட்டுக் கண்களும் வெளிச்சம் பெறலாயின.

ரப்பர் மரத்திலிருந்து வடியும் பாலைப் பயன்படுத்த சார்லஸ் குட்இயர் பதினோரு ஆண்டுகளாய்ச் செய்த முயற்சி கொஞ்சமல்ல. கடன் செலுத்த முடியாது அவர் சிறை வாய்ப்பட்ட போதும், தமது துணிமணிகளையும் தம் மனைவி மக்களின் நகைகளையும் விற்று அவர் தம் குழந்தைகளைக் காப்பாற்ற நேர்ந்தபோதும், ஒரு குழந்தை இறந்தபோது அதைப் புதைக்கக் கையில் காசில்லாத அவல நிலை ஏற்பட்ட போதும் அவருடைய அண்டைஅயலார்கள் அவரைப் பைத்தியக்காரன் என்று கூறியபோதும் அவர் தம்மையே பூரணமாய் நம்பித் தனித்து நின்று செயலாற்றினார்:

அதன் பலன் என்ன! இன்று எண்ணிலடங்கா வேலைகளுக்கு ரப்பர் பயன்படுகிறது. நாம் செல்லும் கார்கூட 'குட் இயர் டயரி' னால் தான் ஓடுகிறது.

உலகம் தோன்றியது முதல் இலியாஸ் ஹோ தையல் மெஷினை கண்டுபிடிக்கும் வரை மக்கள் கையிலே ஊசியை வைத்துத்தான் தைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் விரைவில் துணியைத் தைப்பதற்கான வழி இல்லையா என்று யோசித்த இலியாஸ் ஹோவுக்குத் தையல் மெஷின் பற்றிய எண்ணம் உதித்தது.

அத்துறையில் அவர் தனித்துத் துணிவுடன் சென்றார்; அந்த எண்ணத்தை உருவாக்கிச் செயலாற்றக் கையில் பணமில்லை. பின்பு அவருடைய பள்ளி நண்பராகிய ஜார்ஜ் பிஷ்ஷர் என்பவர் அவருடைய குடும்பத்தை வைத்துக் காக்கவும், அவருக்கு அவருடைய ஆராய்ச்சியை நடத்தவும் நூறு பவுன் உதவி செய்ய முன்வந்தார்.

அந்த முயற்சி வெற்றியடையின் பிஷ்ஷர் செய்யும் உதவிக்குப் பதிலாய் அவருடைய ஆராய்ச்சியின் அறுவடையிலிருந்து கிடைக்கும் பலனில் பாதியை பிஷ்ஷருக்குக் கொடுத்து வருவதாகக் கூறினார் இலியாஸ்.

1845-ஆம் ஆண்டு மே மாதம் தையல் மெஷின் கண்டு பிடிக்கப்பட்டது. முதன் முதலில் இலியாஸ் தம்முடைய மெஷினில் தமக்கும் பிஷ்ஷருக்கும் இரண்டு சட்டைகள் தைதத்தார். இவ்வாறுதான் தையல் மெஷின் முதன் முதலில் உலகைக் கண்டது.

மக்கள் சௌகரியமாய்ப் படுத்துக் கொண்டு வசதியுடன் பிரயாணம் செய்யும் கார்களை உற்பத்தி செய்ய விரும்பிய புல்மென் சுமார் எண்ணாயிரம் பவுன்கள் செலவழித்து இரண்டு கார்கள் செய்யும் வேலையில் தைரியமாய் ஈடுபட்டார். இதைக்கண்டு எல்லோரும் நகையாடினர்.

ஆனால் புல்மென், 'எந்த வாகனம் பிராயணத்தில் அலுப்பைத் தரவில்லையோ அதை மக்கள் விரும்புவர்' என்று நம்பினார். அவர் நம்பிய படியே மக்களும் விரும்பினர். இன்று

புல்மென்னின் 'உல்லாசத் தூங்கும் கார்கள்' உலகப் பிரசித்தியாயிருக்கின்றன.

ஜென்னர், அம்மையைத் தடுப்பதற்கு அம்மைப்பால் வைக்கும் முறையைக் கூறியதும் அவருடைய சக மாணவர்கள் எல்லோரும் அவர்கள் இவ்விதம் தவறான கொள்கையைக் கொண்டிருப்பதற்காக அவரைப் பள்ளிக் கூடத்திலிருந்து விரட்டி விடுவதாய்ப் பயமுறுத்தினர். அவர் மூன்று முறைகள் தம்முடைய தோளிலேயே அம்மைப்பால் வைத்துப் பரிசோதனை நடத்தினார். அது சரியானது என்று தம் மனத்திற்குத் திருப்தி ஏற்படும் வரையில் அதாவது மூன்றாண்டு வரையில் அவர் பரிசோதனையை விடவில்லை.

அம்மை குத்தப்பட்ட குழந்தைகளுக்கு மாடு போன்ற முகம் ஏற்பட்டடு விட்டதென்றும், கொம்பு முளைப்பதற்கான அறிகுறி போன்று கட்டிகள் கிளம்பிக் கொண்டு வருகின்றன வென்றும், அவர்களுடைய தொனியெல்லாம் மாட்டுச் சத்தம் போல் ஆகிவிட்டதென்றும் கதைகள் கட்டிவிடப்பட்டன. முதலில் அம்மை குத்திக் கொண்டவர்கள் கல்லால் எறியப் பட்டுத் தெருவிலிருந்து விரட்டியடிக்கப்பட்டார்கள். ஆனால் பின்பு அவருடைய முறை உலகம் முழுவதும் கையாளப் பட்டு இன்று உலகையே அம்மையின் கொடும்பிடியிலிருந்து காப்பாற்றிவிட்டது.

இவ்வாறு தனித் தன்மையுடன் செயலாற்றுகிறவர் களுக்கெல்லாம் ஆரம்பத்தில் ஒரே ஒரு மாணவன்தான் கிடைத்தான். அவர் யார் எனில் அவர்களேதாம்.

குடிசையில் வாழ்ந்து கொண்டிருந்தவர்கள் செய்த தனித் தன்மை வாய்ந்த சிந்தனையின் பலன் இன்று நாம் வசிக்கும் வீடுகள். குதிரை வண்டியில் சென்று கொண்டிருந்த ஹென்றி ஃபோர்டின் தனித்தன்மை வாய்ந்த சிந்தனையின் பலன் இன்று நாம் செல்லும் கார்கள்.

இவ்வாறு தனித்தன்மையுடன் சிந்தித்துச் செயலாற்று கின்றவர்களுக்குக் கற்சுவர்களும் ஒரு சிறையை உண்டு பண்ணா. ஏனெனில் அவர்கள் தங்களின் சிந்தனையிலேயே இன்பம் காண்கிறார்கள். இதைப் பற்றி லெனினைக்கேளுங்கள்.

''சைபீரியாவில் நான் வனவாசம் செய்தபொழுது என்னுடைய நண்பர்களுடைய கடிதங்களும், நான் என்னு டைய வருங்காலத்தைப் பற்றி கண்ட கனவுகளும்தான் மகிழ்ச்சியையும் ஊக்கத்தையும் உண்டு பண்ணி வந்தன'' என்று கூறுகிறார். அவருடைய ஆசை என்னும் திசைக் காட்டும் கருவி வெற்றிபுரியின் திக்கையே எப்பொழுதும் காட்டி வந்தது.

எவரைக் கண்டதும் நம்மை அறியாமலேயே நாம் அவருக்கு மரியாதை செய்து வானளாவிய மலையின் அடிவாரத்திலே நாம் நிற்பது போன்ற உணர்ச்சியைப் பெறுகிறோமோ, எவரைப் பார்த்ததும் நாம் முன்பு பார்த்த எவரையும் அவர் நினைவுபடுத்தவில்லையோ, அவரே உண்மையான தனித் தன்மை வாய்ந்த மனிதர். நீங்களும் நானும் மற்றவர்கள் போன்று நாம் இல்லாமலிருப்பது நமது பெரிய துரதிர்ஷ்டம் என்று எண்ணிக் கொண்டிருக் கும்பொழுது, தாம் தனித்தன்மையுடன் விளங்குவது தமது பெரும் பாக்கியம் என்று அவர் கருதுகிறார்.

இன்று உலகம் விரும்புவது தனித் தன்மையுடன் சிந்தித்துச் செயலாற்றுகின்றவர்களையேயன்றி பிறருடைய சிநந்தனையைச் செயலாற்றும் மனித இயந்திரங்களையல்ல. தனக்கு முன் சென்றவர்கள் பின்பற்றிய முறையினின்றும் விலகி நூதனமான--மேலான முறையில் சிகிச்சை செய்யும் மருத்துவனும், தனித்தன்மையுடன் கூடிய சிறந்த முறையில் வாதாடுகின்ற வழக்கறிஞனும், புதுக்கருத்துக்களையும், எண்ணங்களையும் புத்தகங்களிலிருந்தல்ல- வாழக்கையி லிருந்து எடுத்து மக்களின் உள்ளத்தில் புகுத்தி அவர்களை

வாழ்விக்க வந்த எழுத்தாளனும் இன்று வெற்றி சிகரத்தின் மீது விறுவிறுவென்று ஏறிக் கொண்டிருக்கிறார்கள்.

உங்களை வெற்றிபுரிக்கு அழைத்துச் செல்லும் சக்தியானது உங்களுக்குள்ளே, உங்களுடைய வைராக்கியத் திற்குள்ளே, உங்களுடைய தீர்மானத்திற்குள்ளே உங்களு டைய ஒழுக்கத்திற்குள்ளே பொதிந்து கிடக்கிறது. எனவே உங்களுடைய எண்ணங்களைக் கண்டு நீங்களே பயந்துவிடாதீர்கள்! உங்களை நம்புகள்! உங்களுடைய மனிதத் தன்மையை நிலைநாட்டுங்கள்!

சார்லஸ் டௌனைத் தான் கைப்பற்றாததற்கு அட்மிரல் பர்ராகட்டிடம் அட்மிரல் ட்யூபாண்ட் ஏதோ நோண்டிச் சாக்குகளைக் கூறியபொழுது அட்மிரல் பர்ராகட், ''அதற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது. அதை நீர் என்னிடம் கூறவில்லை. அது என்னவெனில், அதைக் கைப்பற்ற உம்மால் முடியுமென்று நீர் உம்மையே நம்பவில்லை எனபதாகும்'' என்று கூறினார்.

எனவே, நீங்கள் உங்களை நம்பி, நீங்கள் செய்யும் காரியம் சிறிதாயினும் பெரிதாயினும், அதை உங்களுடையதாக்க முயற்சி செய்யுங்கள்! எப்பொழுதும் அதில் அபிவிருத்தி காண்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருங்கள்! அவ்விதம் செய்வதில் நீங்கள் பெருமையடைவீர்களாக!

வியாபாரிகளும் சக்தி வாய்ந்த நூதனத் தன்மையைப் பின்பற்றுவதனால் நல்ல பலன்களைப் பெறுவர். அது எவ்வளவு சிறியதாயிருந்தபோதிலும் சரிதான். ஒரு வியாபாரி எவ்வளவு திறமைசாலியாய் இருந்தபோதினும் அவன் தனித்தன்மையுடன் தன் முன்னேற்றப் பாதையை வகுத்து செல்பவன் போன்று மக்களின் கவனத்தைக் கவரமாட்டான். தனக்கே உரிய தன்மையுடன் செயலாற்றுகிறவனுக்கு அவனுடைய கடைக்கு வரும் ஒவ்வொருவரும் ஒரு நடக்கும் விளம்பரமாகவே இருப்பர்.

பாஸ்டனில் ஒரு கடை இருக்கிறது. அதன் உரிமை யாளர்கள் தங்களின் ஒவ்வொரு செயலிலும் தனித்தன்மை யையே பின்பற்றுகின்றனர். அவர்களின் கடையிலிருந்து கிடைக்கும் பணநோட்டுகளும் புத்தம் புதியவையாய் இருக் கின்றன. அவ்விதம் அவற்றைப் பெறுவதில் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் விளம்பரமோ கொஞ்ச நஞ்சமல்ல. அழுக்கடைந்த நோட்டுகளையும் தேய்ந்துபோன நாணயங் களையும் உபயோகிப்பதற்குப்பதிலாகப் புது நோட்டுகளையும் நாணயங்களையும் உபயோகிப்பதற்காக அந்தக் கடைக்குச் சாமான் வாங்க வருபவர்களின் எண்ணிக்கையை அளவிட முடியாது. ஏனெனில் புது நோட்டுகளையும் ஒளி பொருந்திய நாணயங்களையும் பயன்படுத்துவதில் யாருக்கும் ஒரு மகிழ்ச்சி ஏற்படுவது இயல்பு.

தனித்தன்மையுடன் கூடிய நூதனச் செயல் செய்கிறவர்க ளெல்லாம் வெற்றி பெறுகிறார்கள் என்று நான் கூறுவதி லிருந்து அவை வெற்றி பெற்றுத்தான் தீரும் என்று நீங்கள் தவறாக எண்ணிவிட வேண்டாம். அனுபவ சாத்தியமான சக்தி வாய்ந்த தனித்தன்மைகள்தாம் பலனளிக்கும். மற்றவை எல்லாம் கானல் நீரைத் துரத்திக் கொண்டு செல்வது போல் ஆகிவிடும்.

இவ்விதம் தனித்தன்மையுடன் செயலாற்ற உங்களுக்குத் திறமையோ தகுதியோ இல்லையாயின், காலத்திற்கேற்றாற் போல் கையாளப்படும் புது முறைகளையாவது கையாள வேண்டியது அவசியம். அவ்விதம் செய்வதை விடுத்து 'என்னுடைய தகப்பனாருக்கும் என்னுடைய பாட்டனா ருக்கும் நல்ல தாயிருந்தது எனக்கும் நல்லதுதான்' என்று கூறிக் கொண்டிருப்பதில் பயனில்லை. இன்று எங்குப் பார்ப்பினும் ஒரே போட்டி மயமாக இருக்கிறது. ஒவ்வொரு வரும் நவீன சாமான்களுக்கே ஆதரவளிக்க முன்வந்து கொண்டிருக்கிறார்கள். உங்களுடைய வேலை எதுவாக

இருந்தபோதினும் அதில் நீங்கள் நவீன நாகரிக முறைகளைக் கையாளாவிடின் மக்கள் உங்களைக் கர்நாடகம் என்று ஒதுக்கித்தள்ளி, காலத்திற்குத் தகுந்தாற் போல் நடக்கும் மற்றவர்களை ஆதரிக்க ஆரம்பித்து விடுவர்.

காலத்திற்கேற்றாற்போல் நவீன முறையில் வெளியிடப் படாத பத்திரிகைகள் செத்து மடிவதை நாம் பார்த்திருக் கிறோம். பாடம் சொல்லும் முறைகளில் புதிய பாணிகளைக் கையாளாமல் கர்நாடக முறைகளைப் பிரம்பும் கையுமாய்ப் பின்பற்றும் ஆசிரியர்களை இன்று ஏறிட்டுப் பார்ப்பவர் யார்? முன்னேற்ற சக்தியோடு அடியெடுத்து வைக்காத வழக்கறி ஞர்கள் தங்களின் வாடிக்கைக்காரர்களை இழந்து விடுகின்றனர்.

அவர்களது புதுச் சட்ட நூல்களையும் சட்ட வெளியீடு களையும் வாங்கிப் படிப்பதில்லை; கர்நாடக முறைகளையும் பண்டைய முன்மாதிரிகளையும், பழைய சட்ட நூல்களையும் பிடித்துக் கொண்டு அட்டை மாதிரி ஒட்டிக் கொண்டிருக் கின்றனரேயன்றி நாகரிக உலகில் வாழ்வதுமில்லை; புதிய சட்டத்திருத்தங்களையும் மற்ற நீதிமன்றங்களின் புது மாதிரியான தீர்ப்புகளையும் கவனிப்பதுமில்லை.

அவர்களுடைய செயலகமோ இருளும் தூசியும் அடைந்த தாயிருக்கும். அவர்களுடைய ஆடைகளோ நாகரிக மற்ற தாகவும், கிழிசலுடையதாகவும். ஒட்டுப் போடப்பட்டதாகவும் இருக்கும். ஆனால் அவர்களோ ஏன் கட்சிக்காரர்கள் தங்களிடம் வரவில்லை என்றும், தங்களைவிட அனுபவம் குறைவான இளைஞர்களிடம் போய்க்கொண்டிருக்கிறார்கள் என்றும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

மருத்துவக் கல்லூரியை விட்டுவெளி வந்ததும் ஓர் இளம் டாக்டர் வளர்ச்சியடைவதை நிறுத்திவிட்டாரானால் அவரும் மக்களால் புறக்கணிக்கப்படுவார். அவர் முன்பெல்லாம்

நாசூக்கான நாகரிக உடை அணிவார். அவ்வப்போது மருத்துவ ஆராய்ச்சியில் செய்யப்படும் முன்னேற்றங்களையெல்லாம் புத்தகங்கள் வாயிலாகவும் வெளியீடுகள் மூலமாகவும் அறிந்து அவற்றைத் தாமும் பின்பற்றுவார்.

ஆனால் இப்பொழுது அவருக்கு அதிக வருவாய் வருவதன் காரணம் புது முறைகளைக் கையாள அவர் தவறியதால் அவரின் முன்னேற்றம் தடைப்பட்டு அவருடைய நிலை, தேங்கி நிற்கும் தண்ணீர் போன்று ஆகிவிடுகிறது. நாகரிக முறைகளைப் பின்பற்றி நாகரிகமான ஆயுதங்களுடனும், மருந்துகளுடனும் நாகரிகமாய் அமைக்கப்பட்ட தம்முடைய அலுவலகத்தில் கவர்ச்சிகரமான உடையணிந்து சிகிச்சை செய்யும் டாக்டர் பழைய டாக்டரை விரைவில் தோற்கடித்து விடுவார்.

இவ்வாறு எந்தத் தொழிலை மேற்கொண்டிருப்பவர்களும் அந்தத் தொழிலுக்குரிய புதிய நாகரிக முறைகளைப் பின்பற்றத் தவறின் பின்னுக்குத் தள்ளப்படுவார்கள். ஆதலின், முன்னேற விரும்பும் நீங்கள் மேற்கொண்டிருக்கும் தொழில் முன்னேற்றமடைந்திருக்கும் அலுவலகங்களுக்குச் சென்று அவற்றின் முன்னேற்றத்திற்கான இரகசியங்களைக் கண்டுபிடித்து அவற்றை நீங்களும் செயலாற்றுங்கள். அவை முன்னேற்றமடைந்திருப்பதன் காரணம், காலத்திற்கேற்றாற் போல் செயலாற்றியது தான் என்பதை யார் மறுக்க முடியும்? யார் காலத்திற்கேற்றாற்போல் செயலாற்றவில்லையோ, யார் கர்நாடகம் என்னும் பக்கவாத நோய்க்குப் பலியாகி விடுகிறார்களோ அவர்கள் ஒருபோதும் வெற்றியடைய முடியாது. உண்டு, உறங்கி, உயிரை விடலாம். அவ்வுளவுதான்.

இப்பொழுது நவீன சகாப்தம் உதயமாகிறது. ஒரு காலத்தில் அறிப்படாத பொருள்களும், பிரயோசன மற்றவை என்று ஒதுக்கித் தள்ளப்பட்டவையும் பெரும் வியாபாரப் பொருள்களாக ஆகிவிட்டன. முன்பெல்லாம் பாதிக்கப்படா

திருந்த ஒரு பொருளின் விலையை இன்று நூற்றுக் கணக்கான சூழ்நிலைகள் பாதிக்கின்றன. அவற்றையெல்லாம் நன்கு சிந்தித்து இன்று வியாபாரம் செய்ய வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு நாளும் மனித வர்க்கத்திற்கு புதுப்புதுத் தேவைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவற்றை எவன் ஏற்கனவே ஊகித்தறிந்து செயலாற்றுகிறானோ அவனே வெகு விரைவில் முன்னேற்றமடைவான்.

எவ்விதம் ஒருநோயாளியின் நாடியைப் பார்த்து மருந்து கொடுக்காத வைத்தியன் அந்நோயாளியை இறக்கச் செய்து விடுவானோ, அதே போன்று உலகத்தின் நாடியைப் பார்த்துச் செயலாற்றத்தவறியவர்கள் சீக்கிரம் வாழ்வு சம்பந்தப்பட்ட வரை இறந்து விடுவார்கள்.

எனவே நீங்கள் சென்ற காலத்திலேயோ வருங்காலத் திலேயோ வாழந்து கொண்டிருக்க வேண்டாம்; நிகழ்காலத்தி லேயே வாழுங்கள். நிகழ் காலத்தின் ஒரு பாகமாய் வாழுங்கள். நாகரிகம் உங்களுடைய செயலிலே பரிணமிக்கட்டும். உளுத்துப்போன பழைய பத்தாம் பசலிக்கொள்கைகளை விடாது பற்றிப் பிடித்து இந்த உலகத்திற்கே ஓர் அந்நியன் போன்று நடந்து கொண்டு இந்த உலகம் மதிக்க வில்லையே, என்று வருத்தப்படாதீர்கள். நீங்கள் முன்னேற விரும்பினால், நாகரிகக் குருதி உங்களுடைய குருதிக் குழாய்களில் ஓடுமாக; முன்னேற்றப் படையுடன் சேர்ந்து நீங்களும் அடியெடுத்து வைத்து முன்னேறுவீர்களாக!



# 5. செய்வன திருந்தச் செய்க!

சிறு சிறு அஜாக்கிரதையினால் உலகில் ஒவ்வோராண்டும் எவ்வளவு உயிர்கள் பலியாகின்றன! எத்தனை கோடிரூபாய்க்கு இழப்பு ஏற்படுகின்றது! இரும்புச் சட்டங்கள் அஜாக்கிரதையாய் வார்க்கப்பட்டதனால் எத்தனை கட்டடங்கள் இடிந்து விழுகின்றன. எத்தனை பாலங்கள் நொறுங்கித் துவம்சமாகின்றன, ரயில் தண்டாவாளத்தில் ஒரு சிறு தவறு, சக்கரத்தில் ஒரு சிறு வெடிப்பு ஆகியவை எத்தனை ரயில் விபத்துக்களுக்கு காரணமாகி எத்தனை பேர்களுடைய உயிர்களைப் பலி வாங்கியிருக்கின்றன. அஜாக்கிரதையுள்ள, வேலையில் இன்பம் காணாத, அலையும் மனத்தைப் பெற்ற ஊழியர்கள் செய்யும் சிறு சிறு தவறுகளால் எவ்வளவு பெரும் இழப்புகளெல்லாம் உலகில் ஏற்படுகின்றன!

கடைச்சிப்பந்திகளுடைய அஜாக்கிரதையினால், அவர்கள் அஜாக்கிரதையாக சாமான்களைக் கட்டுவதனால், அஜாக்கிதையாகப் பிறருடன் உறவாடுவதனால் எவ்வளவு இழப்பு ஏற்படுகிறது! எத்தனை வாடிக்கையாளர்களை இழக்க வேண்டியிருக்கிறது! அவர்களுடைய அஜாக்கிரதையினால் எத்தனை சாமான்கள் உடைந்து நாசமாகின்றன! ரயில்வே ஊழியர்கள். டிரைவர்கள் ஆகியவர்களின் அஜாக்கிரதையினால் எத்தனை புகைவண்டிகள் கவிழ்ந்திருக்கின்றன! எத்தனை உயிர்கள் மடிந்திருக்கின்றன.

ஜான் வான்ாமேக்கர் என்னும் அமெரிக்க கோடீஸ்வரரின் அலுவலகத்தில் மட்டும் ஊழியர்கள் செய்யும் தவறுகளால்

ஆண்டொன்றிற்கு இருபத்தையாயிரம் டாலர்கள் வீணாய்ப் போகின்றனவாம். சிகாகோ நகரத்தில் மனிதர்கள் செய்யும் சிறு சிறு தவறுகளினால் ஒரு நாளைக்குப் பத்து இலட்சம் டாலர்கள் வீணாகின்றன என்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கணக்கிடப்பட்டது. இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன? அலட்சியமாய் வேலைகளைக் கருதி, அஜாக்கிரதையுடன் அவற்றைச் செய்வதுதான்.

ஆனால், 'அவ்விதம் ஏன் செய்கிறாய்?' என்று நாம் ஒருவனிடம் கேட்போமாயின், 'இவற்றைப் பற்றி ஏன் பிரமாதப் படுத்திக் கொள்கிறீர்கள்? இவையெல்லாம் அற்ப விஷயங்கள்' என்று கூறிவிடுகிறான். ஆனால் அவை அணுஅணுவாகச் சேர்ந்து மலைக்குவியலாய் ஆகிவிடு கின்றன என்பதை அவன் அறிகிறானில்லை. மலை என்றால் என்ன? அணுக்களின் தொகுப்புத்தானே, இவ்விதம் கூறும் அவன், தனக்கு உயர் பதவி கிடைக்கவில்லையே என்று முணுமுணுத்துக் கொண்டிருக்கிறான். ஆனால் அதற்கு மூலக்காரணம் என்னவென்பதை அவன் உணர்கிறானில்லை.

வாஷிங்டனிலுள்ள 'டெட்லெட்டர்' ஆபீஸில் ஓராண்டில் மட்டும் எழுபது இலட்சம் கடிதங்கள் குவிந்து கிடந்தன. இவற்றில் எண்பதாயிரம் கடிதங்களின்மேல் முகவரியே எழுதப்படவில்லை; அவற்றில் பெரும்பாலனவை வாணிப நிலையங்களிலிருந்து வந்த கடிதங்களாகும். உயர் பதவி, சம்பள உயர்வு என்று ஊழியர்கள் கேட்கிறார்களேயொழிய இவ்விதம் அஜாக்கிரதையுடன் ஊழியமாற்றி அலுவலகத் திற்கு இழ்பபை உண்டு பண்ணும்பொழுது அவர்களுக்கு எங்கிருந்து உயர் பதவியும், சம்பள உயர்வும் கிடைக்கும்?

தம் முதலாளி முன் ஒரு பொய் சொல்வதையே கனவிலும் கருதிப் பாராத பலர், செய்ய வேண்டிய வேலையை அலட்சியமாகக் கருதி, அஜாக்கிரதையுடன் செய்து பொய்யைச் செயலாற்றுகிறார்கள். ஆனால் பொய்யைச்

சொல்வதைவிட பொய்யைச் செயலாற்றுவது பெரும் தீமையாகும் என்பதை அவர்கள் உணர வேண்டும், அவ்விதம் செய்வது தம்முடைய முதலாளிக்கு மட்டுமல்ல, உலகுக்கு மட்டுமல்ல தமக்கும் சேர்த்துச் செய்யும் துரோகமாகும். அதனால் முதலாளிக்கு பெரிய நஷ்டம் ஏற்படுகிறது. உலகில் பெரிய அபாயங்கள் ஏற்படுகின்றன. அவர்களும் முதலாளியை ஏமாற்றுவதாகக் கருதித் தம்மையே தாம் ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

எதிரியை எவன் இலேசு காணாமலும், மிகைப்படக் காணாமலும் செயலாற்றுகிறானோ அவனே போரில் பெரு வெற்றி பெறுபவனாவான். தான் மிகைப்படக் கண்டால் தன்னைப் பலப்படுத்த தவறியதன் காரணமாய் எதிரியால் முறியடிக்கப்படுவான். எதிரியை மிகைபடக் கருதின் அவனை தாக்குவதற்கு முன் அவனிடம் சரணாகதி அடைந்து விடுவான். அது போன்றே தன்னுடைய காரியத்தின் தலைவனாய் ஒருவன் விளங்கி, தன்னுடைய வேலையில் அணுவளவும் தவறு ஏற்படா வண்ணம் எவன் எச்சரிக்கையுடன் வேலை செய்கிறானோ அவனே வாழ்க்கையில் வெற்றி பெறுபவனாவான். எவன் எதனையும் அற்பமெனத் தள்ளி அலட்சியம் செய்கிறானோ அவன் படிப்படியாய் வீழ்ச்சிப் படுகுழியை நோக்கிச் சென்று கொண்டிருப்பான். அவனுக்கு விமோசனம் என்பதே கிடையாது எனலாம்.

அணுவத்தனை விஷயங்கள் எவ்வளவு படுநாசத்தை விளைவித்திருக்கின்றன. எவ்வளவு பெரும் நாச காரியங்களுக்கான காரணமாய் இருந்திருக்கின்றன என்பதை அறிவீர்களா?

மாதத்திற்குப் பதிலாக ஆண்டு என்று வழக்கு மன்ற ஊழியர் சிறிது அஜாக்கிரதையுடன் எழுதிவிட்டதானது ஒரு கைதியை இருபது மாதங்களுக்குப் பதிலாக இருபதாண்டுகள்

அலபாமாச் சிறையில் வாடுமாறு செய்தது. இருபது மாதங்கள் எங்கே, இருபது ஆண்டுகள் எங்கே என்று யோசித்துப் பாருங்கள்! அமெரிக்கக் காங்கிரஸ் நிறைவேற்றிய ஒரு மசோதாவில்ஒரு 'கமா' இல்லாதது அமெரிக்க அரசுக்கு பத்து இலட்சம் டாலர் இழப்பை ஏற்படுத்தியது.

"தங்கள் கணக்கில் பற்று எழுதிக்கொண்டு புஷல் ஒன்று ஒருடாலர் வீதம் பதினாயிரம் புஷல் தானியம் கிடைக்க விருக்கிறது. வாங்கவா அல்லது விலை கூடுதல் என்கிறீர் களா? என்று தந்தி மூலம் ஸான் ஃபிரான்ஸிஸ்கோவிலுள்ள வியாபாரி ஒருவர் ஸாக்ரமண்டோவிலுள்ள வியாபாரி ஒருவரைக் கேட்டார். (No. price too high) இல்லை. விலை அதிகம் என்று அவர் பதில் தந்தி கொடுத்தார். ஆனால், இல்லை என்பதற்கும் விலை என்பதற்கும் நடுவிலுள்ள முற்றுப் புள்ளியை கவனியாததால் ஸான்ஃபிரான்சிஸ் கோவிலுள்ள வியாபாரி தானியங்களை வாங்கிவிட்டார். இதனால் ஸாக்ரமண்டோவிலுள்ள வியாபாரிக்கு ஏற்பட்ட நஷ்டம் ஆயிரம் டாலர்களாகும்

ஒருவர் ஒரு சொல்லைத் தவறி உச்சரித்தது நியூ இங்கிலாந்துக் கல்லூரியில் பேராசிரியர் பதவியை பெற இயலாததற்குப் போதிய காரணமாயிருந்தது. ஒரு திருமணப் பத்திரிகையைத் தவற விட்டுவிட்டதே ஒருவருக்கு கிரா போர்ட் கோமகனாக ஆகும் உரிமையைத் தடுத்து நிறுத்தியது.

நெருப்புக் குச்சியை கிழித்து ஒரு குழந்தை விளையாடிய விளையாட்டானது நெமத்தி என்ற ஹங்கேரிய கிராமத்தி லிருந்த 232 வீடுகளையும் தீக்கிரையாக்கி அங்குள்ள மக்களையும் ஏழைகளாய் ஆக்கிவிட்டது. ஒரு சந்தையி லிருந்த விளக்கொன்றை ஒருமாடு தட்டிவிட்டுச் சென்றது சிகாகோ நகரத்தையே பொசுக்கிச் சாம்பலாக்கி ஓர் இலட்சம் மக்களை வீடின்றித் தவிக்கச் செய்தது.

''ஒரு சிறு சொல் பல நல்லுறவுகளின் விதியையும் பல அரசாங்கங்களின் விதியையும் தீர்மானித்திருக்கிறது'' என்று கூறுகிறார் பெத்தாம்.

தபால் முத்திரைச் சட்டத்தின் மூலம் அறுபதாயிரம் பவுன்கள் பெற பிரிட்டன் கொண்ட ஆசை அமெரிக்கப் புரட்சிக்கு வித்திட்டு செல்வம் கொழிக்கும் பொன்னாடாகிய ஐக்கிய அமெரிக்க நாடுகளை என்றென்றைக்கும் இழக்கும் படியாகச் செய்து விடவில்லையா?

கி.பி. 1005-ஆம் ஆண்டு மொடானா குடியரசுக்கும் போலக்னா அரசாங்கத்துக்கும் போர் ஏற்படக் காரணம் என்ன? மொடானா குடியரசைச் சேர்ந்த சிப்பாய்களில் சிலர் போலக்னா நாட்டைச் சேர்ந்த ஒரு கிணற்றிலிருந்த வாளியை எடுத்துக் கொண்டு சென்று விட்டதுதான். அந்த வாளியின் விலை ஒரு ரூபாய் கூட இருக்காது. ஆனால் அதன் மூலம் ஏற்பட்ட போரானது பல்லாண்டுகள் நீடித்து பல்லாயிரம் பேர்களைப் பலி வாங்கியது.

ஜெருசலத்திலுள்ள ஒரு கல்லறையின் சாவியை கிரேக்க சர்ச்சுகாரர்களிடமிருந்து இலத்தின் சர்ச்சுக்காரர்கள் கேட்க, அதை கொடுக்க மறுத்ததுதான் கிரிமியாப் போருக்கு வழி கோலியது என்பதை அறியாதார் யார்?

இவ்வாறு அற்ப விஷயங்கள் பெரிய அழிவை உண்டு பண்ணி விடுகின்றன. ஒரு சிறு காயம் உயிருக்கே உலை வைத்து விடுகிறது. சிறு தடுமனே வியாதிகளுக்கெல்லாம் மூல காரணமாய் அமைந்து விடுகிறது. தடுமன் தானே என்று அலட்சியமாய் இருந்து விடுவது ஊசியால் எடுக்கவேண்டி யதைக் கோடாரி கொண்டு எடுக்க இயலாதபடி கொடிய நோய்களின் வளர்ச்சிக்கு வழிகோலி விடுகிறது.

நாம் பெரிய விஷயங்களையே தேடித் திரிகிறோம். ஆனால் நம் கண்முன் இருந்து நம்முடைய கவனத்தை ஈர்த்திருக்கிற இந்த சிறிய விஷயங்களே பெரிய துன்பத்தை உண்டு பண்ணுகின்றன என்பதை நாம் அறிகிறோமில்லை.

வீடுகளை இடி, மின்னல் தாக்காவண்ணம் காந்த இரும்பு வைக்கப்படுகிறது. ஆனால் அதன் சுவர்களிலே சிறிதாய் முளைத்திருக்கும் அரசங்கன்று கிள்ளி எறியப்படுவதில்லை.

ஆல்ப்ஸ் மலையில் சில இடங்களில் வாய் பேசாது மௌனமாய் இருக்க வேண்டுமாம்; பேசினால் அதனால் வரும் காற்று ஒரு பெரிய பனிக்கட்டிச் சரிவையே உண்டுபண்ணி விடுமமாம்.

சூரியன் 3,86,000 மைல் டயா மீட்டர் உள்ளது என்று கணகிடப்பட்டிருக்கிறது. ஆனால் வெகு தொலைவிலுள்ள ஒரு நட்சத்திர மண்டலத்திலிருந்து அதனை பூதக் கண்ணாடி மூலம் பார்க்குங்கால் அந்தப் பூதக் கண்ணாடியில் ஒரு சிறு நூல் மறைந்து கொண்டிருந்தால்கூட சூரியனே கண்ணுக்குத் தெரியாது போய் விடுமாம்.

ஒரு கோதுமை தானியத்தை விதைத்து அது ஓராண்டுக் குள் ஐம்பது தானியங்களைக் காய்த்து, அந்த ஐம்பது தானியங்களையும் மறுபடியும் விதைத்து அவை ஒவ்வொன் றும் ஐம்பது தானியங்களைக் காய்த்தால், பன்னிரண்டாம் ஆண்டு முடிவில் அந்த ஒரு கோதுமையில் உண்டான தானியங்கள் உலகின் 449 கோடி மக்களுக்கும் நூற்றுக் கணக்கான ஆண்டுகளுக்கு போதுமானாதாயிருக்கும்.

இவ்வாறு நீங்களும் நானும் அற்பமெனக் கருதுபவை எவ்வளவு சக்தி வாய்ந்தவையாய்இருக்கின்றன என்பதைப் பார்த்தீர்களா? எனவேதான் பாரசீகப் பழமொழி ஒன்று: ''இப்பொழுது சிறிய விஷயங்களைச் செய் நாளடைவில் பெரிய காரியங்கள் தங்களையும் செய்யுமாறு உன்னிடம் கேட்டு கொண்டு உன்னை வந்தடையும்'' என்று கூறுகிறது.

''பல்கலைக் கழகத்தில் படிக்கும் பொழுது தம்மைவிடக் கெட்டிக்காரர்களாயிருந்தவர்களைவிட மேலான முறையில், அணுவளவும் விடாமல் செயலாற்றுபவன் செய்து முடிப்பான்'' என்று கூறுகிறார் வெப்ஸ்டர்.

மேலும் ''என்னுடைய ஒழுக்க முறை என்னவென்றால் எது செய்யப்படுவதற்கு தகுதியுள்ளதோ அது நன்றாகச் செய்து முடிக்கத் தகுதி வாய்ந்தது'' என்று கூறுகிறார் அவர். ''பெரும் ஓவியர்கள் நிரம்பிய இந்த நாட்டில் தாங்கள் மகோன்னதப் பதவி வகிக்கக் காரணம் என்ன?'' என்று பெரும் பிரெஞ்சு ஓவியராகிய நிகலஸ் பூஸினிடம் கேட்கப்பட்டட பொழுது, ''நான் ஒன்றையும் அலட்சியமாய் ஒதுக்கித் தள்ளுவது கிடையாது'' என்று கூறினார் அவர்.

இவ்வாறு வாழ்வில் உயர்ந்தோரெல்லாம் சொல்லும் பொழுது சோம்பேறிச் சுப்பன்களும் அலட்சிய புத்தி அசடர்களும், 'பெரிய மனிதர்கள் பெரிய விஷயங்களையே கவனிக்கிறார்கள்' என்று கூறுகின்றனர்.

பல வழக்கறிஞர்கள் கட்சிக்காரர்களிடமிருந்து எல்லாத் தகவல்களையும் அறியாது சட்ட நூணுக்கங்களை மேலெழுந்த வாரியாகக் கவனித்து தோல்விப் படுகுழியில் தங்களையும் தங்களின் கட்சிக்காரர்களையும் கொண்டு போய் தள்ளிக் கொள்கின்றனர். அவ்விதமே மருத்துவர்களும் நோயைப் பற்றிய முழு விவரங்களையும் அறியாது மருந்து கொடுத்து நோயாளிகளை எமனுலகிற்கு ஈவிரக்கமின்றி அனுப்பி வைக்கின்றனர்.

அதிமேதை என்றால் யார்? அணுவளவு விஷயத்தின் மீதும் தன் முழுக் கவனத்தையும் செலுத்துகிறவன்தான். எவன் தன்னை அதிமேதை எனக் கருதி சிறிய விஷயங்களைக் கவனிக்காது அலட்சியம் செய்கிறானோ அவன் ஒரு விஷயத்திலும் வெற்றிபெற மாட்டான்.

அலெக்ஸாண்டர் ஹாமில்டன் கூறுகிறார், ''என்னை மக்கள் ஓர் அதிமேதை என்று கூறுகின்றனர். என்னுடைய அதிமேதாத் தன்மையெல்லாம் இதுதான். என் கையில் ஒரு காரியம் இருந்தால் அதை ஆழந்து ஆராய்கிறேன்.அதனுடைய

ஒவ்வொரு சூட்சுமத்தையும் கண்டுபிடிக்கிறேன். என்னுடைய மனம் அது முழுவதையும் ஆக்கிரமித்துக் கொள்கிறது. அவற்றை மக்கள் அதிமேதாவித் தன்மையின் பலன்கள் என்று கூறுகின்றனர். ஆனால் அவை உழைப்பு, எண்ணம் ஆகியவற்றின் பலன்கள்தாம்'' என்று.

அணுவளவு விஷயத்தையும் தாமே நேரில் கவனித்துச் செயலாற்றும் தன்மையானது நெப்போலியனிடம் இயற்கையாகவே அமைந்திருந்தது. அவருடைய ஊழியர்கள் எவை எவை தாங்கள் கவனம் செலுத்தத் தகுதியற்றவை என்று கருதினார்களோ அவற்றிலெல்லாம் தம்முடைய பூரண கவனத்தை செலுத்தி வந்தார் அவர். எந்த விஷயத்தையும் அவர் சிறிதாகக் கருதியதே கிடையாது.

1805-ஆம் ஆண்டு அவர் இங்கிலீஷ் கால்வாயின் கரைகளில் அமைந்திருந்த முகாம்களை கலைத்துவிட்டு டான்யூப் நதியை நோக்கி முன்னேறுமாறு தம்முடைய படையினருக்கு உத்தரவிட்டார். தாம் உத்தரவு மாத்திரம் கொடுத்துவிட்டு மற்ற விஷயங்களையெல்லாம் தம்முடைய தளபதிகளிடம் ஒப்படைத்துவிடவில்லை. எந்த நாள், எத்தனை மணிக்கு படை புறப்பட வேண்டும். ஒவ்வொரு படையும் எந்தெந்த வழியாகச் செல்ல வேண்டும். எந்தநாள், எத்தனை மணிக்கு அது குறிப்பிட்ட இடத்தை அடைதல் வேண்டும் என்பதற்கான விரிவான திட்டமும் ஏற்கெனவே தயாரித்துத் தளபதிகளின் கையில் ஒப்படைத்து விட்டார்.

அந்த திட்டமானது ஓர் எழுத்துகூடப் பிசகாது செயலாற்றப்பட்டது. அந்த வரலாற்று புகழ்பெற்ற படை முன்னேற்றத்தின் பலன் என்ன? ஆஸ்டர் லீடஸ் என்னும் இடத்தில் நெப்போலியனின் படைகள் எதிரிகளைத் தோற்கடித்து வெற்றி முரசு கொட்டின; அந்த வெற்றியானது ஐரோப்பாவின் விதியைப் பத்தாண்டு காலத்திற்குத் தீர்மானித்து விட்டது.

அதன்பின் பஸ்ஸராஜ் நதி தீரத்தில் பிரெஞ்சுத் துருப்புகள் முகாமிட்டிருந்தன. அவற்றை முன்புறத்திலிருந்து தாக்க ரஷ்யத் துருப்புகள் தயாராய் நின்றன. வலது பக்கத்தில் ரஷ்யப் படையும் இடது பக்கத்தில் பிரஷ்ஷியப் படையும் நெப்போலி யனுக்கு விரோதமாய் வாள் வீசின. இவ்வாறு எங்கும் நெப்போலினை எதிரிகள் சூழ்ந்துவிட்டனர். இந் நிலையிலும் பிரான்ஸோடு கடிதத் தொடர்பு கொண்டிருந்தார் நெப்போலி யன். அவர் அவ்விஷயத்தில் மேற் கொண்ட தீர்க்க திருஷ்டி யினாலும் முன் ஜாக்கிரதையினாலும் ஒரு கடிதம் கூட எதிரிகளின் கையில் சிக்கவில்லை.

எவ்விதம் படைகள் அணிவகுத்துச் செல்வது. பிரான்ஸி லிருந்தும், ஸ்பெயினிலிருந்தும், இத்தாலியிலிருந்தும் எவ்விதம் படையினருக்கான உணவுப் பொருள்களையும் தளவாடங்களையும் கொண்டு வந்து சேர்ப்பது, எவ்விதம் நீர்ப்பாசன வசதிகளை அபிவிருத்தி செய்வதற்கான வாய்க் கால்கள் வெட்டுவது, எவ்விதம் போலந்திலும் பிரஷ்ஷியா விலும் விளைந்த தானியங்களை விரைவில் தம்முடைய முகாமக்குக் கொண்டு வருவதற்கான சாலைகள் போடுவது ஆகியவை எல்லாம் கடைசி விவரம் வரையில் அவருடைய கவனத்தை ஈர்த்து வந்தன.

குதிரைகள் எங்கெங்கே கிடைக்குமென ஆலோசனை கூறிக்கொண்டும், அவற்றிற்குப் போதுமான அளவு சேணங்களைத் தயாரிக்க ஏற்பாடு பண்ணிக்கொண்டும், வீரர்களுக்கான காலணிகளுக்கு ஆர்டர் கொடுத்துக் கொண்டும் முகாமுக்குக் கொண்டுவரப்பட வேண்டிய ரொட்டி, பிஸ்கட். சாராயம் ஆகியவற்றின் அளவை வரையறுத்துக் கொண்டும் இருப்பார் நெப்போலியன்.

இதே சமயத்தில் பிரெஞ்சுக் கல்லூரியைப் புதுப்பிப் பதற்கான ஆலோசனைகளை பிரான்ஸுக்கு எழுதிக்

கொண்டும், பள்ளிக்கூடங்களுக்கான பாடத்திட்டங்களை வகுத்துக்கொண்டும், 'மானிட்டர்' என்னும் பத்திரிகைக்கு அறிக்கைகளும் கட்டுரைகளும் எழுதி அனுப்பிக் கொண்டும், வரவு செலவுத் திட்டத்தின் விவரங்களைத் திருத்திச் செப்பனிட்டுக் கொண்டும், மடெலின் மாதா கோவிலில் செய்ய வேண்டிய திருத்தங்களைப் பற்றிச் சிற்பிகளுக்கு உத்தரவிட்டுக் கொண்டும், மேடம் டீஸ்தேலை நையாண்டி பண்ணிக் கொண்டும், துருக்கி சுல்தானுடனும் பாரசீக ஷாவுடனும் கடிதப் போக்குவரத்து நடத்திக் கொண்டும் இருப்பார். இவ்வாறு அவருடைய உடல்தாம் இராணுவ முகாமில் இருக்குமே யொழிய அவருடைய மனமானது உலகம் முழுவதும் பல்வேறு இடங்களில் வேலை செய்து கொண்டிருக்கும்.

ஒரு கடிதத்தில் அவர் தம்முடைய தளபதி நேயிடம் கேட்பார், 'நாம் அனுப்பிய ஆயுதங்கள் ஒழுங்காய் வந்து சேர்ந்தனவா?' என்று; மற்றொரு கடிதத்தில், 'வார்டன்பர்க் பட்டாளத்திற்கு வழங்கப்பட்ட சட்டைகள், கோட்டுகள், துணிமணிகள், காலனிகள், அயுதங்கள் ஆகியவை வேண்டுமென்று தளபதிகள் கூறுகின்றனர். எனவே, போஸனுக்கு ஓர் அதிகாரியை அனுப்பி அவற்றை வாங்கி வருமாறு செய்! அவர்களுக்குத் தலைக்கவசங்களும் வேண்டுமாம். எனவே, உடனே அவற்றை எப்லிங்கில் செய்யுமாறு உத்தரவிடு; தூங்கிக் கொண்டிருந்தால் எக்காரியமும் நடக்காது' என்று எழுதுவார்.

இவ்வாறு அணுவத்தனை விஷயத்தையும் அலட்சியம் செய்யாது பெரிய காரியம் முதல் சிறிய காரியம் வரை அவரே கவனித்து ஆவன செய்து வந்தார். அவருடைய சக்திகளெல்லாம் ஒன்று திரட்டப்பெற்று வன்மையுடன் செயலாற்றப்பட்டன. அவருடைய பெரும்பாலான நேரம் துருப்புகளைக்

கவனிப்பதிலேயே செலவழிந்த போதினும் சில சமயங்களில் துருப்புகளைப் பார்வையிடுவதற்காக ஒரு நாளைக்கு நூறு மைல்கள் கூட குதிரைச் சவாரி செய்த போதினும்--அவர் மற்ற விஷயங்களை அணுவத்தனையும் கவனியாது விட்டதில்லை. தேவைப்படின் இரவில் பெரும் பாகத்தை வரவு செலவுத் திட்டத்தை ஆராய்வதிலும், கடிதங்களுக்குப் பதில்கள் கூறுவதிலும், இன்னும் ஆயிரக்கணக்கான அரசாங்க அலுவல்களைக் கவனிப்பதிலும் செலவிடுவார். பற்றாக் குறைக்குத் தத்துவார்த்த நூல்களைப் படித்துக் கொண்டும், குர் ஆனுக்கும் பைபிலுக்கும் உள்ள வேறுபாடுகளை ஆராய்ச்சி செய்து கொண்டும் இருப்பார் அவர்.

ஊழியர்கள் மாதாந்திர அறிக்கைகளை அனுப்பத் தாமதிப்பின் உடனே கடைசி உத்தரவிடுவார். அவை வந்து சேர்ந்ததும் அவர் என்ன செய்வார் என்பதை அவரே கூறுகின் றார்: ''அவை எனக்கு வந்து சேர்ந்ததும் மற்ற எல்லா வேலை களையும் ஒதுக்கி வைத்துவிட்டு அவற்றை விவரமாகப் படித்து ஒரு மாதாந்திர அறிக்கைக்கும் மற்றொரு மாதாந்திர அறிக்கைக்கும் உள்ள வேறுபாட்டை ஆழந்து கவனிக்கிறேன். இந்த அறிக்கைகளை நான் அனுபவித்துப் படிப்பது போன்று ஓர் இளமங்கை கூட ஒரு நாவலை அவ்வளவு சுவையாகப் படிக்க மாட்டாள்.'' தூங்காதபோது அவற்றைத் தம் தலையணையின் கீழே இருந்து எடுத்துப் படிப்பார் அவர்.

நெப்போலியன் எல்பாவுக்கு நாடு கடத்தப்பட்ட பொழுது அவர்தாம் சென்ற கப்பலின் அணுவளவு விஷயத்தையும் அறிந்திருந்ததைக் கண்டு அந்தக் கப்பல் தலைவனுக்கு ஏற்பட்ட ஆச்சர்யத்திற்கு அளவில்லை. எந்த விஷயத்தையும் நெப்போலியன் சந்தர்ப்பத்தின் கையில் விட்டதில்லை. எந்த விஷயம் பற்றியும் செயலாற்று முன் அது பற்றித் தெள்ளத்

தெளிய ஆராய்ந்து திட்டமிட்ட பின்தான் அவர் செயலாற்றி வந்தார்.

அவரை வாட்டர்லூ சண்டையில் தோற்கடித்த வெல்லிங்டனும் அப்படிதான். சிறிது விஷயங்கள் என்றால் என்ன என்பது கூட அவருக்குத் தெரியாது. மற்றத் தளபதிக ளெல்லாம் தம் கீழுள்ள அலுவலாளர்களிடம் அலுவல்களைக் கவனிக்குமாறு விட்டுவிட்டு வாளாவிருந்தபொழுது வெல்லிங்டன் மட்டும் அணுவளவு விஷயத்திற்கும் தம்முடைய நேர் கவனத்தைச் செலுத்தி வந்தார்.

இவ்வாறு அணுவளவு விஷயத்தையும் அலட்சியம் செய்யாது அவற்றை கண்ணும் கருத்துமாய் யார் செயலாற்று கிறார்களோ, அவர்களே வெற்றிப் பிரதாபங்களைக் கொள்ளையிட்டுக் கொண்டு செல்கின்றனர். தோல்வியடை பவர்களின் வரலாற்றை இரண்டே வார்த்தைகளில் கூறி விடலாம். அது என்னவென்றால், 'மேலெழுந்த வாரியாய்க் கவனிப்பது' என்பதுதான்.

சிற்ப விற்பன்னராகிய கனோவா மகோன்னதமான சிலை ஒன்றைச் சம்பூரணப்படுத்திக் கொண்டிருக்கும் பொழுது ஒரு மனிதன் அதனை இமை கொட்டாது கவனித்துக் கொண்டி ருந்தான். அவர் அற்பமான சிறு விஷயங்களையெல்லாம் அதிக நுட்பமாய்க் கவனித்து தம் உளியால் அவற்றை மென்மையாய் ஒழுங்குபடுத்தி நேரத்தைப் போக்குவது அவனுக்குப் பிடிக்கவே இல்லை. உடனே சிற்ப விற்பன்னர் அவனைப் பார்த்து, "நீ அலட்சியமாய்க் கருதி நான் பெரிய தாய் மதித்துச் செய்யும் அந்தச் சிறு சிறு ஒழுங்குகள்தாம் கற்றுக்குட்டியின் தோல்விகளுக்கும் கலை வல்லூனரின் சம்பூர்ணத்தன்மைக்குமுள்ள வேற்றுமையை காட்டு கின்றன" என்று கூறினார்.

அவர் நெப்போலியனுடைய சிலையைச் செய்யத் துவங்கியபொழுது, பாராஸ்ஸிலிருந்து ஏராளமான பொருட் செலவு செய்து மிகுந்த பிராயசையுடன் கொண்டு வந்திருந்த அந்தச் சலவைக் கல்லில் ஒரு மெல்லிய சிவப்பு இரேகை ஓடியது என்பதற்காக அதில் தம்முடைய உளியை வைக்க மறுத்து விட்டார்.

''நான் தங்களைக் கடைசிமுறை பார்த்திலிருந்து தாங்கள் இதுவரை தங்களுடைய வேலையில் எவ்வித முன்னேற்றமும் அடைந்திருப்பதாகத் தெரியவில்லையே'' என்று கூறினார் கனவான் ஒருவர்; சிற்பச் சக்கரவர்த்தி மைக்கேல் ஏஞ்சலோவை நோக்கி. ''இல்லை. நான் சிற்பத்தின் இப்பகுதியை அழகுபடுத்தியுள்ளேன். அந்தப் பாகத்தை மென்மைப் படுத்தியுள்ளேன். அந்தத் தசைகளைப் புடைக்கச் செய்துள்ளேன். இந்த உதடுகளுக்கு அதிக அழகை அளித்துள்ளேன்'' என்றார் மைக்கேல் ஏஞ்சலோ. ''அவையெல்லாம் என்ன! சின்னஞ்சிறு விஷயங்கள்'' என்றார் கனவான். ''ஆம் அந்தச் சின்னஞ்சிறு விஷயங்கள் தாம் ஒரு பொருளுக்குச் சம்பூரணத் தன்மையை அளிக்கின்றன. சம்பூரணத்தன்மை என்பது சின்னஞ்சிறு விஷயமல்ல'' என்று சட்டென பதில் மொழிந்தார் அந்த சிற்பச் சக்கரவர்த்தி.

இங்கிலாந்து நாட்டுத் தலைவராகச் சில காலம் ஆட்சி செய்த க்ராம்வெல், தம்முடைய படத்தை வரைந்த ஓவியன் தம்மை மகிழ்வுபடுத்த எண்ணித் தம் முகத்திலுள்ள மறுவை வரையாததைக் கண்டதும், ''நான் எப்படி உள்ளேனோ அதே போன்று என்னை வரைவதற்கென்ன?'' என்று சிறிது கோபம் கலந்த குரலில் கேட்டாரென்றால் சிறு விஷயத்திற்கும் அவர் கொடுத்த முக்கியத்துவத்தை எண்ணிப் பாருங்கள். அந்த ஓவியத்தில் அந்த மறு வரையப்படாது விடப்படின் அது ஓர் உண்மை ஓவியமாகுமா என்பதையும் ஆராய்ந்து பாருங்கள்.

தாம் வர்ணிக்க விரும்பிய ஒரு பாழடைந்த கோட்டையை சர் வால்டர் ஸ்காட் போய்ப் பார்வையிட்டபொழுது அதனருகே வளர்ந்திருந்த செடி கொடிகளின் பெயர்களையும் பூக்களின் பெயர்களையும் ஒரு குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்டார். ''அவ்விதம், உள்ளது உள்ளபடி எழுதுவதே ஒரு எழுத்தாளனுடைய எழுத்தை இயற்கையை ஒட்டியதாய் இலங்கச் செய்யும்'' என்று அவர் கூறினார்.

ஒவ்வொரு வாக்கியத்தையும் தம்மால் இயன்றவரை அழகாகச் செய்யாது மெக்காலே விட்டதேயில்லை. கிப்பன் தாம் எழுதிய வரலாற்றை ஒன்பது தடவையும், அதன் முதல் அத்தியாயத்தை பதினெட்டுத் தடவையும் திரும்பித் திரும்பி எழுதினார். மாண்டெஸ்கயு தம்முடைய நூல் பற்றி நண்பர் ஒருவரிடம், ''நீங்கள் அதைச்சில மணி நேரங்களில் படித்து விடுவீர்கள். ஆனால் அதற்காக நான் எடுத்துக்கொண்ட முயற்சியானது என்னுடைய மயிரையே வெளுப்படையச் செய்துவிட்டது'' என்று கூறினார்.

ஒரு பிரபல எழுத்தாளர் கூறினார்: ''எது செய்யத் தகுதியுடையதோ அதை வெகுஜாக்கிரதையுடனும், பலத்துடனும், விருப்பத்துடனும் செய்யவேண்டும். நாம் நம்முடைய கடமை மீது கொள்ளும் விருப்பத்தை நிறுத்துப் பார்க்கவோ, ஆண்டவன் முன்னிலையில் அதற்குரிய முக்கியத்துவத்தைத் தீர்மானிக்கவோ நம்மிடம் எவ்வித அளவு கோலும் இல்லை. நமக்குச் சிறிதாகத் தெரிபவை நம்முடைய வாழ்வு அல்லது மரணம் என்ற பிரச்சினையைத் தீர்மானிக்கும் சக்தி வாய்ந்தவையாகவும் ஆகிவிடலாம்.''

இந்தத் தத்துவத்தை உணர்ந்து செயலாற்றியவர்கள் தாம் கலை அறிஞர் பதவியை அடைந்திருக்கின்றனர். அணுவளவும் விடாது முற்ற முடிப்பதிலேயே முழு வெற்றியும் மறைந்து இருக்கிறது.

காமன்ஸ் சபையில் இரண்டு உறுப்பினர்களுக்கிடையே விவாதம் முற்றியபொழுது, ''நீர் என்னுடைய தந்தையின் காலணிகளுக்கு மை பூசிப் பளபளப்பாக்கியதை நான் இன்றும் மறந்துவிடவில்லை' என்று ஓர் உறுப்பினர் கூற, ''ஆம், உண்மைதான். ஆனால் நான் அவற்றிற்கு நன்றாக மை பூசிப் பளபளப்பாக்கவில்லையா?'' என்று சட்டெனப் பதில் மொழிந்தார் மற்றோர் உறுப்பினர். அவருடைய இந்த எதிர்பாராத பதிலானது காமன்ஸ் சபையையே கரகோஷத்தில் மூழ்கடித்து விட்டது.

வாஷிங்டனில் நடந்த மாபெரும் கூட்டத்தில் அமெரிக்க அதிபர் ஆண்ட்ரூ ஜான்ஸன் சொற்பொழிவாற்றும் பொழுது ''நான் என்னுடைய அரசியல் வாழ்வை ஆல்டர் மேனிலிருந்து துவங்கி சட்ட சபையின் எல்லா இலாக்காக்களிலும் கழித்துள்ளேன்' என்று கூறவும், உடனே கூட்டத்திலிருந்து ஒரு குரல் கிளம்பியது, 'இல்லை தையற் காரனிலிருந்து வாழ்வைத் துவக்கினீர்,' என்று உடனே ஆண்ட்ரூ ஜான்ஸன் கூறினார்.''யாரோ ஒரு கனவான் கூறுகிறார், நான் தையற் காரனாய் இருந்தேன் என்று.அது என்னுடைய தகுதியை ஒரு போதும் குறைத்துவிடாது. ஏனெனில் நான் தையற்கார னாயிருக்கும் பொழுது நன்றாகத் தைக்கக் கூடியவன் என்று பெயர் வாங்கியிருந்தேன். சொன்ன நேர்த்தில் துணிமணி களைத் தைத்தும் கொடுத்தேன்''.

இவ்வாறு சிறு காரியத்தையும் திறமையுடன் செய்கிற வர்கள் எல்லாக் காரியத்தையும் திறமையுடன் செய்வார்கள். மிதியடி செய்யும் தொழிலைத் திறம்படச் செய்த ரோஜர் வில்லியம்ஸ் பிற்காலத்தில் மேலான அரசியல்வாதியாக விளங்கினார். அச்சுத் தொழிலாளியாய் இருக்கும் பொழுதே பெஞ்சமின் ஃபிராங்க்ளின் சிறப்பாகச் செயலாற்றுவதில் நற்பெயர் பெற்றிருந்தார்.

எந்தக் காரியத்தையும் அழகுற முடிப்பதில் புரூகாம் பிரபுவுக்கு அளவிறந்த வேட்கை இருந்தது. அவ்விதம் செய்து முடிப்பதற்காக அவர் எவ்விதப் பிரயாசை எடுக்கவும் தயங்குவதில்லை, அவர் எந்தக் காரியத்தைச் செய்த் போதிலும் பிறர் அதனை அதைவிட நல்லமுறையில் செய்ய இயலாதபடி அவ்வளவு திறமையாய்ச் செய்து முடிப்பார். அதுவே அவருடைய வெற்றியின் இரகசியமாகவும் இருந்தது.

ரூபஸ் சோட் என்னும் வழக்கறிஞர் ஒரு சிறு கோர்ட்டில் ஒரு சிறு வழக்கு பற்றி வாதாட வேண்டியிருந்த போதினும், சுப்ரீம் கோர்ட்டில் வாதாடுவதற்கு சட்டங்களை எவ்வளவு அணுவணுவாய் ஆராய்வாரோ அவ்வாறே ஆராய்ந்து ஆணித்தரமாக வாதாடுவார்.

டேனியல் வெப்ஸ்டரும் அவ்விதம்தான். எதனையும் அணுவத்தனையும் விடாது அலசி ஆராயாமல் அவர் எந்தக் காரியத்தையும் செய்வதில்லை. அமெரிக்கக் காங்கிரஸின் கூட்டம் முடிவுறும் நேரத்தில் ஒரு மசோதா கொண்டுவரப்பட இருந்தது. அதைப் பற்றிப் பேசுமாறு உறுப்பினர்கள் வெப்ஸ்டரை வற்புறுத்தினர். ''இல்லை, மாட்டேன் எனக்கு எவ்வளவோ வேளைகள் இருக்கின்றன. அது பற்றித் தயார் செய்ய எனக்கு நேரமே இல்லை.'' என்று கூறி மறுத்தார் வெப்ஸ்டர். எனினும் நண்பர்கள் அவரை விடவில்லை. ''நீங்கள் எந்த விஷயம் பற்றியும் நன்றாகப் பேசுவீர்களே'' என்றார்கள் அவர்கள்.

''அதற்குக் காரணம் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? எந்த விஷயத்தையும் நன்கு அலசி ஆராய்ந்து அதை எனக்கே சொந்தமாக ஆக்கிக்கொள்ளாது நான்அதைப் பற்றிப் பேச முன்வராததுதான். இந்தச் சந்தர்ப்பத்தில் அவ்விதம் செய்ய எனக்கு நேரமில்லை. எனவே தங்களுடைய

வேண்டுகோளை ஏற்றுக் கொள்ள மறுக்கிறேன்'' என்று கூறித் தம் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் வெப்ஸ்டர்.

ஹார்வார்டைச் சேர்ந்த சங்கம் ஒன்று வெப்ஸ்டருக்கு ஒரு புத்தகத்தைப் பரிசளித்தபொழுது அவர் ஆற்றிய சொற்பொழிவு திடீர் சொற்பொழிவு என்று எல்லோராலும் கருதப் பட்டது. ஆனால் கூட்டம் முடிந்து அவர் வீட்டிற்கு செல்லும் பொழுது அந்தப் புத்தகத்தை எடுத்துச் செல்ல மறந்து விட்டார். அதனுள்ளே அவர் செய்த சொற்பொழிவின் நகல் அடங்கிய காகிதம் வைக்கப்பட்டிருந்தது. இவ்வாறு சிறந்த தயாரிப்பின்றி எக்காரியத்தையும் வெப்ஸ்டர் செய்தது கிடையாது.

ஓர் அவசரச் சந்தர்ப்பத்தில் வைத்து சொற்பொழி வாற்றுமாறு உலகம் கண்ட மாபெரு சண்ட மாருதரரான டெமாஸ்தனிஸ் கேட்டுக் கொள்ளப்பட்ட பொழுது அவர், ''நான் தயாராக இல்லை'' என்று கூறிவிட்டார்.

தாம் எழுதிய கதையை ஆறு மாதங்கள் வரை ஒருநாள் கூடவிடாது படித்த பின்தான் சார்லஸ் டிக்கன்ஸ் அதனைக் கூட்டத்தின் முன் கொண்டு வந்து படித்துக் காண்பிப்பார்.

மேக்ரெடி என்னும் சிறந்த நடிகர் ஒருவர் நாட்டுப் புறத்திலிருந்த சிறு நாடகக் கொட்டகை ஒன்றில் நடிக்கும் பொழுதும் நகரங்களில் பல்லாயிரக் கணக்கான மக்கள் முன் நடிப்பது போன்றே நடிப்பார், ''சொற்பப் பேர்களின் முன் நான் நடிக்கும்போதும் என் திறமை அனைத்தையும் பயன்படுத் தியே நடிப்பேன். அந்தச் சந்தர்பத்தை நான் ஒரு பாடமாகக் கருதி என்னுடைய முழுத் திறமையையும் பயன்படுத்தி நடிப்பதே என்னுடைய நீங்கா வழக்கமாக இருந்தது. அதனால் எனக்கு நல்ல பலன் ஏற்பட்டது என்பதை நான் உணர்கிறேன்'' என்று அவர்கூறுகிறார்.

இவ்வாறு சிறிய வேலை என்று எதனையும் அலட்சியம் செய்யாது அதனைப் பெரிய வேலையாகக் கருதி எவன் செயலாற்றுகிறானோ அவனே நிலையான பேரும், புகழும் பெறுபவனாவான்.

இயற்கை எந்தப் பொருளையும்--அது பெரிதாக இருந்த போதினும், சிறிதாக இருந்தபோதினும் - எவ்வளவு திறமை யாக அழகுடன் செய்து முடித்திருக்கிறது! அரண்மனைப் பூங்காவிலுள்ள ரோஜாப்பூவும் ஏழையின் குடிசையில் மலர்ந்திருக்கும் ரோஜாப்பூவும் ஒரேமாதிரி அழகு, மணம் அமைந்தவையாகவே இருக்கின்றன. ஆலமரம் அழகும், வனப்பும் முழுத் தன்மையும் பெற்று விளங்குவது போன்று சிறு அல்லிச் செடியும், அழகும், வனப்பும் சம்பூரணத் தன்மையும் பெற்று விளங்குகிறதல்லவா?

ஸ்டீபன் கிரார்ட் என்னும் வணிக மன்னர் எல்லாவற்றை யும் திட்மிட்டுச் செயலாற்றும் திறன் உடையவராக இருந்தார். அவருடைய திட்டப்படியே எல்லாக் காரியங்களும் நடைபெற வேண்டும் என்பது அவர் கொள்கை. ஒரு சிறு தவறு நிகழ்வதைக்கூட அவர் ஒருபோதும் அனுமதிப்பதில்லை. எவன் அணுவளவும் விடாமல் திட்டம் வகுத்து கண்டிப்புடன் செயலாற்றவில்லையோ, அவன் பெருவெற்றி பெறமுடியாது என்று அவர் உறுதியாக நம்பினார்.

அவருடைய உத்தரவுப்படி, ஒரு கப்பல் நிறைய இருந்த காபியை அவருடைய ஊழியர் ஒருவர் வாங்காது பல்லாயிரக் கணக்கான டாலர் நஷ்டமாவதைத் தவிர்த்த பொழுது அவர் அந்த ஊழியரைப் பாராட்டினாரா? இல்லை. அவரை வேலையிலிருந்தும் நீக்கினார். ''நீ என்னுடைய உத்தரவுகளை உதாசீனம் செய்து உன்னுடைய உத்தரவுகளுக்குக் கீழ்ப் படிந்து விட்டாய். நான் எவ்விதம் உன்னிடம் வேலை வாங்கு வது? நீ என்னுடைய உத்தரவுகளை உதாசீனம் செய்து ஒரு

முறை லாபம் சம்பாதித்து தந்தால் என் உத்தரவுகளை உதாசீனம் செய்து 99 முறை நஷ்டம் விளைவித்து விடுவாய்'' என்று அவர் கூறினார்.

தாம் அளித்த வாக்குறுதியினின்றும் அவர் மயிரளவும் பிரளவில்லை. அவருடைய வார்த்தைகள் அழகான நன்மையை அளிக்காவிட்டாலும் சிறந்த நன்மையை வழங்கும் என்று மக்கள் உணர்ந்தார்கள். அவர் ஒருபோதும் தம்முடைய காரியத்தை சந்தர்ப்பத்தின் கையில் ஒப்படைத்தது கிடையாது. ஒவ்வொரு விஷயத்தையும் அளந்து, ஆய்ந்து, கடைசி விவரம் வரையில் ஆலோசித்து, திட்டம் தீட்டிய பின்பே செயலாற்றினார். இதையறியாத மற்ற வியாபாரிகள் கிரார்ட்டுக்கு சுக்கிர தசை பிறந்துவிட்டது என்று கூறி கொண்டார்கள்.

அணுவத்தனையும் விடாது ஒரு செயலை முற்ற முடிக்கும் பையனே எல்லோராலும் விரும்பப்படுகிறான். ஏனெனில் அவனை வேலைக்கமாத்திக்கொள்பவர் அவனை ஓர் அயோக்கியனாகவோ முட்டாளாகவோ கருதித் தம்முடைய நேரத்தை வீணாக்கிக்கொண்டு அவனருகே நிற்கவேண்டிய அவசியமில்லாது போய்விடுகிறது. அவனைக் கவனித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் அவரே அந்தச் செயலைச் செய்து முடித்து விடலாமல்லவா? அவ்விதமானால் அந்தப் பையனை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருக்க வேண்டிய அவசியமென்ன? ஆகையினால் அப்படிப்பட்டவனை விரைவில் அவர்வேலையிலிருந்து விரட்டியடித்து விடுவார் என்பதில் ஐயமில்லை;

அரைகுறையாகச் செய்யப்பட்ட இருபது வேலைகள், சரியாகச் செய்யப்பட்ட ஒரு வேலைக்கு நிகராய் ஒருபோதும் ஆகமாட்டா. ஓர் ஊசியை நீங்கள் நல்ல முறையில் செய்வீர்களேயானால், ஓர் ஒழுங்கற்ற , நீராவி இயந்திரத்தைச் செய்வதைவிட அதிகமான ஊதியத்தைப் பெற்றுவிடுவீர்கள். ஒழுங்கற்ற எல்லா வேலைகளும் அயோக்கியத்

தனத்தின் சின்னங்களேயாகும்.ஒழுங்காக வேலை செய்து அதற்காக நம்மிடம் கூலி பெறுகிறானே, அவனே உண்மையில் உழைப்பிற்கு ஊதியம் பெறுபவன். அரைகுறை வேலை செய்து விட்டு நம்மிடம் கூலி வாங்கிச் செல்பவன் நம்முடைய பணத்தைக் களவு செய்து செல்பவனேயாவான்.

இருவர் ஒரே வித ஆயுதங்களை கொண்டு ஒரேவிதச் சாமான்களைச் செய்தபோதினும் அவற்றில் ஒன்று அழகற்றதாயும், போலியாயும் மற்றொன்று அழகுள்ளதாகவும் உறுதியாகவும் காணப்படுவதற்குக் காரணம் என்ன? வேலையில் இருவரும் காட்டும் மனோபாவம்தான். ஒருவன் காட்டும் ஜாக்கிரதை அவனுடைய வேலையிலும் பிரதிபலிக்கிறது. மற்றவன் காட்டும் அஜாக்கிரதை அவனுடைய வேலையிலும் வெளிப்பட்டு, அவனுக்கு அயோக்கியன் என்னும் பட்டத்தை வாங்கி கொடுக்கிறது.

செய்வதைப் போலித்தனமாய்ச் செய்வதுபோன்று ஒருவனுடைய ஆசையைக் கொன்று ஒருவனுடைய தகுதியைக் குறைப்பது வேறொன்றுமில்லை. நாம் எதனுடன் நீங்காது தொடர்பு கொண்டுள்ளோமோ அதுபோன்றே நாமும் ஆகிவிடுகிறோம். அது நம்முடைய வாழ்க்கையின் ஒரு பாகமாகவும் ஆகிவிடுகிறது. போலி வேலை செய்யும் நம்முடைய வழக்கமானது நம்முடைய ஒழுக்கத்தைப் பாதித்து நம்மையும் நீங்காது பற்றிப் பிடித்துக் கொள்கிறது.

இளைஞர்களில் பலர் வேலையின் அளவைக் கவனிக்கிறார்களேயொழிய தகுதியைக் கவனிக்கிறார்களில்லை; அதிகமான வேலைகளைச் செய்ய விரும்புகிறார்களேயொழிய செய்வதைத் திறனோடு செய்ய விரும்பு கிறார்களில்லை.

உயர்தர வேலை செய்வது நம்முடைய ஒழுக்க முறைமைகளையே உயர்த்தி விடுகிறது. போலி வெலை செய்வது நம்முடைய மனோநிலையையே மாற்றியமைத்து நம்மையும்

அதலபாதாளத்திற்கு இழுத்துச் சென்று விடுகிறது. மேலும் போலி வேலை நம்முடைய நன்மதிப்பிலிருந்து ஒரு பகுதியைப் பறித்து சென்றுவிடுகிறது என்பது உண்மையாகும். நம்முடைய வேலையை அலட்சியம் செய்து அதனைப் போலித்தன்மையுடன் செய்து முடித்தபின் நாம் முன்பிருந்த மனிதன் என்று நம்மையே நாம் கூறிக் கொள்ள முடியுமா? நம்முடைய மனிதத்தன்மை மாசுண்டு விடவில்லையா?

வேலையை அரைகுறையாகவும், அலட்சியமாகவும் செய்யும் தன்மையானது நம்முடைய ஒழுக்கத்தையும், மனோ பாவத்தையும் படிப்படியாகவும், மெதுமெதுவாகவும் தாக்கத் துவங்குகிறது. ஆனால் நாம் அறிகிறோமில்லை. போலி வேலை செய்பவன் தன்னை ஒருபோதும் மதித்துக் கொள்ள முடியாது. தன் மதிப்பில்லாதபோது தன்னம்பிக்கையும் பறந்தோடி விடுவது இயல்பு. அவை இரண்டும் இல்லாத இடத்தில் நிறைந்த தன்மையும் இல்லாது போய்விடுகிறது. போலி வேலை செய்யும் தன்மை நம்முடைய குருதியோடு குருதியாக ஓடி நாம் நல்ல வேலை செய்ய விரும்பிய போதிலும் அவ்விதம் செய்ய முடியாமல் நம்மை ஆக்கி விடுகிறது. போலி வேலை செய்து நம்முடைய உணர்ச்சியும் மழுங்கிப் போய் நாம் செய்யும் வேலையின் போலித் தன்மையே நமக்குத் தெரியாமல் போய்விடுகிறது. நம் தோல்விக்கான காரணத்தையும் நாம் அறிய இயலாதவர்களாய் ஆகிவிடுகிறோம்.

போலித்தன்மை நம் வாழ்வில் புக நாம் அனுமதித்து விடின், நம்மையே கொல்ல நாமே நஞ்சிட்டுக் கொண்டோம் எனபதே அதன் பொருளாகும். உரைமோர் பாலைத் கெடுத்து விடுவது போன்று அது நம்முடைய வாழ்வைக் கெடுத்து நாசமாக்கி விடுவது உறுதி.

யோக்கியர்களாய் வாழவேண்டுமென்றே நாம் படைக்கப் பட்டுள்ளோம். அதைவிட்டு நாம் மயிரிழை விலகினாலும்

போதும், நம்முடைய ஒழுக்கம் முழுவதும் பாதிக்கப்பட்டு விடுகிறது. யோக்கியத்தனம் என்றால் என்ன? அது, வார்த்தை பிரளாதிருப்பது. ஜாக்கிரதையுடன் செயலாற்றுவது என்று மட்டும் பொருள்படாது.. மற்றவர்களின் பணத்தையும், பொருளையும் களவாடாதிருப்பது மட்டும் யோக்கியத்தனம் ஆகிவிடாது. நாம் யோக்கியர்களாய் இருக்க வேண்டுமானால் மற்றவர்களின் நேரத்தையும் நாம் களவாடக்கூடாது.

ஒரு முதலாளி நமக்கு ஒரு சம்பளத்தை முடிவு செய்து நம்மை வேலைக்கமர்த்திக் கொள்கிறான் என்றால் என்ன பொருள்? அவன் தரும் சம்பளத்திற்கு நாம் நம் முழுத் திறமையையும் பயன்படுத்திப் பலன் அளிப்பதாக ஒப்பந்தம் செய்துகொள்வது என்பதேயாகும். அவ்விதம் ஒப்பந்தம் செய்துவிட்டு அவனுடைய நேரத்தை அங்குமிங்கும் கத்தரித்துக் கொண்டு போலி வேலை செய்து வருவது அயோக்கியத்தனம் இல்லையா?

டேனியல் வெப்ஸ்டர் தமக்கே தாம் வகுத்துக்கொண்ட ஒழுக்க முறை என்ன? எந்தக் காரியத்தைத் தாம் மேற்கொண்ட போதினும் அதில் தாம் முதன்மை பெற்று விளங்க வேண்டும் என்பதுதான் அது. இந்த ஒழுக்க முறையை முன்னேற விரும்பும் நீங்களும் உங்களுடையதாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

நீங்கள் எதனைச் செய்த போதினும் அதனை உங்களுடைய வன்மை அனைத்தையும் உபயோகப்படுத்தி எவ்வளவு நன்றாக செய்து முடிக்க முடியுமோ அவ்வளவு நன்றாகச் செய்து முடியுங்கள். 'போலி', இரண்டாந்தரம்' என்ற வார்த்தைகள் உங்களுடைய அகராதியில் இடம் பெற வேண்டாம். எதை செய்தாலும் மேலானதாகச் செய்யுங்கள்! மேலானவர்களுடனேயே உறவாடுங்கள்! மேலான காரியத்தையே தேர்ந்தெடுங்கள்! மேலான வாழ்க்கையையே நடாத்துங்கள்!

மிகப் பெரும் ரண மருத்துவராகிய நீலான் கூறினார்: ''ஒருவனின் உயிரைத் தீர்மானிக்ககூடிய நான்கு நிமிடங்களில் நான் ஓர் ஆபரேஷன் செய்வதாயிருந்தால் அதில் ஒரு நிமிடத்தை அதை எவ்விதம் மிகவும் மேலான முறையில் செய்வது என்பதைச் சிந்திப்பதில் செலவிடுவேன்.''

''நான் இரண்டாந்தர மனிதனாக இருக்க விரும்புகிறேன். முதல் தர மனிதனாக இருந்து மேலான பதவியையும் மேலான ஊதியத்தையும் பெற விரும்பவில்லை. இரண்டாந்தர வேலையே எனக்குப் போதுமானது'' என்று ஒருவன் கூறுவான் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. அப்படி ஒருவன் கூறினால் அவன் பைத்தியக்காரன் என்று கருதப்படுவான். ஆனால் நம்முடைய இளைஞர்களோ முதல்தரத் தன்மையை அடைய முயல்வதற்குப் பதிலாக நடுத்தரத் தன்மைக்கும், முழுத் தோல்விக்குமே தங்களைப் பழக்கப்படுத்திக் கொள்கிறார்கள். முதல்தரத் தன்மையை அடைய முயற்சி செய்யாதிருக்கும் அவர்கள் இரண்டாந்தரத் தன்மையை அடைவதில் நமக்கு எவ்வித ஆச்சரியமுமில்லை. இவ்விதமே உலகில் பெரும்பாலான மக்கள் செய்கின்றனர். எனவேதான் இரண்டாந்தர மக்கள் எங்கும் மலிந்து கிடப்பதைக் காண்கிறோம்.

நாம் எங்கும் பார்க்கினும் இரண்டாந்தர மனிதர்கள் பேனாவைப் பிடித்து எழுதும் எழுத்தாளர்களாகவே இருக்கின்றனர். தம்முடைய வேலையில் முழுக் கவனத்தையும் செலுத்தி ஆற்றல் அனைத்தையும் பயன்படுத்தி முயலாதவர்கள், கொண்ட காரியத்தை முதல் தரமாக முடித்து தீர வேணடுமென்னும் துணிவுடன் முயலாதவர்கள் வேறு எப்பதவியை அடைவர் என்று நான் கேட்கிறேன்.

எடுத்த காரியத்தில் முதல்தர வெற்றியடைய வேண்டுமென்ற துணிவில்லாதவர்கள் மட்டுமல்ல, தங்களுடைய ஆற்றலை வீணான களியாட்டங்களில் செலவழிக்கின்றவர்களும், கெட்ட பழக்க வழக்கங்களை உடையவர்

களும் ஆரோக்கியத்தைக் கவனியாதவர்களும், போதிய கல்வியைப் பெறத் தவறியவர்களும் இரண்டாந்தரப் பதவியையேயன்றி வேறொன்றையும் பெறமாட்டார்கள் என்பது உறுதி.

ஓய்வு நேரங்களில் உல்லாச சுகபோகங்களில் ஈடுபட்டு தங்களின் ஆற்றலை வீண் செலவு செய்கின்றவர்களின் நரம்புகள் தளர்வுற்று நடுக்கம் எய்துகின்றன. அவ்விதமிருக்க நாம் அவர்களிடமிருந்து எவ்விதம் முதல்தர வேலையை எதிர்பார்ப்பது? நாகரிகம் என்றால் என்னவென்றே அறியாது 'நாகரிகம் நாகரிகம்' என்று கூறிக்கொண்டு இளைஞர்கள் மூத்தவர்வர்களைக் 'காப்பி' அடித்து, சிகரெட் பிடிக்கத் துவங்கி விடுகின்றனர். இயற்கைக்கு விரோதமான, தீமை விளைவிக்கும் ஆசைகளையும் அவர்கள் உண்டு பண்ணிக்கொள்கிறார்கள்.

தன்னை உண்டுபண்ணிய மனிதனையே கொல்வதற் காக ஃப்ராங்கன்ஸ்டீன் என்ற பேய் மனிதனைத் தேடித் திரிந்தது போன்று அவர்கள் மேற்கொள்ளும் இந்தக் கெட்ட பழக்க வழக்கங்களே அவர்களின் ஆற்றலைக் குன்றச் செய்து அவர்களை எமனுலகிற்குப் பயணம் அனுப்பி வைக்கின்றன. நண்பர்களுடன் பழகும்போது சிகரெட் பிடிக்காமல் இருக்க முடியவில்லை என்று அவர்கள் கூறுகிறார்கள்.

தங்களுடைய தனித் தன்மையைப் பாதுகாக்கத் திறன் இல்லாத பலவீனர்கள் தாங்கள் என்பதைத் தங்களின் இச்சொற்கள் மூலம் அவர்கள் ஒப்புக்கொண்டு விடுவதை அவர்கள் உணர்வதில்லை. காந்தியடிகளுக்கு விருந்து வைத்தவர்கள், அவர் அருந்தும் பொருள்களையே அவர்முன் வைத்தனரேயன்றி, தாங்கள் விரும்பும் பொருள்களை அவருடைய வாயை பிளந்து கொண்டு திணிக்கவில்லை என்பதை அவர்கள் உணர வேண்டாமா?

உங்கள் மீது ஆணை செலுத்த நீங்கள் அனுமதிக்கும் ஒவ்வொரு கெட்ட பழக்கமும் உங்களை ஓர் இரண்டாந்தர மனிதனாய் ஆக்கி புகழ், பதவி, செல்வம், மகிழ்ச்சி ஆகியவற்றை அடைவதற்கான ஓட்டப் பந்தயத்தில் உங்களைப் பின்னடைய செய்து விடுகிறது. ஆரோக்கியத்தை கவனியாது விட்டுவிடுவது உங்களைப் பலவீனனாய் ஆக்கிவிடுகிறது. அதனால் ஏற்படும் உடல் பலவீனம் உங்களுடைய வேலையில் பிரதிபலிக்க தவறுவதில்லை. புத்தகங்களிலிருந்தோ தொழில் பழக்கத்தின் மூலமாகவோ போதிய கல்வி அறிவைப் பெறாதவர்களும் பின்னுக்குத் தள்ளப்படுகிறார்கள்.

தான் மனப்பூர்வமாக விரும்பினால் தன்னை முதல்தரமாக ஆக்கிக்கொள்ளக்கூடிய ஆற்றல் ஒவ்வொரு மனிதனிடமும் மறைந்து கிடக்கவே செய்கிறது. ஆனால் பெரும்பாலோர் அதனை அறியாமல் தங்களைப் பின்னுக்குத் தள்ளிக் கொள்கிறார்கள். எதிலும் முதல்தரமாக விளங்க எங்கணும் வாய்ப்புகள் கிடைக்கும் பொழுது, எங்கணும் முதலதர மனிதர் களே தேடப்படும் பொழுது, எனக்கு இரண்டாந்தரத் தன்மை பெறுவதற்கான வாய்ப்பே கிடைத்தது என்று ஒருவன் கூறும் நொண்டிச்சாக்கை நாம் ஒருபோதும் ஏற்றுக் கொள்ள முடியாது.

முதல்தரச் சாமான்கள் கிடைக்காதபொழுதும், கிடைக்கும் சாமான்களின் விலை அதிகமாயிருக்கும் பொழுதும் தான் மக்கள் இரண்டாந்தரச் சாமான்களை வாங்குகின்றனர். இரண்டாந்தரச் சாமான்களை யாரும் அதிகமாய் விரும்பாதது போன்று இரண்டாந்தர மனிதர்களையும் யாரும் அதிகமாய் விரும்புவதில்லை. உன்னதமாகச் சோபிக்க வேண்டிய எந்த வேலைக்கும் முதல்தர மனிதர்களே தேவைப்பட்டுக் கொண்டிருக்கின்றனர்.

ஸ்டீபன் பிரார்ட் என்னும் வியாபார மன்னரிடம் பென்லிப்பன் பார்ட் என்ற திறமை வாய்ந்த குமாஸ்தா வேலை

பார்த்து வந்தான். அவன் மீது ஸ்டீபன் கிரார்டுக்கு ஒரு தனி அன்பு. ஒருநாள் அவரை அணுகி, தான் சுதந்திரமாக தொழில் நடத்த விரும்புவதாகவும், தனக்கேற்ற தொழிலைத் தேர்ந்தெடுத்துத் தருமாறு அவரிடம் வினயமாக வேண்டிக் கொண்டான்.

''போய், பீப்பாய் செய்யக் கற்றுக்கொள்!'' என்றார் கிரார்ட்.

அவரின் இந்த எதிர்பாராத ஆலோசனையானது பென்னுக்கு இடி விழுந்தாற் போன்றிருந்தது, அவனது வானளாவிய மனக்கோட்டைகளெல்லாம்ஒரு நொடியில் இடிந்து விழுந்து துகள் துகளாயின. ''நீங்கள் மனப்பூர்வமாக அவ்விதம் கூறின் நான் அவ்விதமே செய்கிறேன்'' என்றான் பென்.

''நான் மனப்பூர்வமாகத்தான் கூறுகிறேன்'' என்றார் கிரார்ட்.

பென்னும் பீப்பாய் செய்யும் ஒருவரிடத்தில் திறமையுடன் வேலை பழகி தான் சுதந்திரமாய் பீப்பாய் வியாபாரம் ஆரம்பிக்கத் தகுதி பெற்றுவிட்டதாக ஒரு நாள் கிரார்ட்டிடம் கூறினான்.

''அப்படியா! நல்லது எனக்கு மேலான பீப்பாய்களாக மூன்று பீப்பாய்கள் தயார் செய்து கொண்டு வா!'' என்று கூறினார் கிரார்ட்.

அவனும் மேலான முறையில் மூன்று பீப்பாய்களைத் தயாரித்து கிரார்டின் முன் கொண்டு வந்து வைத்தான். அவற்றைப் பார்த்ததும் ''முதல்தரமானவை'' என்று கிரார்டே புகழ்ந்தார் ''அவற்றிற்கு விலை என்ன?'' என்று கேட்டார் கிரார்ட் ''ஒன்று ஒரு டாலர்'' என்று வினயமாக கூறினான் பென்.

''நிரம்பவும் மலிவாக இருக்கிறதே. சரி, அவற்றிற்கு பில் போட்டுக் கொண்டுவா! பணம் தருகிறேன்'' என்றார் கிரார்ட். பில்லை வாங்கியதும் அதை ஒருபக்கத்தில் வைத்து விட்டு பென்னிடம் இருபதாயிரம் டாலருக்கு ஒரு 'செக்' கொடுத்து ''இதை மூலதனமாக வைத்து உன்னுடைய தொழிலை

மேலான முறையில் நடத்து! எதிர்பாராதவிதம் உனக்கு நஷ்டமேற்பட்டு இதனை இழந்துவிட நேரிடினும் உன்னிடம் ஒரு பலமான கைத்தொழில் இருக்கிறது. அதைக் கொண்டு நீ மேலான வாழ்க்கை நடத்தலாம்'' என்று கூறினார் அவர்.

நீங்கள் மேற்கொள்ளும் வேலையில் முதல்தரமாக இருப்பீர்களாயின், உங்களுடைய சூழ்நிலைகளும், சுற்றுச் சார்புகளும் எவ்விதம் இருந்தபோதினும், உங்களுடைய இனம் மதம் எதுவாக இருந்தபோதினும், நீங்கள் எங்கணும் வரவேற்கப்படுவீர்கள். உங்களை எந்தச் சக்தியாலும் தாழத்திவிடமுடியாது. தாழ்த்தப்பட்டோர் குலத்தில் பிறந்த டாக்டர் அம்பேத்கார் இந்தியாவின் அரசியலை--முப்பது கோடி மக்களின் அரசியல் வாழ்வை வகுக்கவில்லையா?

பால்பண்ணை வைத்திருந்த சில அமெரிக்க முதலாளி கள் அத்தொழிலில் திறமை வாய்ந்த ஒருவரை தங்களுடைய நிலையத்தில் நிர்வாகியாக நியமிக்கத் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு தங்கள் நண்பர் ஒருவரிடம் கூறினார். அவர் ஒரு நீக்ரோவைத் தேர்ந்தெடுத்து அனுப்பினார். ஆனால் அனுப்பும் நபர் ஒரு நீக்ரோ என்பதை அவர் அந்த முதலாளிகளிடம் தெரிவிக்கவில்லை.

குறித்த தினத்தில் அந்த நீக்ரோ அவர்களின் முன் வந்து நின்றதும் அந்த வெள்ளை முதலாளிகளுக்குத் தங்களுடைய கண்களையே நம்ப முடியவில்லை. நிலையத்தின் தலைவரோ வந்த இளைஞனின் நிறத்தைப் பற்றியே முதலில் பேசத் துவங்கினார். உடனே இளைஞன், தான் வெள்ணெய் உற்பத்தி பற்றியே அவர்களுடன் பேச வந்திருப்பதாய்க் கூறினான். எவ்வளவு கூறியும் என்ன? உரையாடலானது வெண்ணெய்யிலிருந்து நிறத்திற்கும், நிறத்திலிருந்து வெண்ணெய்க்கும் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தது.

இறுதியில் முதலாளிகள் அவனைத் தற்காலிகமாகச் சிறிது காலம் வேலைக்கமர்த்திக் கொள்வதாய்க் கூறினர். ஆனால்

அவன் தயாரித்து அனுப்பிய வெண்ணெய் முன்பைவிட இராத்தல் ஒன்றுக்கு ஒரு காசு வீதம் இலாபத்தை அவர்களுக்கு ஈட்டிக் கொணர்ந்ததும் அந்த கறுப்பு நிற நீக்ரோ அரை அளவு வெளுப்படைந்து விட்டான், கறுப்பு நிறத்தவனை வெள்ளையனாக்கிய அந்த மந்திரக்கோல் யாது? அத்தொழிலில் அவன் முதல்தர மனிதனாக விளங்கியதுதான்.

எதிலும் முதல்தர முயற்சியாற்றி எந்த செயலையும் முற்ற முடிக்கும் தன்மையே வெற்றி வீரர்களின் பண்புச் சிறப்பாக விளங்கியிருக்கிறது. நம்முடைய மக்களோடு பெரிய தொந்தரவு என்னவென்றால்,அரைகுறை வேலை செய்து முதல்தரப் பலனை அடைய விரும்புவதுதான். எல்லாப் பெரு வெற்றிகளும் மிகுந்த ஜாக்கிரதை, அளவற்ற முயற்ச்சி ஆகியவற்றின் பலனே என்பதை அவர்கள் அறியவில்லை. செய்வதை திருந்த செய்வதே ஒருவனை வெற்றி வீரனாக ஆக்குவிக்கும். அஜாக்கிரதையுடன் அரைகுறை வேலை செய்வதானது ஓர் இளைஞனுடைய வாழ்க்கையை--அவன் பெர்னார்ட்ஷாவின் அறிவு படைத்திருந்தபோதினும் - பாழ்படுத்திவிடும் என்பதில் ஐயமில்லை.

உலக வரலாற்றில் நிலைத்து நிற்கும் பெரியார்களின் பெயர் அட்டவணை ஒன்று தயாரித்து அதனை ஆழந்து ஆராய்ந்து பார்த்தோமானால், அவர்களெல்லாம் ஒளிமயமாக வாழ்வைத் துவக்கியவர்களல்ல; எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடிக்கும் போராட்டம் நடத்தி முன்னுக்கு வந்தவர்கள்; கையிலுள்ள வேலையைச் செய்து முடிக்காது வேறு வேலையை ஏறிட்டும் பார்க்காதவர்கள்; செய்வனதிருந்தச் செய்தவர்கள் என்னும் உண்மையை நாம் அறியலாம்.

ஆடம்பரப் பகட்டின்றி இந்த இனிய பண்புகளை எவன் பெற்றிருக்கிறானோ அவனே பெரிய புகழுக்குரிய சாதனையை ஆற்றுகின்றவனாவான். எனவே, வருங்காலத்தில் பெருமக்களாவோரை, தன்னை சர்வகலா வல்லுவன்

என்று நினைத்துக் கொண்டும் வெற்றிபுரிக்கு குறுக்கு வழியைத் தேடிக் கொண்டும், ஆபாசப் பகட்டுகளால் மினுக்கிக் கொண்டும் திரியும் உல்லாச 'மைனர்'களின் கூட்டத்தில் நாம் ஒருபோதும் பார்க்க முடியாது.

உத்தியோகம் பெற விரும்பிய இளைஞன் ஒருவன் செல்வாக்கு அமைந்த ஒருவரிடமிருந்து சிபாரிசுக் கடிதம் பெற்று தலைமை இன்ஜினியர் பார்னஸ் முன்னிலையில் வந்து நின்றான். ''உனக்கு என்ன தெரியும்?'' என்று கேட்டார் அந்த இன்ஜினியிர் இளைஞனை நோக்கி, ''அனேகமாக எனக்கு எல்லா வேலையும் தெரியும்'' என்று பதிலலித்தான் அவன். ''நல்லது; எனக்கு அனேகமாக எல்லா வேலையும் செய்யக் கூடிய ஆள் தேவையில்லை; திட்டவட்டமாக ஒரு காரியத்தை சரியாகச் செய்யும் ஆளே தேவை'' என்று கூறித் தம்பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் பார்னஸ்.

நாம் எங்குப் பார்க்கினும் இப்படிப்பட்ட மனிதர் களையே பார்க்கிறோம். இதோ-இங்கு ஒரு வழக்கறிஞர் இருக்கிறார். அவர் சட்ட நுணுக்கங்களை அனேகமாகத் தெரிந்தவர்தாம். முழுவதும் தெரிந்தவரல்லர். அதோ அங்கு ஒரு மருத்துவர் இருக்கிறார். அவருக்கு மருத்துவ நுட்பங்கள் அனேகமாகத் தெரியுமேயன்றி, முழுவதும் தெரியாது.

அப்படிப்பட்ட மனிதர்கள் எந்தகாரியத்தை மேற்கொண்ட போதிலும் அதனைச் சரியாகச் செய்து முடிப்பதில்லை. ஒரு கல்வியைக் கற்றால் அதனை முழுவதும் கற்பதுமில்லை. வெற்றி கிடைக்கும் தருவாயில் அதனை விட்டுவிட்டு அவர்கள் வேறு வேலைக்குப் பாய்ந்து விடுகிறார்கள்.

வாஷிங்டனிலுள்ள ரிஜிஸ்ட்ரேஷன் ஆபீஸில் உபயோகத்திற்குதவாத, அனுபவ சாத்தியமற்ற ஆயிரக்கணக் கான புது இயந்திரங்களின் மாதிரிகள் குவிந்து கிடக்கின்றன; அவற்றை கண்டு பிடித்தவர்கள் சிறிது பொறுமையுடன்

செயலாற்றியிருப்பின் அவற்றால் அவர்களுக்கு மட்டுமல்ல, மனித வர்க்கத்திற்கு எவ்வளவு பலன் ஏற்பட்டிருக்கும்!

ஆங்கில இலக்கிய மேதை கால்ரிட்ஜுக்கு அபார அறிவு இருந்தும் எந்த வேலையையும் முற்றமுடிக்கும் திறன் இல்லாது போய்விட்டது. அதன் பலன் என்ன? அதைப் பற்றி சார்லஸ் லேம்ப் தம்முடைய நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

''கால்ரிட்ஜ் இறந்துவிட்டார். அவர் தத்துவார்த்தம் பற்றி நாலாயிரம் ஆராய்ச்சிக் கட்டுரைகளை விட்டுச் சென்றிருக்கிறார். ஆனால் அவற்றில் ஒன்றுகூட முடிவாக எழுதப்படவில்லை.''

இதைக் கேட்டு யார்தான் கண்ணீர் வடிக்காமலிருக்க முடியும்! அவர் இறந்து விட்டாரே என்றல்ல. அரைகுறை வேலை செய்து தம்முடைய வேலைகளைப் பாழாக்கி விட்டாரே என்று!

'அனேகமாக' என்னும் சொல்லானது அபாயகரமான சொல்லாகும். எடுத்த காரியத்தை முற்ற முடிக்கச் செய்யாது ஒருவனைஅரைகுறை வேலை செய்யச் செய்து தோல்விப் படுகுழியில் தள்ளுவது அந்தச் சொல்தான். அனேகமாக ஒரு செயலைச் செய்தல், அனேகமாக ஒரு பாடத்தை படித்தல் ஆகியிவைதாம் ஒரு மனிதனை தன்னுடைய லட்சியத் துறை முகத்தை அடையச் செய்யாது, அதனை வெகுதூரத்தில் கண்டதும் திருப்திஅடையச் செய்து விடுகிறது.

மந்தையிலிருந்து விலகி ஓடிவிட்ட ஓர் ஆட்டைப் போய்த் தேடிக் கண்டுபிடித்துக்கொண்டு வருமாறு தந்தை ஒருவர் தம் மகனை வெளியே அனுப்பி வைத்தார். அவன் திரும்பி வந்ததும் ''ஆட்டைக்கண்டாயா?'' என்று கேட்டபொழுது, ''ஆம், அனேகமாக கண்டேன்'' என்றானாம். அதுபோன்றே அனேகமாக ஒரு காரியத்தை செய்பவர்களின் நிலையும் இருக்கும்.

எனவே, நீங்கள் எந்தக் காரியத்தைச் செய்த போதிலும் அது உங்களுடைய கையை விட்டு வெளியாகும்பொழுது தன்னிகரற்று விளங்க வேண்டும் என்னும் சட்டத்தை உங்களுக்கே நீங்கள் பிறப்பித்துக் கொள்ளுங்கள். உங்களுடைய மனிதத்தன்மையை அதில் பொறித்து விடுங்கள்! மேலான தன்மையே உங்களுடைய வியாபாரக்குறியாய் (Trade Mark) இருக்கட்டும்; அந்தத் தன்மையே உங்களுடைய மாபெரும் மூலதனமாகும்.

கடிகார உற்பத்தியில் க்ரஹாம், டம்பியன் ஆகியவர்களின் பெயர்கள் உன்னத இடம் பெற்றிருக்க காரணம்என்ன? அவர்கள் செய்த கடிகாரத்தின் உயரந்த தரம் தான்.

க்ரஹாமிடமிருந்து கடிகாரம் ஒன்றை விலைக்கு வாங்கிய ஒருவர், ''எவ்வளவு காலத்திற்குஇது ஒழுங்காக நேரம் காட்டும்?'' என்று கேட்ட பொழுது க்ரஹாம், ''நீங்கள் எங்கு வேண்டுமானாலும் அதனை எடுத்துச் செல்லுங்கள்! ஏழு அண்டுகள் கழித்து நீங்கள் என்னைப் பார்க் வரும்போது கடிகாரத்தில் ஐந்து நிமிட நேரம் வித்தியாசம் இருப்பதாக நீங்கள் கூறின் பணத்தை நான் வாபஸ் தந்து விடுகிறேன்'' என்று கூறினார்.

ஏழு ஆண்டுகள் கழித்து அந்த மனிதர் இந்தியாவிலிருந்து திரும்பினார். ''நீங்கள் கூறிய பிரகாரம் ஏழு ஆண்டுகள்இந்த கடிகாரத்தை உபயோகித்து வந்தேன். அதில் ஐந்து நிமிட நேரம் வித்தியாசம் இருக்கிறது'' என்று கூறினார் க்ரஹாமை நோக்கி, ''அப்படியா? அப்படியானால் இதோ உங்களுடைய பணம். வாங்கிக் கொள்ளுங்கள்'' என்று பணத்தை நீட்டினார் க்ரஹாம். ''நான் தந்தது போன்று இருபது மடங்கு பணம் தந்தாலும் கடிக்காரத்தை வாபஸ் தர முடியாது'' என்றார் கடிகாரத்தின் சொந்தக்காரர். ''எக்காரணத்தை முன்னிட்டும் என்னுடைய வாக்கை மாற்ற முடியாது'' என்று அடம் பிடித்தார்

க்ரஹாம். பணத்தைக் கொடுத்து கடிகாரத்தை திரும்ப வாங்காமல் விடவில்லை அவர்.

தம்முடைய வேலையில் அணுவத்தனையும் தவறு நிகழக் கூடாது என்பதில் க்ரஹாம் கொண்ட அக்கறையைக் கவனித்தீர்களா? அவ்விதமானால் அவருடைய பெயர் உயர் தன்மையுடன் சம்பந்தப்பட்டிருப்பதில் வியப்பு என்ன? அவர் செய்த கடிகாரம்தான் க்ரீன்விச்சிலுள்ள காலநிலை அறிவதற்கான செயலகத்தில் சென்ற இருநூறு ஆண்டுகளாக எவ்விதக் கோளாறுமின்றி வேலை செய்து வருகிறது.

எவனோ ஒருவன் டம்பியனுடைய பெயரைத் தான் செய்த போலிக் கடிகாரத்தில் பொறித்தான், அநதக் கடிகாரத்தைப் பழுது பார்ப்பதற்காக டம்பியனிடம் ஒருவர் கொண்டு வந்ததும் டம்பியனுக்கு ஏற்பட்ட கோபத்திற்கு அளவில்லை. கையிலுள்ள சுத்தியால் அதை ஓங்கியடித்துச் சுக்கு நூறாக்கினார் அவர். அதன்பின் தம்முடைய கடிகாரத்தில் ஒன்றை எடுத்துக் கொடுத்து ''ஐயா! இதுதான் நான் செய்த கடிகாரம். எடுத்துச் செல்லுங்கள்!'' என்று கூறினார்.

ஒரு கிராமத்தில் மாதா கோவில் கட்டுவற்காக வந்திருந்த அயலூர் தச்சன் ஒருவன் அவ்வூர் கொல்லனிடம் சென்று, ''இங்கு வேலைக்கு நாங்கள் ஆறு பேர் வந்திருக்கிறோம். ஆனால் நான் என் சம்மட்டியை வீட்டிலேயே மறந்து வைத்துவிட்டு வந்துவிட்டேன். ஆகையினால் உன்னுடைய திறமையையெல்லாம் உபயோகப்படுத்தி ஒரு நல்ல சம்மட்டி தயார் செய்து தா!'' என்று கூறினான். ''நல்ல சம்மட்டி வேண்டுமென்பீர்கள். ஆனால் அதற்குரிய பணம் தான் கொடுக்கமாட்டீர்கள்'' என்றான் கொல்லன். ''இல்லை; நல்ல விலை தருகிறேன்! சம்மட்டிமாத்திரம் நல்லதாக இருக்கட்டும்'' என்றான் தச்சன்.

கொல்லனும் தன்னுடைய திறமையையெல்லாம் பயன்படுத்தி நூதனமான சம்மட்டி ஒன்றைச் செய்து

கொடுத்தான். இதைப் பார்த்ததும் அந்தத் தச்சனுடன் வேலை செய்த மற்ற தச்சர்களெல்லாம் ஆளுக்கொரு சம்மட்டிக்கு ஆர்டர் கொடுத்தார்கள்.

அந்த மாதா கோவிலைக் கட்டி முடிக்க ஒப்பந்தம் செய்து கொண்ட முதலாளியும் தமக்கு இரண்டு சம்மட்டிகள் வேண்டுமென்றும், ஆனால் அவை மற்றவர்களுடையதை விட மேலானவையாக இருக்கவேண்டும் என்றும் கூறினார். உடனே கொல்லன், ''நான் தங்களுக்காக வேண்டி அவற்றை மேலானவையாகச் செய்ய முடியாது, ஏனெனில் நான் ஒன்றைச் செய்தேனேயானால் அது யாருக்காக இருந்த போதினும் சரி என்னால் இயன்றவரை மேலானதாகவே செய்கிறேன்'' என்று கூறினான்.

இதன்பின் அவனுடைய சம்மட்டிக்கு ஏற்பட்ட கிராக்கி கொஞ்சமல்ல. நியூயார்க்கிலிருந்து வந்த வணிகர் ஒருவர் ஏராளமான சம்மட்டிகளுக்கு அவனிடம் ஆர்டர்கொடுத்தார்.

நாளாவட்டத்தில் அது உலகம் முழுவதும் பிரபல்யமாகி விற்பனையாயிற்று. எக்காலத்திலும் தம்முடைய சம்மட்டியின் தரம் குறைந்துவிட அவன் அனுமதிக்கவில்லை. ஒவ்வொரு நிமிடமும் அதனை எவ்விதம் அபிவிருத்தி செய்வது என்பதிலேயே அவன் தன்னுடைய கருத்தனைத்தையும் செலவழித்தான். சம்மட்டியின் மீது மேடோம் என்ற வார்த்தை பொறிக்கப்பட்டிருப்பதைப் பார்த்ததும் - அதுவே அவன் பெயர்-மக்கள் கண்ணை மூடிக்கொண்டு அவற்றை வாங்கத் தலைப்பட்டார்கள்.

மேடோம் தன்னுடைய வரலாற்றைக் கூறுகிறான் கேளுங்கள்.

''நான் இந்தச் சிற்றூரில் இருபத்தெட்டு ஆண்டு காலமாகச் சம்மட்டிகள் செய்து வருகிறேன். நல்ல சம்மட்டியை நான் செயவதில்லை. உலகில் இதுவரை

செய்யப்பட்டுள்ள சம்மட்டிகளை எல்லாம் விட மிகவும் மேலான சம்மட்டியைத் தான் நான் செய்கிறேன். சிறந்த சம்மட்டியைச் செய்வதுதான் என்னுடைய ஒரே நோக்கம். மக்களுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவுதான் நான் தயார் செய்கிறேன். அவற்றை நல்ல விலைக்கு விற்பனை செய்கிறேன் என்னுடைய சம்மட்டிக்குரிய விலை கொடுத்து வாங்க விரும்பாதவர்கள் எங்கிருந்தாவது மலிவான சம்மட்டியைத் தாராளமாக வாங்கிக் கொள்ளட்டும். என்னுடைய தேவைகளோ சொர்பம். சம்மட்டிகளைச் செய்யும் எண்ணமே என் மூளையில் தோன்றுவதற்கு முன்னால் நான் நாற்பதாண்டுகளுக்கு முன் வேலை செய்துவந்த அந்தக் கொல்லுப் பட்டறைக்குச் சென்று வேலை செய்ய நான் எந்தக் கணத்திலும் தயார். துருத்தியை ஊத அப்பொழுது ஒரே ஒரு பையனைத்தான் அமர்த்தியிருந்தேன். இப்பொழுதோ அந்த இடத்தில் நூற்றுப் பதினைந்து பேர் வேலை செய்கிறார்கள்.''

ஏழாயிரம் பேர் வேலை செய்யக் கூடிய ஒரு பெரிய தொழிற்சாலையின் அதிபர் இவ்வாறு கூறினார். ''எங்களிடம் எவ்வித ரகசியமும் கிடையாது. நாங்கள் கடைசியாகச் செய்த வேலையைத் தோற்கடித்து அதை விட மேலான வேலையைச் செய்து முடிக்க எப்பொழுதும் முயன்று கொண்டிருக்கிறோம். எங்களிடமுள்ள இரகசியமெல்லாம் இதுதான்.

பலர் தங்களுடைய உற்பத்திப் பொருள்களை உரிமைப் பதிவு செய்துகொள்வதற்கு தங்களுடைய பணத்தையும் நேரத்தையும் ஏராளமாகச் செலவழிக்கின்றனர். தங்களுடைய தசைகளாலும் மூளைகளாலும் செய்த வேலைகளை மற்றவர்கள் காப்பி அடித்துவிடுவார்களோ என்று பயந்துதான் அதனைப் பாதுகாக்க எவ்வளவோ முயற்சி எடுத்துக் கொள்கின்றனர். ஆனால் அவற்றைப் பாதுகாக்க ஒரு வழி என்ன வெனில் மற்றவர்களை விட மேலான முறையில் தங்களுடைய சாமான்களைச் செய்து முடிப்பதுதான்.

மற்ற புல்லாங்குழல் உற்பத்தியாளர்கள் ஒரு வாரத்தில் பல புல்லாங்குழல்களைச் செய்யும்பொழுது ஸ்ட்ராடி வேரியஸ் ஒரு புல்லாங்குழலைச் செய்வதற்குப் பல வாரங்களையும் செலவிடுவார்; சில மாதங்களையும் செலவிடுவார். இதைப் பார்த்துப் பலர் நகையாடுவது உண்டு. ஆனால் அவர் தம்முடைய பெயரைப் புல்லாங்குழலின் 'வியாபாரக்குறி' ஆக்கத் தீர்மானித்துவிட்டார் என்பது போலிப் புல்லாங்குழல் உற்பத்தியாளர்களுக்கு எப்படி விளங்கும்?

போலிச் சாமான்களை உற்பத்தி செய்யும் அல்லது, விற்பனை செய்யும் மனிதர்களையோ, கடைகளையோ நாம்வெறுக்கிறோம். உயர்ந்தரகச் சாமான்களை உற்பத்தி செய்யும் அல்லது விற்பனை செய்யும் மனிதர்களையோ, கடைகளையோ நாம் மதிக்கிறோம். அவர்கள் அல்லது அவை எங்கிருந்த போதினும் பெருமையுடன் கருதப்படுகிறார்கள், கருதப்படுகின்றன. ஏனெனில் உண்மைதான் நீடித்து உலகில் நிற்க முடியுமேயன்றி பொய் ஒருபோதும்அப்படி நிற்க முடியாதல்லவா?

உயர்தரச் சாமான்களை உற்பத்தி செய்து விற்பனை செய்கிறவர்களின் பண்பையும் கவனித்துப் பாருங்கள்! போலிச் சாமான்களை உற்பத்தி செய்து விற்பனை செய்கிறவர்களின் பண்பையும் கவனித்துப் பாருங்கள்! இருவர் பண்பிலும் எவ்வளவு மாறுபாடு உண்டு என்பது உங்களுக்குத் தெரியவரும். சிவப்பு நிலத்தில் பெய்த மழைத் தண்ணீர் சிவப்பு நிறமாக இருக்காது என்ன செய்யும்?

ஆதலின் ஒரு செயல், செய்வதற்குத் தகுதி உடையது என்று நீங்கள் கண்டாலொழிய அதனை ஒருபோதும் செய்யதீர்கள்! உங்களுக்குத் தவறென்று தோன்றும் செயலைச் செய்யுமாறு எந்த முதலாளியும் உங்களைக் கட்டாயப்படுத்துவதற்கு உங்களை நீங்கள் அனுமதித்துவிட வேண்டாம்!

மெர்ரி மாக் ஆற்றங்கரையில் லவல் என்னும் நகரம் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. தண்ணீரைத் தேக்கி சீராகச் செலவழிப்பதற்கான அணைகளும், வாய்க்கால்களும் அதில் கட்டப்பட்டுக் கொண்டிருந்தன. அந்த வேலையைத் திறம் படச் செய்யும் இஞ்சினியர் அக்காலத்தில் அமெரிக்காவில் இல்லை. ஆதலின் இங்கிலாந்திலிருந்து பிரான்ஸிஸ் என்னும் இளம் இன்ஜினியர் வரவழைக்கப்பட்டார். அவர் முன்பு செய்யப்பட்டிருந்த வேலைகளைக் கவனித்தார். அறுபது ஆண்டுகளுக்கு முன் அந்தப் பள்ளத்தாக்கில் ஒரு பெரிய வெள்ளம் ஏற்பட்டிருந்ததையும் அவர் கேட்டுணர்ந்தார். உடனே அந்த நிர்மாண வேலையில் ஈடுபட்டிருந்த கம்பெனி டைரக்டர்களிடம் சென்று, ''கனவான்களே! நீங்கள் லவல் நகரையும் அங்குள்ள அணைக்கட்டு, கால்வாய் ஆகிய வற்றையும் இடித்துவிட்டு திரும்பக் கட்டவேண்டும்'' என்று கூறினார்.

''அது எப்படி சாத்தியமாகும்? நாங்கள் இதுவரை ஏராளமான பணம் செலவழித்திருக்கிறோமே. அவையெல் லாம் வீண் நஷ்டமாகிவிடுமே!'' என்றனர் கம்பெனி டைரக்டர்கள்.

''அவ்விதமானால் கனவான்களே! என்னுடைய ராஜினா மாவை இந்தக் கணமே ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று சட்டெனப் பதில் மொழிந்தார் பிரான்ஸிஸ்.

அவருடைய இந்த எதிர்பாராத பதில் டைரக்டர்களைத் தூக்கி வாரிப்போட்டது. அவர்களும் பிரான்ஸிஸின் ஆலோசனைப்படி செயலாற்ற இணங்கினர். நகர் முழுவதும் புனர் நிர்மாணம் செய்யப்பட்டது. ஓராண்டுக்குப்பின் வெள்ளம் வந்தபொழுது குன்றென நிமிர்ந்து நின்றது லவல் நகரம். முந்திய மாதிரி அது நிர்மாணிக்கப்பட்டிருப்பின் லவல்நகரும் அதன் மக்களும், அணைக்கட்டுகளும், கால்வாய்களும் வெள்ளத்திற்கு இரையாகியிருக்க வேண்டி யதுதான்.

எந்த காரியத்தையும் தன் முழு முயற்சியைப் பயன்படுத்தி எவன் திறமையுடன் செய்கிறானோ அவன் ஒருபோதும் நிலை தவறுவதில்லை. அவன் பயப்பட வேண்டிய விஷயமும் ஒன்றும் கிடையாது. அவன் உலகத்தை நேருக்கு நேராகப் பார்க்கிறான். ஏனெனில் மோசடி வேலை செய்ததன் காரணமாக அவன் தலைகுனிய வேண்டிய அவசியமு மில்லை. தான் தன் தொழிலின் முதலாளி, எந்த விதமான திடீர் வாய்ப்புகளையும் சமாளிக்கும் தகுதி வாய்ந்தவன், மிகவும் மேலான வேலை செய்யும் திறன் வாய்ந்தவன் என்னும் எண்ணமே அவனுக்கு மகத்தான ஆத்ம திருப்தியை அளிக்கிறது. அவ்வித ஆதம் திருப்தியை ஒரு போலி வேலைக் காரனால் கனவில் கூடக் கருதிப் பார்க்க முடியாது.

எந்த வேலையையும் திறம்பட முடிக்கும் வழக்கமுடை யவன் அந்த வேலையை முற்ற முடித்ததும் அடையக்கூடிய திருப்தியையும் மகிழச்சியையும் நாம் என்னென்போம்! அந்தத் திருப்தியும், மகிழ்ச்சியுமே அவனை மற்ற வேலைகளைத் திறம்பட முடிக்குமாறு ஊக்கமும், உற்சாகமும் அளிக்கும் அருமருந்தாக விளங்குகின்றன. அதன் காரணமாக அவனு டைய ஆற்றல்கள் அனைத்தும் பூரண வளர்ச்சியடைகின்றன. அவன் செய்யும் ஒவ்வொரு வேலைக்கும் தங்களின் மாசற்ற ஆதரவை நல்கி ''ஆமீன்'' கூறுகின்றன. மனிதனின் இந்நிலை யையே உண்மையான வெற்றி, உண்மையான மகிழச்சி என்று நான் கூறுவேன்.

ஆனால் வெற்றியையும், மகிழ்ச்சியையும் கொல்லக் கூடிய நச்சுப்பூச்சி எதுவெனில், எந்த வேலையையும் அரைகுறையாகச் செய்வதுதான்; நம்முடைய வேலையைப் பிறர் பார்க்கிறார்களோ இல்லையோ, அதைப் பற்றி நமக்குக் கவலை இல்லை. நம்முள்ளே உள்ள ஏதோ ஒன்று ஒழுங்கான வேலையை 'சரி' என்றும் ஒழுங்கற்ற வேலையைத் 'தவறு' என்றும் கூறிக்கொண்டிருக்கிறது!

நாம் ஒழுங்கற்ற வேலையைச் செய்தபொழுது, 'நீ செய்தது தவறு, தவறு' என்று ஆயிரம் முறை அலறிக் கொண்டிருக்கிறது. உலகம் முழுதும் நம்மைக் கரகோஷம் செய்து வரவேற்கின்றபோதும், பத்திரிகைகள் முழுதும் நம்மை வானளாவப் புகழ்கின்றபோதும், அந்தச் சிறிய குரல் நமக்குள்ளே இருந்துகொண்டு 'நீ தோல்வி அடைந்து விட்டாய்!' என்று கூறிக்கொண்டிருக்கிறது. அச்சிறு குரலை நீங்கள் செவிமடுத்துச் செயலாற்றினீர்களா? உலகத்தினரின் கைதட்டலையும், புகழ் மாரியையும் விட உங்களுக்கு நெருக்கமானதும் விருப்பமானதுமான ஒன்றே ஒன்று என்ன வெனில் நீங்கள் செய்யும் காரியத்திற்கு உங்களுடைய சம்மதத்தைப் பெறுவது தான் என்பதை நீங்கள் அறிய வேண்டாமா? நீங்களே உங்களை மதிக்காத பொழுது பிறர் உங்களுக்கு அளிக்கும் மதிப்பானது நகைப்பிற்கு இடமான தல்லவா?

ஆதலின் நீங்கள் எந்த வேலையைத் துவக்கியபோதினும் அதில் உங்களுடைய மனிதத்தன்மையின் அடையாளத்தைப் பதித்துவிடுவீர்களேயானால், நீங்கள் உங்களுடைய இதயத்தையும் மன சாட்சியையும் அதில் வைத்துவிடுவீர்களே யானால், அதே வேலைக்கு உரிமைப் பதிவும் தேவை இல்லை. விளம்பரமும் தேவை இல்லை. நீங்கள் உங்களு டைய வேலையில் முழுமனதையும் செலுத்து வீர்களே யானால் உங்களுக்கு அதைச் செய்து முடிக்கச் சொற்ப ஊதியமே கிடைத்த போதிலும் நீங்கள் வெகு விரைவில் முன்னேறி விடுவீர்கள்.

நீங்கள் பெறும் ஊதியம் எவ்வளவு குறைவானதாக இருந்த போதினும் அதற்காக போலி வேலையை ஒருபோதும் செய்யாதீர்கள். சிலர் கூறுவர், ''போதிய சம்பளம் தருவ தில்லை. அதனால் வேலையை நான் ஒழுங்காக செய்வ தில்லை என்று'' இவ்வாறு சம்பளத்திற்குத் தக்கவாறு வேலை

செய்பவர்கள் ஒரு போதும் உருப்பட மாட்டார்கள். சபிக்கத் தகுந்த இந்தச் சுபாவமே கோடானு கோடி மக்களைத் தோல்விப் படுகுழியில் தள்ளியிருக்கிறது.

''நீ என்ன பெரிய முட்டாளாயிருக்கிறாய்! உனக்குத் தருவதோ சொற்ப சம்பளம். அதற்காக நீ ஏன்இவ்வளவு பெரிய முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும்? நான் சொற்ப வேலையைச் செய்து நிறையச் சம்பளம் பெறுகிறேன்.'' என்றான் ஒரு தொழிலாளி மற்றொரு தொழிலாளியைப் பார்த்து;

''இருக்கலாம், ஆனால் நான் என்னை அதிகமாக மதிக்கிறேன். அந்தத் தன்மதிப்பே எனக்குப் பணத்தைவிட மிகவும் முக்கியமானது'' என்று பளிச்சென்று பதிலுரைத்தான் அந்தத் தொழிலாளி. அவன் கூறிய சொற்களிலிருக்கும் கருத்தை ஆழந்து சிந்தித்துப் பாருங்கள்.

தான் செய்யும் வேலையின் தரத்தை தான் பெறும் ஊதியமானது பாதிக்க ஒருபோதும் ஒருவன் அனுமதிக்கக் கூடாது. வேலை வேறு, ஊதியம் வேறு. வேலையானது ஒருவனுடைய மனிதத் தன்மையைப் பொறுத்த விஷயம். சொற்ப ஊதியமே கிடைக்கிறது என்று போலி வேலை செய்து தன்னுடைய மனிதத் தன்மையை மாசுபடுத்திக் கொள்ள ஒருவனுக்கு என்ன உரிமை இருக்கிறது? உலகில் இயற்றப் பட்டிருக்கும் பெருபாலான பெரும் வேலைகளுக்குச் சொற்ப ஊதியங்களே அளிக்கப்பட்டிருக்கின்றன என்பதை அவன் உணர வேண்டாமா?

''அது நன்றாகவே இருக்கிறது. அதில் அதிக நேரத்தை செலவிட வேண்டாம்! அந்த நேர வேலைக்காக அதிகச் சம்பளம் தர எங்களுக்கு கட்டாது'' என்று முதலாளி கூறிய போதினும் எடுத்த வேலையை அழகுற முற்ற முடிப்பதிலேயே ஈடுபட்டிருந்தான் ஓர் இளைஞன். தன் கைப்பட்ட வேலையை அரைகுறையாகச் செய்து முடிப்பது என்னும் வழக்கமே அவனிடம் அறவே கிடையாது. எப்பொருளும் முழுத்

தன்மையுடன் தான் அவனுடைய கையிலிருந்து வெளிவரும். அதுவே அவனுடைய நீங்காத வழக்கமாக இருந்தது. பலன் என்ன? சில ஆண்டுகளில் அவன் மிகப் பெரும் பதவியில் நியமிக்கபட்டான். அவன் கீழ் நூற்றுக்கணக்கான பேர் வேலை செய்யலானார்கள்.

எவன் ஒருவன் அணுவத்தனை வேலையையும் சரியாகச் செய்து முடிக்கிறானோ, தன் முதலாளியிடம் தான் பெறும் சம்பளத்திற்கு எவ்வளவு குறைவாக அல்ல; எவ்வளவு அதிகமாக பிரதிபலனை அளிக்க முயல்கிறானோ அவன், சூரியன் உச்சநிலையை எய்துவது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயமாக வாழ்வில் உச்ச நிலையை அடைவான்.

நல்லவேளை, தன்னுடைய வெற்றிப் பாதையைத்தானே வகுத்து கொண்டு செல்கிறது. ஐந்து ரூபாய் ஊதியத்திற்கு ஐம்பது ரூபாய் வேலை செய்தாலும் உங்களுக்கு எவ்வித நஷ்டமுமில்லை; அதனால் பேரூதியமே உங்களுக்கு என்று நான் கூறுவேன். அவ்வேலை உங்களுடைய மதிப்பை உலகம் முழுவதும் விளம்பரப்படுத்தவில்லையா? பெரிய சம்பளம் வாங்கிக்கொண்டு போலி வேலை செய்யும் பலர் தாங்களே பெரிய திறமைசாலிகள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் நினைக்கும் அவர்கள் தங்களின் அழிவையே தேடிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அவர்கள் அறிகின்றார்களில்லை.

நீங்கள் மட்டும் உங்களுடைய வேலையைத்திறம் படச் செய்யின் உங்களுடைய முதலாளி நிச்சயம் அதைக் கவனிப்பார். ஒருவேளை அவர் அதைக் கவனிக்க இயலாத அளவு அசடராக இருப்பின், உங்களுடைய வேலை பக்கத்திலுள்ள மற்ற முதலாளிகளின் கண்களை உங்கள் பக்கம் இழுத்துவிடும் என்பதில் ஐயமுமில்லை.

''நான் என்னுடைய வேலையில் மதிமயங்கியிருக்கிறேன். ஒவ்வொரு நாள் காலையிலும் நான் என் வேலையைச்

செய்யத் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறேன். இருட்டியதும் எப்படி ஒரு பிறவி ஓவியன் தன்னுடைய தூரிகையை வேண்டா வெறுப்பாகக் கீழேவைப்பானோ, அதே மாதிரியே நான் என்னுடைய வேலையை விட்டுச் செல்கிறேன்'' என்று ஓர் இளைஞன் கூறினான். இவ்விதக் குண ஒழுக்கமுடைய இளைஞன் எப்படியும் முன்னுக்கு வந்துவிடுவான். அவன் இறுதியில் பொறுமையுடன் செய்யும் சிறு சிறு வேலைகள் அவனை அந்த வேலையில் நிபுணனாக ஆக்கிவிடும்.

புகழபெற்ற ஓவியர் ஒருவர் போலிவேலையைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார். பார்த்தால் கூட அந்தப் போலித்தன்மை தன்னை அணுகிவிடும் என்று பயப்படுவார். ஆகையால் நீங்களும் வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால் மேலான விஷயங்களுடனும் மேலான மனிதர்களுடனும் தொடர்பு கொள்வீர்களாக! மேலான எண்ணங்களையே எண்ணி வருவீர்களாக! அந்த எண்ணமே உங்களுடைய வேலைகளிலும் ஒளிவிட்டு விளங்கட்டும். எந்த வேலையையும் மேலெழுந்தவாரியாகக் கவனியாதீர்கள்! அவனுடைய ஒவ்வொரு மூலைமுடுக்குக்கும் அதலபாதாளத் திற்கும் செல்லுங்கள்! அவ்விதம் செல்வீர்களேயானால் நீங்கள் உங்களையறியாமலேயே அதன்மேலே வந்து அதன் அரசனாக ஆட்சி செய்யத் துவங்குவீர்கள்!



பொருளடக்கம்

# 6. ஒழுங்குடன் வேலை செய்க!

உலக வரலாற்றை பார்த்தோமானால் வாழ்க்கையில் முன்னேறி வாகை சூடியவர்களெல்லாம் ஒரு நேரத்தில் ஒருவேலை என்னும் தத்துவத்தையே பின்பற்றினார்கள் என்பதை அறியலாம். நெப்போலியன் கூறினார் :

''எனது மூளையில் பல அலுவல்கள் ஒழுங்காகவும், வரிசையாகவும் தனித்தனியே புறாக்கூண்டின் அறைகள் போல் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஓர் அலுவலை மறந்து மற்றொன்றைச் சிந்திக்க வேண்டின் முந்தைய அறையினை மூடிப்பிந்தைய அறையினைத் திறந்து கொள்வேன். இவை இரண்டும் ஒன்றோடொன்று கலப்பதுமில்லை; எனக்கு களைப்பைத் தருவதுமில்லை. வீண் சிந்தனைக்கு எனது மூளையில் இடமே கிடையாது. உறங்க விரும்பும்பொழுது எல்லா அறைகளையும் மூடிவிடுவேன். உடனே அயர்ந்து தூங்குவேன்.''

முதல் உலகப் பெரும்போரின் போது பிரிட்டிஷ் முதலமைச்சராயிருந்த லாயிட் ஜார்ஜ் போர் அரங்கிற்குச் சென்று அங்கு ஓரிடத்தில் அமர்ந்து சிலருடன் சீட்டாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒருவர் கேட்டார், ''இவ்வளவு பெரும் பொறுப்பைத் தாங்கி நிற்கும் தாங்கள் எப்படி உல்லாசமாக வீற்றிருந்து சீட்டாட முடிகிறது?'' என்று. உடனே லாயிட் ஜார்ஜ் கூறிய பதில், ''வேலை செய்யும் பொழுது வேலை, விளையாடும்பொழுது விளையாட்டு'' என்பதுதான்.

ஆனால் நாம் என்ன செய்கிறோம்? சாப்பிடும்பொழுது உணவை நன்கு சுவைத்துச் சாப்பிடுவதற்குப் பதிலாக நம் முடைய வரவு செலவு கணக்கைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம். அலுவலக வேலைகளை ஆற்றும் பொழுது வீட்டு விவகாரங்களைப்பற்றி நினைத்து மூளையை குழப்பிக் கொண்டிருக்கிறோம். தொழும்பொழுது இறை வனின் சந்நிதானத்தில் மெய்மறந்து தியானத்தில் ஈடுபடுவதற்குப் பதிலாக எண்ணத் தொலையாப் பிரச்சினை களைப்பற்றி எண்ணத் துவங்கி விடுகிறோம்.

''ஒரு சமயத்தில் ஒரு காரியத்தை உடனே செய்து முடிப்பதுதான் பல காரியங்களைச் செய்வதற்கான குறுக்கு வழியாகும்'' என்று கூறினார் ரெவரண்ட் நிக்கர்ட் ஸெஸில். மேலும் அவர் கூறினார்; ''ஒழுங்கு என்பது ஒரு பெட்டியில் சாமான்களை அடுக்கி வைப்பது போலாகும். நன்றாக சாமான்களை அடுக்கிவைப்பவன் தவறாகச் சாமான்களை அடுக்கி வைப்பவனைவிட அரை மடங்கு அதிகமான சாமான்களை அதே பெட்டியில் அடுக்கி வைத்துவிடுவான்.''

இவ்வாறு கூறிய ஸெஸில் செயலிலும் அதனைக் காட்டினார். அதிக அவகாசம் கிடைக்கும் நேரத்தில் செய்து முடிப்போம் என்று அவர் ஒருபோதும் எந்த வேலையையும் செய்து முடிக்காது விட்டதில்லை. அதிகமாக வேலைகள் வந்துவிடும் பொழுது தம்முடைய சாப்பாடு நேரத்தில் ஒரு பாகத்தை எடுத்தாவது கையிலுள்ள வேலைகளை முடித்துவிடுவார் அவர்.

டிவிட்டினுடைய நீதி உரையும், 'ஒரு நேரத்தில் ஒரு வேலை' என்பதாகவே இருந்தது. அவர் கூறினார்; ''நான் சில முக்கிய காரியங்களை ஆற்ற வேண்டியிருப்பின் அவற்றை முடித்துத் தீரும் வரையில் நான் வேறொன்றையும் பற்றி எண்ணுவதே இல்லை. குடும்பக் காரியங்களைக் கவனிப்ப

தாயிருந்தாலும் அவற்றை ஒழுங்குபண்ணும் வரையில் நான் அதில் முற்றிலும் ஈடுபட்டிருப்பேன்''

இவ்வாறு ஒரு நேரத்தில் ஒரு வேலை என்னும் ஒழுங்குச் சட்டத்தைத் தங்களுக்குத் தாங்களே பிறப்பித்துக்கொண்டு யார் மனமொன்றி வேலை செய்கிறார்களோ அவர்களே வாழ்க்கையில் முன்னேற்றமடைவார்கள். அவர்கள் அவசரப்படவும் மாட்டார்கள்; ஆத்திரப்படவும் மாட்டார்கள். கடிகாரம் போன்று அவர்களுடைய வாநாள் கழிந்து கொண்டிருக்கும். அவர்கள் தங்களுடைய வாணாளுக்குள் மாபெரும் செயல்களை நிறைவேற்றி வெற்றி கண்டு விடுவர். தங்களடைய நேரத்தை அந்த அந்தக் காரியங்களுக்கென வகுத்துக் கொண்டதே அவர்களின் வாழ்க்கை இயந்திரம் ஒழுங்காக வேலை செய்ய வழி வகுத்தது.

உதாரணமாக, காந்தியடிகளின் வாழ்க்கையை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் அரசியல்வாதியாக மட்டுமல்லாது ஆத்மீக ஞானியாகவும் விளங்கினார். இரண்டும் ஒருவரிடத்தில் சங்கமமாகியது சாமான்ய காரியமல்ல. அவருக்கு அளிக்கப்பட்டது நமக்குப் போன்று ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணி நேரம்தான். ஆனால் அதனை அவர் எவ்வாறு பற்பல காரியங்களுக்கென வகுத்துக் கொண்டார் என்பதைப் பாருங்கள்!

பிறரால் தாங்க முடியாத அரசியல் சுமைகளைத் தாம் ஒருவரே தனித்துச் சுமக்க வேண்டிய நிலை ஏற்பட்ட போதிலும் அவர் பிரார்த்தனை செய்வதை நிறுத்தினாரா? உலவச் செல்வதை நிறுத்தினாரா? பத்திரிக்கைகளுக்கு கட்டுரை எழுதுவதையோ, அறிக்கைகள் வெளியிடுவதையோ நண்பர்களையும் நோயாளிகளையும் சந்தித்து உரையாடுவதையோ, அரசியல் வாதிகளுடன் பேச்சுவார்த்தை நடத்துவதையோ, நூல் நூற்பதையோ நிறுத்தினாரா?

அதுக்கென ஒதுக்கப்பட்ட நேரத்தில் அதைச் செய்யும் பொழுது - அதற்குக் குறைவாகவும் கிடையாது. அதிகமாகவும் கிடையாது - வாழ்வில் குழப்பம் என்பதும் ஏது? நேரம் போதவில்லையே என்ற முணுமுணுப்பும் ஏது? மலை போன்ற வேலைகளினூடே அவர் மொழிகளை கற்பதற்கென நேரத்தை ஒதுக்கி, தமிழ் உட்பட ஆறுமொழிகளை கற்றுகொண்டது உங்களுக்கு வியப்பளிக்கவில்லையா?

புல்லர் கூறுகிறார், ''உன்னுடைய எண்ணங்களை யெல்லாம் அழகாக ஒழுங்குபடுத்து! சுமையானது தோளின் மீது அங்குமிங்கும் தொங்கிக் கொண்டிருந்தால் ஒருவன் அதிகமான சுமைகளைச் சுமக்க முடியாது. ஆனால் அதை கட்டாக கட்டிவிடின் அதைவிட அதிகமான சுமையை ஒருவன் தூக்கிக் கொண்டு செல்ல முடியும்'' என்று.

பிரெஞ்ச நாவலாசிரியர் விக்டர் ஹயூகோ கூறினார்; ''ஒவ்வொரு நாள் காலையிலும் அந்தந்த நாள் செய்ய வேண்டியகாரியங்களைத் திட்டமிட்டு, அந்த திட்டத்தை எவன் செயலாற்றுகிறானோ அவன் மிகவும் நெருக்கடியான வாழ்க்கைப் படுகுழியில் தனக்கு வழி காட்டிக் கொண்டு செல்லக் கூடிய ஒரு நூலை கொண்டு செல்கிறான். அவன் தன்னுடைய நேரத்தை ஒழுங்காக வகுத்து கொண்டது ஒளிக்கதிர் போன்று விளங்கி அவனுடைய வேலை முழுவதும் ஒளி வீசுகிறது. ஆனால் திட்டமிட்டுச் செயலாற்றப்படா விட்டால் எல்லாமே குழப்பத்தில் முடிந்துவிடும்.''

இவ்வாறு திட்டமிட்டுச் செயலாற்றியதால்தான் பலர் குறுகியகால எல்லைக்குள் பெருவாரியான காரியங்களை வெற்றிகரமாகச் செய்து முடிக்க இயன்றது. ஒரு நேரத்தில் ஒரு வேலை என்பதுதான் அவர்களுடைய நீதிமொழி. ஒரு வேலையைச் செய்து கொண்டிருக்கும்பொழுது அவர்கள் அதில் மனமொன்றி ஈடுபட்டிருப்பார்கள். அப்பொழுது

அவர்கள் செய்ய வேண்டிய மறு வேலைகளைப் பற்றி அணுவேனும் எண்ணிப் பார்க்க மாட்டார்கள்.

ஒழுங்கில்லாத வாணிபம் உருப்படாது என்பது சிந்திக்கத் தகுந்த சொற்களாகும். ஒழுங்கைக் கடைப்பிடிக்காத வணிகர்கள் தங்களுடைய ஆற்றல்களை அனாவசியமாக வீணாக்குகின்றனர். எதை முதலில் செய்வது, எதைப் பின்னால் செய்வது என்பதை அறியாது அவர்கள் தடுமாறு கிறார்கள். எதிலும் ஒழுங்கு பரிணமிக்காததனால் அவர்கள் ஒரு சாமானுக்கு முன்பு கொடுத்த ஆர்டரை மறந்துவிட்டு இரட்டிப்பாக ஆர்டர் கொடுத்து விடுகிறார்கள். வரவு வைக்க வேண்டியதை வரவு வைக்காமலும் பற்று எழுத வேண்டி யதைப் பற்று எழுதாமலும் கணக்கைக் கொலை செய்து கடையையும் பாழாக்கி விடுகின்றார்கள். குழப்பமே அங்குக் கொடுங்கோல் நடத்துகிறது.

நாட்டுப்புறக் கடை ஒன்றிற்குப் போய் ஒரு சாமான் இருக்கிறதா என்று கேளுங்கள்! உடனே முதலாளி கடைப்பை யனை அழைத்து, ''நம்மிடம் அது இருந்ததல்லவா? அது என்னவாயிற்று? எங்கேயாவது இருக்கும் பார்'' என்று கூறுவார். உடனே கடையிலிருக்கும் ஒவ்வொருவரும் அதனைத் தேடித் திரிவார்கள். சாமான் பெட்டிகளை அங்குமிங்கும் இழுத்துப் பார்ப்பார்கள்; ஒன்றின்மேல் ஒன்றைச் சுமத்துவார்கள். சுமை தாங்க முடியாது அவை ஒன்று பேசிக் கொண்டாற்போல் ஒருமித்துக் கீழே விழும். ஒரு நொடியில் கடை முழுவதும் குழப்பத்தில் மூழ்கிவிடும். அதன்பின் மலையைக் கிள்ளி எலியைப் பிடிப்பது போன்று அதனை எங்கேயோ ஒரு பொதும்பிலிருந்து எடுத்துக் கொண்டு வருவார் ஒருவர். அதை எடுத்து வருவதற்குள் உங்களுடைய நேரத்தை அவர்கள் எவ்வளவு வீணாக்கினர் என்பதையும் அவர்கள் உணர்வதில்லை. தங்களுடைய

நேரமும் ஆற்றலும் எவ்வளவு வீணாயின என்பதையும் அவர்கள் அறிவதில்லை.

அதனை அந்தந்த இடத்தில் வைப்பதுதான் ஒழுங்கு. இதில் காந்தியடிகள் கைதேர்ந்தவர். ஓர் ஊசியைக் கூட அவர் அதற்குரிய இடத்தில் வைத்து, அது தேவைப்படும் பொழுது அங்குமிங்கும் தேடாது உடனே வைத்த இடத்திலிருந்து எடுத்து கொண்டு வந்து விடுவார்.

சிப்பந்திகளுக்கு வேலைகள் வகுத்துக் கொடுக்கப் படாமல் எல்லா விஷயங்களையும் சந்தர்ப்பத்தின் கையில் ஒப்படைத்து விட்டு, திட்டமின்றி ஒழுங்கின்றி நடத்தப்படும் ஒரு கடையைப் போய்ப் பாருங்கள்! அங்குள்ளோர் சிறகொடிந்த பறவை போன்று மூச்சுத் திணற அங்கும் இங்கும் ஆட்ட ஓட்டத்தில் நிற்பார்கள். அவர்களுக்குப் பிறருடன் பேசுவதற்கு கூட நேரம் இராது. ஒருவரையொருவர் ஏவிக் கொண்டும் சீக்கிரமாகச் செய்யுமாறு கத்திக்கொண்டும் அவர்கள் இருப்பார்கள்.

சிப்பந்திகள் எப்பொழுதும் அவசர அவசரமாக வேலை செய்து கொண்டிருந்தால் வேலை அதிகமாக நடக்கும் என்று முதலாளி தவறாக எண்ணுகிறான். ஆனால் அவர்கள், அவசரத்தில் இரட்டிப்பாகச் சாமான்களை கொடுத்தும், ஒருவனால் செய்ய முடிந்த வேலையைப் பலபேர் செய்து முடித்தும் தனக்கு நஷ்டத்தை ஏற்படுத்துகின்றனர் என்பதையும் அவன் அறிவதில்லை.

திட்டத்துடன் செயலாற்றினால் பல்லாயிரக்கணக்கான பேர் வேலை செய்யக்கூடிய நிலையத்தையும் ஒழுங்காக நடத்த முடியும். நிலையம் பெரிதாக இருப்பது பிரச்சினையே அல்ல. ஒழுங்குடன் செயலாற்றப்படின் பெரிய நிலையத்தை நடத்துவதும் சிறிய நிலையத்தை நடத்துவதும் ஒரே மாதிரிதான்.

கால்பந்து விளையாட்டை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதில் கட்சித் தலைவன் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோ ரிடத்தை அளித்து அவரவர்களுக்குரிய வேலையை வரை யறுக்காவிட்டால் பந்து வந்ததும் எல்லோரும் தங்களுடைய இடத்தை விட்டுப் பெயர்ந்து, பந்தை நோக்கி ஓடி எதிர்க்கட்சியினருக்கு இலகுவில் வெற்றியளித்து தங்களுக் குத் தோல்வியைத் தேடிக் கொள்வார்களல்லவா? அது போன்றே திட்டமில்லாதவனின் கதியும் ஆகும்.

உங்களுடைய வேலை எதுவாக இருந்தபோதினும் சரி, அதில் நீங்கள் உன்னத நிலை பெற விரும்பினால் வரையறுக் கப்பட்ட தெளிவான திட்டத்துடன் செயலாற்ற வேண்டும். ஒன்றுக்கொன்று முரணான காரியங்களை மேற்கொண்டு உங்களுடைய முந்தைய செயலை உங்களுடைய பிந்தைய செயலே முறியடித்துவிட விடக்கூடாது. உங்களுக்கு வேண்டியதெல்லாம் ஒழுங்கான திட்டமும் அதைச் சரிவர நிறைவேற்றுவதற்கான செயல் திறனும்தாம். அவ்விரண்டை யும் பெற்றிருப்பின் நீங்கள் வெற்றி பெறுவது நிச்சயம். அதில் ஐயமே இல்லை.

மக்களில் பெரும்பாலோருக்குத் திட்டம் தீட்டத் தெரிந்தாலும் அதனைச் செயலாற்றத் தெரியாது. ஒருவனு டைய செயலைத் திட்டம் என்னும் மாபெரும் ஆற்றல் வழிகாட்டிக் கொண்டு செல்லவில்லையாயின் அவன் எவ்வளவு விடாப்பிடியுடன் முயற்சியாற்றிக் கொண்டிருந் தாலும் பெரும் பலனைப் பெற்றுவிட மாட்டான்.

திட்டம், ஒழுங்கு ஆகியவையின்றிச் செயல் துவங்குகிறவர்கள், 'உதவி, உதவி' என்று அபயக்குரல் எழுப்பிய வண்ணமாகவே இருக்கிறார்கள். பணமும் மனிதர்களும் தங்களுக்கு அதிகமாக இருப்பின் தாங்கள் பெரும் காரியங்களை சாதிக்கலாமென்று அவர்கள் எண்ணுகிறார்கள். ஆனால், அவர்களுக்கு வேண்டிய

தெல்லாம் உண்மையில் பணமுமல்ல, மனிதர்களுமல்ல; வன்மையான ஒழுங்குதான்.

ஒழுங்கின்றி, திட்டமின்றி செயலாற்றுகிறவர்கள் எப்பொழுதும் தலைதெறிக்கும் அவரசத்தில் காணப்படு வார்கள். அவர்களுடன் நாம் பேசிக் கொண்டிருக்கும் பொழுது தங்களுடைய கடிகாரத்தை உற்றுப் பார்த்து, தங்களுடைய நேரம் அதிக விலை மதிப்புடையது என்பதைக் காட்டிக் கொள்வார்கள். குழப்பத்திலும், ஆட்ட ஓட்டத்திலும், தங்களுடைய நேரத்தையும் ஆற்றலையும் வீணே செலவழிப் பார்கள்.

அவர்களுடைய மேசை காகிதக் குவியல்களால் நிரம்பித் தூசி படிந்திருக்கும். அதை ஒழுங்கு செய்யக்கூட அவர்களுக்கு நேரம் கிடையாது. நேரம் கிடைத்தாலும் அவற்றை எங்கு வைப்பது என்பது அவர்களுக்குத் தெரியாது. அதை ஓரிடத்தில் வைத்தால் அதனை எங்கு வைத்தோம் என்பதை மறந்து விடுவார்கள் அவர்கள். பின்பு அது தேவைப்படும் பொழுது காட்டைக் கலைத்து வேட்டையாடும் கதை தான்.

அவர்கள் போன்றே அவர்களுடைய ஊழியர்களும் அந்த காரத்தில் இருப்பார்கள். அடுத்து என்ன செய்வது என்பது அவர்களுக்கும் தெரியாது. முதலாளியிடம் அதைப் பற்றிக் கேட்டால், 'அதைச் செய்யுங்கள், இதைச் செய்யுங்கள்' என்று ஆயிரம் வேலைகளை அடுக்காக கூறிக் கொண்டே போவார். அவற்றில் எதை முதலில் செய்வது என்பதை அறியாது சிப்பந்திகள் விழிப்பர்.

இதற்கிடையில் முதலாளி, வேகமாகச் செய்யுங்கள்! வேகமாகச் செய்யுங்கள்!' என்று தொண்டைத் தண்ணீர் உலரும் வண்ணம் கத்திக் கொண்டிருப்பார். அவருக்கு வெறுமனே கத்தத்தெரியுமேயன்றி ஒவ்வொருவருக்கும் வேலைகளை வகுத்துக் கொடுத்து அதிகாரத்துடன் வேலை

வாங்கத் தெரியாது. கத்திச் சொல்வதைவிட அழுத்திச் சொல்வது எத்தனையோ மடங்கு ஆற்றல் வாய்ந்தது என்பது அவருக்குப் புரியாது.

அனால் திட்டமிட்டு செயலாற்றுகின்றவனோ ஒரு போதும் நிலை தவறுவதில்லை. அவசரப்படுவதுமில்லை. அவன் எப்பொழுதும் நிதானமாகவும், அமைதியாகவும் இருக்கிறான். வியாபாரம் எவ்வளவு அதிகமாக இருந்தாலும் நாம் அவனைச் சந்திக்க செல்லின் நம்மை அவன் அன்புடன் வரவேற்கிறான். தனக்கு வேலை அதிகம் என்பதை அவன் ஒருபோதும் நமக்கு காட்டிக் கொள்வதில்லை. அவனுடைய அலுவலகம் முழுவதும் அமைதியாக நடந்து கொண்டிருக்கிறது. ஒருவரும் அங்கும் இங்கும் அவசரமாக ஓடிக்கொண்டிருப்பதில்லை. அவரவர்களுடைய மேசை முன் அமர்ந்து அமைதியாகப் பணியாற்றிக் கொண்டிருக்கின்றனர். அவ்வவை அவ்வவைக்குரிய இடத்தில் ஒழுங்காக வைக்கப்பட்டிருக்கின்றன.

அவனுடைய மேசை தூய்மையாக இருக்கிறது. கடிதங்கள் உடனுக்குடன் பதில் எழுதப்படுகின்றன. செய்யப்பட வேண்டியவை அவ்வப்பொழுது செய்யப்படுகின்றன. திட்டம், ஒழுங்கு ஆகியவை அற்ற மனிதன் செய்வதைவிட நூறு மடங்கு அதிகமான வேலையை அவன் செய்கிறான், ஒரு நாளைக்கு அதிகமாக உழைத்துவிட்டுப் பல நாள் அலுத்துப் படுத்து நேரத்தை வீணாக்குவதில்லை. அவன் அளவுடன் வேலை செய்கிறான். இருந்த இடத்தில் அமர்ந்து மணியை அழுத்துவதன் மூலமும், 'போனைப்' பயன்படுத்துவதன் மூலமும் ஒரு நாளில் ஏராளமான காரியங்களை ஆற்றிவிடுகிறான் அவன். அவன் கீழ் வேலை செய்யும் ஒவ்வொருவரும் திட்டப்படி வேலை செய்கிறார்கள். எவ்வித குழப்பமும் அங்கு ஏற்படுவதில்லை.

இவ்விரு தரத்தாரிடமிருந்தும் நாம் அறியும் உண்மை என்னவெனில், திட்டமிட்டுச் செய்கிறவன், நடுத்தரத் திறமையுடையவனாயிருந்த போதினும், திட்டமிட்டுச் செயலாற்றாத அதிகத் திறமைசாலியைவிட அதிகமான காரியங்களை செய்து பெருவெற்றி அடைந்துவிடுவான் என்பதுதான்.

வாழ்வில் ஓர் ஒழுங்கை கடைப்பிடிப்பவர்கள் எல்லா வற்றையும் முன்கூட்டியே ஆழ்ந்து சிந்தித்து திட்டம் தீட்டி விடுவதன் காரணமாக, பிரளயம் ஏற்பட்டபோதும் ஆடாது அசையாது அமைதி குலையாது வீற்றிருக்கின்றனர்.

1815-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 16-ஆம் தேதி வாட்டர்லூ சண்டை நடக்கவிருக்கிறது. அன்றிரவு வெல்லிங்டன் என்ன செய்து கொண்டிருந்தார்? காலை மூன்று மணி வரை ரிச்மாண்ட் கோமகன் நடத்திய நடன விருந்தில் உற்சாகமாக நடனமாடிக் கொண்டிருந்தார்.

இதுபோன்று ஜேனா, ஆவர்ஸ்டாட் ஆகிய இடங்களில் நடக்கவிருந்த அடுத்த நாளைய கொடிய போர்களுக்கான முன்னேற்பாடுகளைச் செய்துவிட்டு நெப்போலியன், இரவு பன்னிரண்டு மணிக்குத் தம்முடைய கூடாரத்திற்கு வந்து அமைதியுடன் வீற்றிருந்து, கேம்பான் சீமாட்டி நடத்தி வந்த பெண்கள் பள்ளிக்கூடத்திற்கு பாடத்திட்டங்களையும், பெண்கள் நடக்கவேண்டிய ஒழுங்கு முறைகளையும் வரைந்து கொண்டிருந்தார் என்றால் நாம் பிரமிப்படையாது இருக்கமுடியுமா?

முதல் உலகப் பெரும்போரின்போது பிரெஞ்சுத் தளபதியாயிருந்த சர் ஜான் ஜ்யாப்ரி திட்டங்கள் வகுத்துச் செயலாற்றுவதில் மகாநிபுணர். அவர் தூங்கச் சென்றபின் எவரும் எக்காரணத்தை முன்னிட்டும் அவரை எழுப்பக் கூடாது என்பது அவருடைய கண்டிப்பான உத்தரவு.

ஒரு நாள் பிரெஞ்சுப் படைகள் ஓரிடத்தில் பின்வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. அப்போது ஒரு போர்வீரன் வெகு வேகமாக வந்து, ''தளபதி எங்கே? அவரை நான் பார்க்க வேண்டும்'' என்று கேட்டான் வாயிற்காப் போனைப் பார்த்து. ''அவர் தூங்குகிறார். இப்பொழுது அவரைப் பார்க்க முடியாது'' என்றான் வாயிற்காப்போன். ''இல்லை, அவசர வேலை அவசியம் நான் அவரைப் பார்க்க வேண்டும்'' என்று கூறினான் வந்த வீரன்.

அவர் தூங்கச் செல்லுமுன் இனிமேல் நடக்க வேண்டிய காரியங்களுக்கான உத்தரவுகளை ஒரு காகிதத்தில் எழுதி அலமாரியில் வைத்து விட்டுப் படுப்பது வழக்கம். அதை வாயிற் காப்போன் எடுத்து கொண்டு வந்ததும் அதில் அவ்வீரனுக்கு வேண்டிய அத்தனை செய்திகளும் எழுதப்பட்டிருப்பதை கண்டு அவ்வீரன் அடைந்த வியப்பை அளவிட முடியாது. அதில் அப்படி என்ன எழுதப்பட்டிருந்தது? ''சுமார் இத்தனை மணிக்கு இன்ன இடத்தில் எதிரித் தாக்குதலின் உக்கிரத்தால் நம்முடைய படைகள் பின்வாங்க நேரிடினும் நேரிடலாம். அப்பொழுது இன்ன இடத்திற்கு நம்முடைய படைகள் பின்வாங்கி அரண் அமைத்து கொள்ள வேண்டும்.''

எவன் ஒரு செயலை ஆற்றத் துவங்குமுன், அதை எவ்விதம் செய்வது என்பதற்கான திட்டத்தைத் தன் மனத்திலோ, காகிதத்திலோ வரைந்து ஒழுங்குபடுத்தி அதனை முழுதும் தன் மனக்கண்முன் கொண்டு வந்து பார்க்கிறானோ அவனே வெற்றி பெறுவான். வெல்லிங்டன், நெப்போலியனை வென்றது எப்படி? போர்க்களத்தில் நின்று ஆயுதம் தாங்கிப் போராடியா? இல்லை, தம்முடைய அறையில் தம்முடைய மேசைமீது விரிக்கப்பட்டிருந்த ஐரோப்பியத் தேசப்படத்தில் குண்டூசிகளைக் கொண்டும் நூல்களைக் கொண்டும் தான்;

மூளையை அறவே பயன்படுத்தாது உடம்பை எவர் பயன் படுத்துகிறார்களோ அவர்கள் இவ்வுலகில் வெற்றியடைவ தென்பது அரிது. மூவாயிரம் ரூபாய்க்குள் சிறு நெற்களஞ்சியம் கட்ட எண்ணிய ஒருவர் திட்டமின்றிக் கட்டிட வேலையைத் துவக்கியதன் காரணமாக முப்பதாயிரம் ரூபாய்க்குப் பெரும் கட்டடம் கட்டி முடித்துவிட்டார். அது பங்களா போன்றும் இல்லை; நெற்களஞ்சியம் போன்றும் இல்லை. திட்டமின்றிக் கட்டடம் கட்ட ஆரம்பித்து கடை முறிந்து விழுந்தவர்கள் எத்தனையோ பேர்!

திட்டமின்றிக் கதை எழுத ஆரம்பித்து முடிக்கத் தெரியாது திணறித் தங்களின் எழுத்துத் தொழிலையே மூச்சடைத்துச் சாகச் செய்யும் எழுத்தாளர்கள் எத்தனையோ பேர்! எவ்விதக் குறிக்கோளுமின்றி திட்டமுமின்றி கப்பலை செலுத்திக் கொண்டு செல்லும் மாலுமி எங்குச் செல்வதென அறியாது விழித்து பாறைகளில் கொண்டுபோய் கப்பலை மோதி நாசப்படுத்துகிறான். அல்லது புறப்பட்ட இடத்திற்கே பின்வாங்கி விடுகிறான். அல்லது கொல்லன் தெருவில் ஊசி விற்க முனைவது போன்று அரேபியாவிற்குப் பேரீச்சம் பழத்தை ஏற்றிக் கொண்டு சென்று விற்க முயல்கிறான்.

சில வியாபாரிகள் தங்களுடைய தொழில் பற்றிச் சிறிது நின்றுகூட ஆழ்ந்து கவனித்துப் பார்ப்பதில்லை. அவர்கள் அவசரம் அவசரமாகக் கடைக்கு வருகிறார்கள். பதற்றத்துடன் வந்திருக்கும் கடிதங்களை அரைகுறையாகப் படிக்கிறார்கள். பின்பு கடையை மேலெழுந்தவாரியாக ஒரு பார்வை பார்த்து விட்டு வெளியே சென்று விடுகிறார்கள். 'வேலை ஒழுங்காக நடைபெற வேண்டுமானால் நீயே போய் அதைசெய்! அவ்விதம் ஆக விரும்பவில்லையானால் மற்றவர்களை அனுப்பிவை!' என்னும் பழமொழியை அவர்கள் அறியாதது வருந்தத்தக்கதாகும்.

சில கடைகளில் போய்ப் பார்தோமானால் சொற்பச் சம்பளம் வாங்கக் கூடிய ஊழியர்கள் செய்யக்கூடிய சாதாரண வேலையை அதிகச் சம்பளம் வாங்கக்கூடிய அக்கௌண் டன்ட்களும், மானேஜர்களும் செய்கிறார்கள். அதனால் எவ்வளவு நஷ்டம் என்பதை முதலாளிகளும் உணராதிருப்பது வியப்பு தான்.

திட்டம் வகுத்து அமைதியாகச் செயலாற்றக்கூடிய ஒருவன் இவ்விதம் வேலை நடந்து கொணடிருக்கும் ஒரு கடைக்குள் நுழைவானானால் சில நாட்களுக்குள் அதில் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்து அதனை மிகவும் மேலான நிலைக்கு கொண்டு வந்து விடுவான். ஆனால் ஒழுங்கைக் கடைப்பிடிக்காத வியாபாரிகள் தங்களின் வியாபார மந்திரத்திற்குத் தலைவிதியின்மீதும், இடத்தின் மீதும், எதிர்க்கடைகள் மீதும் பழி சுமத்துகிறார்கள். தங்களுடைய மூளையைச் சரியாக உபயோகிக்காததுதான் அதற்குக் காரணம் என்பதை அவர்கள் அறிகிறார்களில்லை.

ஒழுங்காகத் திட்டம் தீட்டி வேலை வாங்குகிறவர்கள், திட்டமின்றி வேலைவாங்குகிறவர்களைவிட நாலைந்து மடங்கு அதிகமான வேலையைத் தங்களுடைய ஊழியர் களிடமிருந்து பெற்று விடுகின்றனர். தன் திட்டத்தைப் பிறர் ஏற்றுக் கொள்ளுமாறு செய்து அவர்கள் அதனைத் திறமை யுடன் செயலாற்றுமாறு எவன் செய்கிறானோ, எவன் சிதறிகிடக்கும் பல சக்திகளை ஒன்றுதிரட்டி ஒழுங்காக செயலாற்றுகிறானோ அவனே உண்மையான தலைவனா வான். எனவேதான், நாடோடிப் பழமொழி ஒன்று கூறுகிறது; ''வேலை செய்கிறவனுக்கு 5 ரூபாய் சம்பளம்; வேலை வாங்குகிறவனுக்கு 50 ரூபாய் சம்பளம்'' என்று.

சில பெரிய வியாபார நிலையங்களைப் பார்த்தோமாயின் அவை ஒழுங்காக இயங்கி வருவதை காணலாம். அங்குள்ள சிப்பந்திகள் அனைவரும் தூய்மையான ஆடை அணிந்து

சுவர்ச்சிகரமாக காணப்படுகின்றனர். சாமான் வாங்க வருபவர்களிடம் அவர்கள் எவ்வளவு அன்புடனும், இனிமை யுடனும் உரையாடுகிறார்கள்; கடிதங்கள் அவற்றிற்குரிய கோப்புகளில் இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பில்லும் பலரால் பரிசோதிக்கப்படுகிறது. அங்கு திறமையும் ஒழுங்கும் அரசோச்சுகின்றன. அங்கு எவ்வித குழப்பமும் பரபரப்பும் ஏற்படுவதில்லை. எல்லாம் திட்டப்படி நடந்து கொண்டிருக்கிறது. இவ்விதம் இயங்கும் தொழில் நிலையத்தில் முதலாளியே எப்பொழுதும் உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டியதில்லை. அவன் அங்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவனுடைய திட்டம் அங்குள்ள ஒவ்வொருவரையும் அதிகாரம் செலுத்தி வேலை வாங்கிக் கொண்டிருக்கிறது.

ஒரு கப்பல் கம்பெனியில் ஆறு அணா ஐந்தொகைக் கசிவு ஏற்பட்டதை ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவழித்து, கணக்கை பரிசோதித்துக் கண்டுபிடித்தார்கள். ஒழுங்கு என்றால் இது தான் ஒழுங்கு! இவ்வித ஒழுங்கை அவர்கள் கடைப்பிடித்தனால்தான் அவர்களுடைய வியாபாரம் நூற்றாண்டுக்கும் மேலாகப் பொன்னை கொழித்துக் கொண்டிருக்கிறது.

எனவே, ஒழுங்காக ஸ்டாக் எடுப்பது, கணக்கை கண்ணே போன்று கருதுவது, மாதாமாதம் ஜாக்கிரதையாக ஐந்தொகை தாயரித்துப் பார்ப்பது ஆகியவைதாம் வியாபாரச் சக்கரம் ஒழுங்காக உருண்டு செல்வதற்கு வழிகோலுபவையாகும். ஏனெனில், நாம் எங்கு நிற்கிறோம் என்பதை அறியாத வனுக்கு நிற்பதற்கு ஓரிடமும் இல்லாத நிலை விரைவில் ஏற்பட்டு விடும், தன்னுடைய நிலையை அடிக்கடி கவனி யாது, தன் செயலின் பலனை அடிக்கடி பரிசோதியாது எவன் கண்மூடித் தனமாகச் செயலாற்றுகிறானோ அவன் படு பாதாளத்தில் போய் விழுவான் என்பதில் ஐயமில்லை.

சிலர், தாம் எடுத்த சாமான்களை அதற்குரிய இடத்தில் கொண்டுபோய் வைக்காது, 'பின்னால் வைத்து கொள்வோம்' என்று அடுத்த காரியத்தைச் செய்யத் துவங்கிவிடுவர். அதை எடுத்துச் செல்வது சிறிது சிரமமாக இருந்த போதிலும் அப்பொழுதே அதை அதற்குரிய இடத்தில் வைத்து விடுகின்றவனே வாழ்விலும் ஓர் ஒழுங்கைக் கடைப்பிடிப்பவன் ஆவான்.

தான் வாழ்வில் வெற்றி பெறாததற்கான காரணம் என்ன என்பதைப் பற்றிச் சிலர் தங்கள் மேசைமுன் அமர்ந்து யோசித்துக் கொண்டிருப்பர். ஆனால், அதற்கான காரணத்தை அவர்களின் முன் தூசி படிந்துள்ள மேசையும், குவியலாக குவிந்தும் சிதறியும் கிடக்கும் காகிதக் கட்டுகளும் எடுத்துரைத்துக் கொண்டிருக்கும். ஆனால் அதை அவர்கள் செவியுறுவதில்லை.

கர்ரான், கிரேட்டானிடம் கூறினார்: ''நீங்கள் சிலகெஜம் நீளமுள்ள சிவப்பு நாடா வாங்கி உங்களுடைய 'பில்'களையும் காகிதங்களையும் கட்டி வைத்திருந்தால் நீங்கள் எதிர் காலத்தில் மிகவும் மேலான மனிதராக இருந்திருப்பீர்கள்.''

கார்ஃபீல்ட் தம்முடைய அறையில் ஐம்பது புறாக்கூடுகளுள்ள அலமாரி ஒன்றை வைத்திருந்தார். ஒவ்வொன்றின் நிலையிலும் அரசியல், தேர்தல் கூட்டங்கள். நகைச்சுவை நிகழ்ச்சிகள், வரி விதிப்புகள், அமெரிக்க ஐக்கிய நாட்டு வரலாறுகள் என்று எழுதப்பட்ட காகிதங்கள் ஒட்டப்பட்டிருக்கும். ஒரு தலைப்புப் பற்றிய விஷயங்கள் கிடைக்கும்பொழுது அவற்றைப் பற்றிய குறிப்புகளை எழுதி அதற்குரிய புறாக் கூண்டில் போட்டு விடுவார். பின்பு யாதாவதொரு விஷயம் பற்றி எழுதத் துவங்கின் அதற்குரிய புறாக்கூண்டில்; இல்லை, சுரங்கத்தில் கையைவிட வேண்டியதுதான்; மணிகள் கை இடுக்குகள் வழியாக வழிந்தோட ஆரம்பித்து விடும்.

இன்று ஆங்கில மொழியில் எழுதப்பட்டிருக்கும் எண்ணற்ற நூல்களெல்லாம் அந்த 26 எழுத்துக்களை ஒருவித ஒழுங்கு என்னும் சட்டத்தால் பிணைத்துப் பயன்படுத்தியதன் பலனேயன்றி வேறென்ன? ஆதி மனிதன் தங்களின் கை விரல்களைப் பார்த்துத்தான் முதன் முதலில் பத்து எண்ணிக்கைகளையும் உண்டு பண்ணினான். இன்று கணிதக் கலையில் பெறப்பட்டிருக்கும் அற்புத சாதனைகளெல்லாம் அந்தப் பத்து எண்ணிக்கைகளை ஓர் ஒழுங்குடன் உபயோகப் படுத்துவதனாலே யன்றி வேறென்ன?

ஒழுங்கே, அண்ட கோளங்களையும் ஒன்றோடொன்று மோதிக் கொள்ளாமல் இயங்கிக் கொண்டிருக்க வழிசெய் கிறது. நம்முடைய உடலின் உறுப்புக்களும் ஓர் ஒழுங்கிற்குக் கட்டுப் பட்டுத்தான் வேலை செய்கின்றன. அவ்விதமாயின் நாமும் ஓர் ஒழுங்கைக் கடைப்பிடித்து உன்னதப் பதவியை ஏன் அடையக்கூடாது?



# 7. நேரத்தை வீணாக்காதீர்!

''வேகமாகச் செல்; வேகமாகச் செல், உன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேகமாகச் செல்!'' இந்த உரைகள் எட்டாம் ஹென்றியின் காலத்தில் தபால் ஆபீஸ் பைகளின்மீது எழுதப்பட்டிருந்தது. தபால் போக்குவரத்து இல்லாத அந்தக் காலத்தில் அரசாங்கத் தூதுவர்களே கடிதங்களைச் சுமந்து செல்வர். அவர்கள் வழியில் தாமதித்தால் அவர்களுக்குத் தண்டனை என்ன தெரியுமா? சிரச்சேதம் தவிர வேறில்லை. நாம் சில மணி நேரத்தில் கடந்து செல்லக்கூடிய தூரத்தை மாதக்கணக்கில் நடந்து செல்ல வேண்டியிருந்த அந்த காலத்திலும்கூட அனாவசியத் தாமதமானது ஒரு பெரும் குற்றமாகக் கருதப்பட்டது.

ஆனால் அந்தக் காலத்திலுள்ளவர்கள் ஒரு வாரத்தில் செய்யக்கூடிய காரியத்தை இன்று ஒரு மணி நேரத்தில் செய்து முடிக்கும் வண்ணம் உலகம் 'ராக்கெட்' வேகத்தில் முன்னேறிக் கொண்டிருக்கும் பொழுது அன்று அனாவசியத் தாமதத்திற்கு சிரச்சேதத்தண்டனையென்றால் இன்று அவ்வித குற்றத்திற்கு எவ்விதத் தண்டனை விதிப்பது?

சோம்பேறித்தனத்தின் காரணமாக ஏற்பட்ட அனாவசிய தாமதத்தால் உலகில் ஏற்பட்ட அழிவுகள் கொஞ்சமா? எத்தனை முடிகள் கவிழ்ந்திருக்கின்றன! எத்தனை பேரரசுகள் சரிந்திருக்கின்றன! எனவேதான் நெப்போலியன் கூறினார், ''இழந்துவிட்ட ஒவ்வொரு நிமிடமும் துன்பத்திற்கும், துயரத்திற்கும் சந்தர்ப்பம் அளிக்கிறது'' என்று.

உடனுக்குடன் காரியங்களை ஒழுங்காககச் செய்வது போன்று ஒருவனுக்கு வெற்றிமாலை சூட்டக்கூடியது வேறொன்றுமில்லை. அதேபோன்று, செய்ய வேண்டியதை ஒத்திப்போட்டு கொண்டு செல்வதுபோன்று ஒருவனைத் துன்பப்படுகுழியில் தள்ளக் கூடியதும் வேறொன்றுமில்லை. காலம் என்னும் மாபெரும் கடிகாரத்தில் ஒரே ஒரு சொல்தான் பொறிக்கப்பட்டிருக்கிறது. அது என்னவென்றால், 'இப்பொழுது' என்பதுதான். 'இப்பொழுது' என்பதே வெற்றி வீரனின் தாரக மந்திரமாகும். 'பின்பு' என்பது தோல்வியடை பவனின் சாபச்சொல். அப்போதைக்கப்போது மகிழ்ச்சியுடன் செய்யப்பட்டிருக்க வேண்டிய வேலைகள் ஒத்திப்போடப் பட்டதன் காரணமாக மலைபோல் குவிந்து மலைக்க வைக்கின்றன.

இவ்வாறு நம்முடைய வாழ்வில் ஒழுங்கீனம் தன்னுடைய கொடிய உருவத்தை காட்டத் துவங்குகிறது. அதனால் நம்முடைய வாழ்வு தட்டுக் கெட்டுத் தடுமாறுகிறது. செய்ய வேண்டிய வேலையை உடனுக்குடன் செய்யாமலும், வரக்கூடிய கடிதங்களுக்கு அன்றாடம் பதில் எழுதாமலும் இருப்பது போன்று வாழ்க்கை இயந்திரத்தைச் சிக்கவைக்கும் மாசு வேறொன்றுமில்லை.

எனவேதான், பெரிய தொழில் நிலையங்களில் அன்று வந்த கடிதங்களுக்கு அன்றே பதில் எழுதாமல் கடையை மூடுவதில்லை என்னும் சட்டத்தைப் பிறப்பித்துக் கொண்டிருக்கின்றனர். இவ்விதம் செய்வதனால் தொழில் இயந்திரம் ஒழுங்காக இயங்குவதோடு அதை இயக்குகிறவர் களின் மனோவேகத்திற்குத் தக்கவாறு வேகமாகவும் இயங்குகிறது. வேலை செய்பவர்களுக்கு சலிப்போ, களைப்போ ஏற்படுவதில்லை.

ஒரு வேலையை ஒத்திப்போடுவது என்றால் என்ன? அதைப் புதைகுழியில் போட்டு மூடிவிடுவது என்பதுதான்.

'பின்பு பார்ப்போம்' என்பதன் பொருள் என்ன? பின்பு ஒரு போதும் அதனை ஏறிட்டுப் பார்ப்பதில்லை என்பதுதான்.

ஒரு வேலையைச் செய்வது ஒரு வித்தை விதைப்பது போலாகும். அது உரிய காலத்தில் நடப்படவில்லையாயின் அது காலம் தவறிய நடவுதானே. காலந்தவறிய நடவின் பலன் அதற்கேற்றாற்போல்தானே இருக்கும்.

எனவே, 'இப்பொழுது' போன்று ஒருவன் வேலையாற்ற மேலான நேரம் வேறொன்றுமில்லை. அப்பத்தை அடுப்பி லிருந்து இறக்கியதும் சுடச்சுடச் சாப்பிடும்பொழுது இருக்கும் சுவை போன்று அது ஆறி உலர்ந்துபோன பின் இருக்குமா?

அது போன்றே ஒத்திப் போடப்பட்ட வேலைகளும் இருக்கும், இதனால் நமக்கும் உற்சாகம் குறைந்து விடுவ தோடு அவையும் தம்முடைய புதிய தன்மையை இழந்து விடுகின்றன.

''நான் வெற்றியடைந்ததற்குக் காரணம் நான் எப்பொழு தும் தயாராக இருந்ததுதான்'' என்று கூறினார் காப்பட் ''பத்து மணிக்கு வேலை செய்வதாயிருந்தால் நான் ஒன்பது மணிக்கே தயாராகி விடுவேன். எனக்காக வேண்டி நான் யாரையும் ஒரு நிமிடம் கூடக் காத்திருக்க விடுவதில்லை'' என்று அவர் அதற்கு விளக்கம் தந்தார்.

''இவ்வளவு குறுகிய நேரத்தில் இவ்வளவு அதிகமான வேலையைத் தங்களால் எவ்விதம் செய்ய முடிகிறது?'' என்று சர் வால்ட்டர் ரேலேயிடம் கேட்கப்பட்டபொழுது, ''நான் எதையும் செய்ய வேண்டியிருந்தால் அதனை உடனே செய்து முடிக்கிறேன்'' என்று கூறினார் அவர். உடனுக்குடன் செய்லாற்றுகிறவன் சிறிய தவறுகளைச் செய்தபோதினும், மயிர் பிளந்து நேரத்தை வீணாக்கித் தாமதிக்கிறவனைவிட மகத்தான வெற்றியை அடைகிறான்.

''இவ்வளவு வேலைகளையும் செய்து கொண்டு தங்களால் எவ்விதம் பொது வேலையில் ஈடுபட முடிகிறது?''

என்று பிரெஞ்சு அரசியல் வாதியிடம் ஒருவர் கேட்டார். அப்பொழுது அவர், ''இன்றைய வேலையை நான் ஒருபோதும் நாளைக்கென ஒத்திப் போட்டதில்லை,'' என்று கூறினார். இதுவே வெற்றி வீரரின் நீங்காத குறிக்கோளாகும். ஆனால், தோல்வியைத் தேடித் திரிபவர்களோ இந்தத் தத்துவத்தையே மாற்றி அமைத்துக் கொள்கிறார்கள். ''நாளைக்கு ஒத்தி போட முடியும் வேலையை இன்றேசெய்து முடிக்காதே!'' என்று. இவ்வாறு இன்றைய தினத்தைப் பறக்கவிட்டுவிட்டு நாளைய தினத்தில் அதைப் பற்றிப்பிடிக்க அவர்கள் தேடித் திரிகின்றனர்.

எவ்வளவு பேர் தங்களுடைய நேரத்தை, இல்லை வெற்றியை நண்பர்கள் களவாடிக்கொண்டு செல்ல அனுமதித்து விடுகிறார்கள். கூட்டம் போட்டு, கும்மாள மடித்து, வீண் பேச்சுப்பேசி வெற்றியை விரட்டியடித்து விடுகிறார்கள். உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை வெற்றி மயமாக விளங்க விரும்பும் இளைஞன் தன் தொப்பியினுள்ளே பொறித்துக் கொள்ள வேண்டிய ஒரே நீதி உரை என்னவெனில், 'வேலை முன்பு, நண்பர்கள் பின்பு' என்பதுதான்.

வாழ்க்கையில் முன்னேறியவர்களைப் பார்த்தோமாயின் அவர்கள் நேரத்தைச் செலவிடுவதில் பெரிய உலோபிகளாய் இருந்தார்கள் என்பது நன்கு விளங்குகிறது. உடலமைப்புக் கலை அறிஞராகிய ஜான் ஹண்டர் முதுமையிலும் ஓயாது வேலை செய்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் ''இன்னுமா ஓயாது வேலை செய்து கொண்டிருக்கிறீர்கள்'' என்று ஒரு டாக்டர் கேட்டபொழுது, ''ஆம் டாக்டர்! நான் போனபின் மற்றொரு ஜான் ஹண்டரைக் காண முடியுமா?'' என்று பதில் கூறினார் அவர்.

ஒருவர் தம்மைப் பார்க்க வந்திருக்கிறார் என்பதை அறிந்ததும் அவருக்கென எவ்வளவு நேரம் செலவிடுவது

என்பதைத் தீர்மானிப்பதில் தியோடர் ரூஸ்வெல்ட் மகா நிபுணர். ஒரு மனிதர் அவருடைய அறைக்குள் நுழைந்ததும் தாம் அவரை வெகு காலம் சந்திக்க விரும்பியிருந்தது போன்ற உணர்ச்சியை அவருடன் கை குலுக்கும்பொழுதே அந்தக் கை குலுக்கலிலேயே காட்டிக் கொள்வார் அவர். ஆனால் அந்த அன்பான வரவேற்பின் நடுவே, வந்தவர் கூறவேண்டிய விஷயத்தை மட்டுமே கூற வேண்டுமென்றும் மற்றும் எத்தனையோ நண்பர்கள் தம்மைப் பார்க்கக் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் தெரியப்படுத்திவிடுவார். எனவே, வந்தவர்கள் விஷயத்தைச் சுருக்கமாகக் கூறிவிட்டு விறைவில் சென்று விடுவார்கள்.

ஒரு பெரிய வியாபார நிலையத்தின் தலைவராயிருந்த ஒருவர் தம்மைப் பார்க்க வருகிறவர்களை வரவேற்கும் விதமும் தம்முடைய நேரத்தைச் சிக்கனமாகச் செலவிடும் முறையும் நம்மை ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறது. யாரும் தம்மைப் பார்க்கவரின் அவரைப் புன்முறுவலுடன் வரவேற் பார் அவர். பிறகு உடனே வந்த விஷயத்தை விசாரித்து, அதற்கு ஆவண செய்து தம்முடைய நாற்காலியிலிருந்து எழுந்து, அவருடன் அதிக நேரம் அளவளாவ முடியாததற்கு வருந்துவதாகக் கூறி அவரை திருப்தியுடன் அனுப்பி விடுவார்.

இவ்வாறு பெரிய தொழில் துறை அதிபர்கள் தங்களுடைய நேரத்தைப் பணமாகக் கருதுகின்றனர். எனவே அவர்கள் எவ்வித வழவழாப் பேச்சிற்கும் இடம் கொடுப் பதில்லை. அதனால் கடிகாரம் போன்று அவர்களுடைய தொழிலும் ஒழுங்காக இயங்குகிறது.

அமெரிக்காவின் மாபெரும் லேவாதேவி மன்னராக விளங்கிய மார்கன் தம்முடைய அலுவலகத்திற்கு காலை 9.30 மணிக்குச் செல்வார். மாலை 5.00 மணிக்கு முன் அதை விட்டு அவர் நகர்வதில்லை. அவருடைய ஒரு நிமிட வருமானம் இருபது டாலர் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆனால்

அவர் தம்முடைய நிமிடம் ஒன்றை அதையும்விட மதிப்புள்ள தாகவே கருதுவார். முக்கியமான விஷயம் இருந்தாலொழிய அவருடன் 5 நிமிட நேரம் பேசும் வாய்ப்புக்கூட எவராலும் பெறமுடியாது.

வர்த்தக அரசராகிய எஸ்.டி. ஸ்டூவர்ட்டும் தம்முடைய நேரத்தை ஒரு மூலதனமாகவே கருதி வந்தார். வாயிற் காப்போனிடமும் அதன்பின் குமாஸ்தாவிடமும் வந்த விஷயத்தைக் கூறாது யாரும் உள்ளே நுழையவே முடியாது. பார்க்க வருபவர் யாரும் தனிப்பட்ட முறையில் அவருடன் பேச விரும்புவதாகக் கூறினால், மிஸ்டர் ஸ்டூவர்ட்டுக்குத் தனிப்பட்ட முறை என்பதே கிடையாது என்று கூறி விடுவான் வாயிற்காப்போன். உள்ளே நுழைந்தவர் யாரும் சுருக்கமாக விஷயத்தை எடுத்துரைத்து விடவேண்டும். வியாபார நேரத்தில் நட்புரையாடலில் ஈடுபட அவர் மறுத்துவிடுவார். அவர் ஒரு நிமிட நேரத்தைக்கூட வீணாக்கமாட்டார். அவருடைய வியாபார ஒழுங்கு மற்ற வியாபாரிகளை வியப்பில் ஆழ்த்தியது.

பெஞ்சமின் ஃப்ராங்க்ளினுடைய பத்திரிகை அலுவலகத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களை ஒருவன் ஒரு மணி நேரமாகப் பார்த்தபின் ஒரு புத்தகத்தைக் காண்பித்து, ''இதன் விலை என்ன?'' என்று கேட்டான். ''ஒரு டாலர்'' என்று பதில் கூறினான் கடையிலிருந்த விற்பனை யாளன். ''குறைக்க முடியாதா?'' என்று மறு கேள்வி வந்தது. ''இல்லை, அதன் விலை ஒரு டாலர்தான்' என்று பதிலிறுத் தான் விற்பனையாளன். பின்பு புத்தகம் வாங்க வந்தவன் மற்றப் புத்தகங்களையும் சிறிது நேரம் பார்த்துவிட்டு ''ஃப்ராங்க்ளின் உள்ளே இருக்கிறாரா?'' என்றான். ''ஆம். அவர் அச்சியந்திர அறையில் வேலைசெய்து கொண்டிருக் கிறார்'' என்றான் விற்பனையாளன். ''நான் அவரைப் பார்க்க விரும்புகிறேன்'' என்றான் வந்தவன். ''அவர் உள்ளே வேலை

செய்துகொண்டிருக்கிறார்'' என்று எவ்வளவோ கூறியும் அவன் கேட்கவில்லை.

கடைசியில் ஃப்ராங்க்ளினும் வெளியே வந்தார். ''மிஸ்டர் ஃப்ராங்க்ளின்! இந்தப் புத்தகத்திற்குக் கடைசி விலை என்ன'' என்றான் அவன். ''ஒன்றே கால் டாலர்'' என்றார் அவர். இதைக் கேட்டதும் அவனக்குக் கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது போல் இருந்தது. ''என்ன உங்களுடைய விற்பனையாளர் இதன் விலை ஒரு டாலர் என்று இப்பொழுது தானே கூறினார்'' என்றான் அவன்' ''ஆம், நான் என் வேலையை விட்டு வந்திருக்கிறேனல்லவா?'' என்றார் அவர்.

''சரி. அதெல்லாம் இருக்கட்டும் இப்பொழுது கூறுங்கள். இதற்குக் கடைசி விலை என்ன? என்றான் அவன். ''ஒன்றரை டாலர்'' என்று பதில் கூறினார் அவர். ''என்ன, சற்று முன் ஒன்றேகால் டாலர் என்று தானே கூறினீர்கள்'' என்றான் அவன். உடனே அமைதியாக ஃப்ராங்க்ளின் பதில் கூறினார் : ஆம். அப்பொழுதே அந்த ஒன்றே கால் டாலரைத் தந்திருந்தால் பெற்றுக் கொண்டிருப்பேன். ஆனால் அப்பொழுது அந்த விலை. இப்பொழுது இந்த விலை தான்.''

புத்தகம் வாங்க வந்தவன் அமைதியாக ஒன்றரை டாலரை மேசைமீது வைத்துவிட்டுப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு அந்தப் புத்தகத்திலிருந்ததைவிட மேலான பாடத்தைப் படித்துக்கொண்டு அவ்விடத்தை விட்டும் அகன்றான்.

ஓர் இத்தாலிய அறிஞர் தம்முடைய வாசற்கதவில் கீழ்க்கண்ட வார்த்தைகளைப் பொறித்திருந்தார்; ''இங்கு யார் தாமதிக்கிறார்களோ அவர்கள் என்னுடைய வேலையில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும்.'' பாக்ஸ்டரைப் பார்க்கச் செல்கின்றவர்கள் அவர் வேலை செய்து கொண்டிருப்பதைக் கண்டதும், ''நாங்கள் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறோம்'' என்று சம்பிரதாயத்திற்காகக் கூறினால், ''ஆம் ஐயமேயில்லை'' என்று சட்டெனப் பதில் கூறிவிடுவார் அவர்.

அறிவியல் அறிஞரான மைக்கேல் ஃபாரடே, பைண்டர் வேலை செய்து கொண்டிருக்கும்பொழுது தம்முடைய ஓய்வு நேரங்களை அறிவியல் ஆராய்ச்சியில் செலவிட்டு வந்தார். அவர் ஒரு முறை தம்முடைய நண்பர் ஒருவருக்கு எழுதினார்: ''எனக்கு இப்பொழுது வேண்டியதெல்லாம் நேரம்தான். நம்முடைய நாகரிகக் கனவான்களின் ஓய்வு நேரங்களை நான் குறைந்த விலைக்கு வாங்க முடியுமானால் எவ்வளவு நன்மையாயிருக்கும்!''

இவ்வாறு வாழ்வில் முன்னேறுகிறவர்களெல்லாம் தங்களுடைய நேரத்தைக் கண்ணேபோற் காத்துப் பொன்னே போற் செலவிடும்பொழுது நாம் நம்முடைய நேரத்தை அனாவசியமாய் வீணாக்காதிருக்க நம்மையே நாம் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும்.

நாளை என்பது எத்தனை பேர்களின் வாழ்க்கையைப் பலி கொண்டிருக்கிறது! அதன் காரணமாக எத்தனை பேர்களின் தீர்மானங்கள், திட்டங்கள் எல்லாம் சிதறடிக்கப்பட்டிருக் கின்றன! அது எத்தனை சோம்பேறிகளுக்கும் திறமையற்றவர் களுக்கும் அடைக்கல நிலையமாய் அமைந்திருக்கிறது!

சோம்பேறித்தனம் ஒருவனைச் சாரும்பொழுது அவன் நேரத்தின் மதிப்பையே அறியும் ஆற்றல் அற்றவனாகிவிடு கிறான். சிலரை விடியற்காலையிலும் சிலரைப் பகல் சாப்பாட்டுக்குப் பின்பும், சிலறை இரவு ஏழு மணிக்கும் அது தாக்குகிறது. விடியற்காலையில் சில மணி நேரங்கள் அந்த நாளின் வெற்றி, தோல்வி ஆகியவற்றைத் தீர்மானிக்கக் கூடியவையாய் இருக்கின்றன என்பதைப் பலர் அறிவதில்லை.

பகலவன் உதயமாவதற்கு முன் புன்முறுவலுடன், வெற்றி நோக்கத்துடன் படுகையிலிருந்து விர்ரென்று எழுந்து செயலாற்ற முனைவது அந்நாள் முழுவதையும் எவ்வளவு வெற்றிகரமாக ஆக்குகிறது! கண் மலரும் அந்தக் கணத்தில் ஒருவன் கொள்ளும் மனோநிலைக்குக் தக்கவாறே அவனு

டைய அந்த நாள் ஒளி விடுகிறது. எனவே படுக்கையில் எட்டு மணி வரையில் புரண்டுகொண்டு கிடந்துவிட்டு, பின்பு அசட்டையுடன் கொட்டாவி விட்டுக்கொண்டு வேண்டா வெறுப்புடன் எழுந்திருப்பவனின் நாள் அசடு மயமாகவே இருக்குமென்பதில் என்ன சந்தேகம்?

உலக வரலாற்றில் பெருமைக்குரிய இடம் பெற்றோ ரெல்லாம் விடியுமுன் எழுந்திருக்கும் வழக்க முடையவர் களாகவே இருந்திருக்கின்றனர். மகா பீட்டர் சக்கரவர்த்தி விடியுமுன் எழுந்துவிடுவார். அவர் ஒரு முறை கூறினார், ''நான் என் வாணாளை என்னால் முடிந்தவரை நீளமாக்க விரும்புகிறேன். எனவே நான் எவ்வளவு குறைவாக முடியுமோ அவ்வளவு குறைவாகத் தூங்குகிறேன்.''

இங்கிலாந்தை ஆண்ட மகா ஆல்ஃப்ரெட் மன்னரும் விடியுமுன் எழுந்துவிடுவார். கடற்பிரயாணத்திற்கான திட்டங்களை கொலம்பஸ் வகுத்ததும், போருக்கான திட்டங்களை நெப்போலியன் தீட்டியதும் விடியமுன் உள்ள அந்த அற்புதமான சில மணி நேரங்களில்தாம். அந்த சில மணி நேரங்கள் தாம் என்ன மனோரம்மியமாக இருக்கின்றன! நம்முடைய மூளை, மற்ற உறுப்புகளெல்லாம் பூரண ஓய்வு பெற்று வேலை செய்ய எவ்வளவு தயாராக இருக்கின்றன! சுற்றிலும் உள்ள நிசப்தமும் சாந்தியும் நாம் மனமொன்றி வேலை செய்யவும் சிந்திக்கவும் எவ்வளவு உறுதுணை செய்கின்றன! அப்பொழுது நாம் செய்யும் மனமொன்றிய சிந்தனையின் பலன் வெற்றியேயன்றி வேறென்ன?

எனவேதான் முந்தையோர், ''விரைவில் படுக்கைக்குச் சென்று விரைவில் படுக்கையைவிட்டு எழுவது ஒருவனை ஆரோக்கியமுள்ளவனாகவும், செல்வந்தனாகவும், அறிவாளி யாகவும் ஆக்குகிறது'' என்று கூறிச் சென்றார். மாபெரும் வானியல் வல்லுனரான கோப்பர்னிகஸும் விடியுமுன் படுக்கையை விட்டு எழுந்து விடுவார்.

பிரபல எழுத்தாளர்களான பிரயாண்டும் பான்க்ராப்ட்டும் அப்படித்தான். அமெரிக்க ஜனாதிபதியான வாஷிங்டனும், ஜெஃபர்ஸனும் அப்படித்தான். பிரசித்தி பெற்ற வழக்கறிஞரான வெப்ஸ்டரும் அப்படித்தான். வெப்ஸ்டர் விடியுமுன் எழுந்து காலை உணவு அருந்துவதற்கு முன் இருபது முதல் முப்பது கடிதங்களுக்குப் பதில் எழுதிவிடுவார். இங்கிலாந்து மன்னராயிருந்த எட்டாம் ஹென்றியும் விடியுமுன் துயிலெழுந்து அரசாங்க அலுவல்களைச் செய்து முடித்து ஏழு மணிக்கே காலை உணவு கொள்ளத் துவங்கிவிடுவார். பத்து மணிக்குப் பகல் உணவு கொள்ள அமர்ந்துவிடுவார்.

காந்தியடிகளும் அப்படித்தான். வியற்காலை நான்கு மணிக்கே அவர் படுக்கையிலிருந்து எழுந்து மற்ற ஆசிரமவாசிகளையும் எழுப்பி விட்டு விடுவார். தமிழ்நாடு கண்ட வணிக மன்னரான ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரும் அவ்வித வழக்கத்தைக் கொண்டவர் என்பதை நண்பர் வாயிலாக அறிந்தேன். காலை நான்கு மணிக்குக் குளிப்பதற்கு வெந்நீர் போட்டு வைப்பதற்காக ஒரு வேலையாளை நியமித்திருந்தாராம் அவர். காலை நான்கு மணிக்கு எழுந்து, மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கா வண்ணம் மெதுவாகச் சென்று குளித்து விட்டு அலுவல்களை ஆற்றத் துவங்கிவிடுவாராம். வந்திருக்கும் முக்கியமான கடிதங்களுக்கெல்லாம் தாமே தம் கைப்பட பதில் எழுதுவாராம்.

மில்டன் கூறுகிறார்; ''என்னுடைய காலை நேர வேலை வீட்டிலேதான் துவங்குகிறது. குளிர்காலத்தில் தொழிற்சாலை மணி ஒலி கேட்குமுன் எழுந்து விடுவேன். கோடை காலத்தில் பறவை விழித்தெழுந்து ஒலி செய்யுமுன் படுக்கையை விட்டு எழுந்து விடுவேன். பிறகு களைப்படைகிற வரையில் பிறரைப் படிக்கச் சொல்லி கவனமாகக் கேட்டுக் கொண்டிருப்பேன்.''

ஆங்கில இலக்கிய மேதை சர் வால்ட்டர் ஸ்காட்டை சுறுசுறுப்பின் திருவுருவம் என்றே கூறலாம். அதுவே

அவருடைய சாதனையின் இரகசியமாகவும் இருந்தது. கடிதங்களுக்கு அன்றாடம் பதில் எழுதுவதை அவர் தம்முடைய நீங்காத வழக்கமாக ஆக்கிக் கொண்டார். அவர் காலையில் ஐந்து மணிக்கே படுக்கையிலிருந்து எழுந்து விடுவார். காலை உணவருந்தும் நேரத்தில் அவர் கூறுவார். "நான் இன்றைய வேலையின் கழுத்தை முறித்து விட்டேன்" என்று. இவ்வாறு மற்றவர்களுக்குப் பல மணி நேரங்களுக்கு முன் தங்களுடைய வாழ்க்கையைத் துவக்கி விடுகின்றவர்கள் மற்றவர்களை வாழ்க்கைப் பந்தயத்தில் வெற்றி கொள்ளாது என்செய்வர்?

மனிதர்களை இறைவன் வாழ்க்கையில் புகுத்தியதும் அவர்களுக்கு ஒருவேலையையும் நேரத்தையும் கொடுக்கிறான். அவர்கள் தங்களுடைய வேலைகளைச் சரியான சமயத்தில் துவக்கி, போதிய வேகத்துடன் செய்வார்களாயின் அவர்களுடைய நேரமும், வேலையும் நன்றாக முடிவடையும். இல்லையேல் ஒன்றுக்கொன்று முன் பின்னாக முடிவடையும். அதனால் அவர்கள் தபால்காரன் பெட்டியிலிருந்து கடிதங்களை எடுத்துச் சென்ற ஒரு சில நிமிடங்களுக்குப் பின் தங்கள் கடிதங்களைத் தபால் பெட்டியில் போடுகின்றனர். புகை வண்டி புறப்பட்ட பின்பு நிலையத்திற்கு ஓடோடி வருகின்றார்கள். தங்களின் அசாக்கிரதை, அசட்டுத்தனம் ஆகியவற்றின் காரணமாக, மற்றவர்களை வாழ்க்கை பஸ்ஸில் முன் செல்ல விட்டு விட்டு தாங்கள் பின்தங்கி விடுகின்றனர்.

வேலைகளை உடனுக்குடன் ஆற்றுவதும் சந்திப்புக்களைக் குறித்த நேரத்தில் நிறைவேற்றுவதும் பண்பாட்டின் சிகரங்களாகும். சந்திப்பைக் குறித்த நேரத்தில் நிறைவேற்றாதவன் ஒரு பொய்யன். பிறரின் நேரத்தைக் கொள்ளை கொள்ளும் கள்வன் என்பதில் என்ன ஐயம்? உலகம் அவனை அவ்விதமேதான் கருதுகிறது.

கார்னீலிஸ் வாண்டர்பீல்ட் என்னும் கோடீஸ்வரரிடம் ஓர் இளைஞன் தன்னை ரயில்வே இலாகாத் தலைவரிடம் ஒரு வேலைக்குச் சிபாரிசு செய்யுமாறு வேண்டிக் கொண்டான். கோடீஸ்வரரும் ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்று காலை பத்து மணிக்கு வருமாறும், அவனை அழைத்துக் கொண்டு அவரிடம் செல்வதாயும் கூறினார். குறித்த தினத்தில் பத்து மணி இருபது நிமிடத்திற்குத்தான் இளைஞன் அங்கு வந்து சேர்ந்தான். அதற்குள் கோடீஸ்வரரும் ஒரு கூட்டத்திற்குச் சென்றுவிட்டார்.

சில நாள் கழித்து அந்த இளைஞன் கோடீஸ்வரரின் முன் வந்து நின்றபோது, ''ஏன் அன்று வரவில்லை?'' என்று கேட்டார் கோடீஸ்வரர். ''ஏன்... வந்தேனே, இருபது நிமிடம் தாமதமாக வந்தேன், அவ்வளவுதான்'' என்றான் இளைஞன். ''நாம் இங்கு சந்திப்பதாகக் கூறியது பத்து மணிக்கல்லவா?'' என்று கேட்டார் கோடீஸ்வரர். ''ஆம், எனக்கு அது தெரியும். ஆனால் பதினைந்து அல்லது இருபது நிமிட வித்தியாசத்தில் என்னமுழுகிவிடப் போகிறது என்று எண்ணினேன்'' என்றான் இளைஞன். உடனே கோடீஸ்வரர் சிறிது கோபத்துடன் கூறினார்.

''அந்தச் சில நிமிடங்களே பெரிய மாறுதல்களைச் செய்ய வல்லவை. வெற்றியும் தோல்வியும் அவற்றிலேதான் தொங்கி கொண்டிருக்கின்றன. அன்று நீ குறிப்பிட்ட நேரத்தில் வராததால் நீ விரும்பிய அப்பதவி அன்றைய தினமே வேறு ஒருவருக்கு கொடுக்கப்பட்டு விட்டது. மேலும், இளைஞனே! நான் கேட்கிறேன். என்னுடைய நேரத்தை அவ்வளவு இலேசாகக் கருதி வீணாக்க உனக்கு என்ன உரிமை இருக்கிறது? அந்த இருபது நிமிட நேரத்திற்குள் நான் இரண்டு முக்கியமான பேர்களைச் சந்தித்து பெரிய காரியங்களைச் சாதித்துவிட்டேன்.''

வானியல் நிபுணரான ஜெனரல் மிச்சலிடம் தாமதித்து வந்த ஓர் ஊழியர், ''சில நிமிடங்கள்தாமே தாமதித்து வந்தேன்'' என்று கூறினார். உடனே ஜெனரல் மிச்சல், ''நான் ஒரு செகண்டின் ஆயிரத்தில் ஒரு பாகத்தின் மதிப்பை அளவிடும் வழக்கமுடையவன் அல்லவா? அவ்விதமுள்ள என்னிடமா நீ இவ்விதம் கூறுவது?'' என்று கேட்டார்.

பிரெஞ்சு மன்னர் 14-ஆம் லூயி ''குறித்த நேரத்தில் காரியங்களை நிறைவேற்றுவதுதான் மன்னர்களின் மேலான தாழ்ந்த குணம்'' என்று கூறினார். ஆம், அதுவே கண்ணிய மிக்க பெருமக்களின் கடமையாகவும், வியாபாரிகளுக்கு அவசியமானதாகவும் உள்ளது. உங்களை ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சந்திப்பதாகக் கூறி எவன் அதனை ஒரு நிமிடமும் தவறாது நிறைவேற்றுகிறானோ அவனே உங்களுடைய நேரத்தை மட்டுமல்லாது உங்களை யும் மதிக்கின்றான்; எவன் நிறைவேற்றாதிருக்கின்றானோ அவன் ஒப்பந்தத்தை முறித்தது மட்டுமல்லாமல் உங்களு டைய நேரத்தையும் வீணாக்கி உங்களையும் அவமதிக்கிறான் என்று தான் பொருள்.

''ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்து முடிப்பதிலோ, ஒரு குறிப்பிட்ட சந்திப்பை நிறைவேற்றுவதிலோ அசட்டை காட்டுகிறவன் பிறரால் ஒருபோதும் மதிக்கப்பட மாட்டான்; அவன் வாழ்விலும் வெற்றிபெற மாட்டான்'' என்று கூறுகிறார் டாக்டர் பீட்ச்.

ஹொரேஸ் கிரீலி கூறுகின்றார். ''ஒருவன் மற்றவர்களின் நேரத்திற்கு மதிப்புக் கொடுக்காவிட்டால் எவ்விதம் அவன் மற்றவர்களின் பணத்திற்கு மதிப்புக் கொடுப்பான்? ஒரு மனிதனுடைய ஒரு மணி நேரத்தை வீணாக்குவதற்கும் அவனுடைய ஐந்து டாலர்களைக் கொள்ளை கொற்வதற்கும் உள்ள வேறுபாடு என்ன? சிலருக்கு ஒரு மணி நேரமானது ஐந்து டாலருக்கு மேல் மதிப்புள்ளதாயிற்றே.

''நான் வசிக்க வேண்டும் என்பது அவசியமல்ல; ஆனால் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்தில் இருக்க வேண்டியது மிகவும் அவசியம்'' என்பது பாம்பேயின் வாக்கு.

குறிப்பிட்ட நேரத்தில் விருந்தினர்கள் வராததும் தனியாக அமர்ந்து உணவருந்த ஆரம்பித்து விட்டார் வாஷிங்டன். விருந்தினர்கள் சிறிது தாமதித்து வந்ததும் அவர்களிடம் அவர் சாப்பிட்டுக் கொண்டே கூறினார். ''என்னுடைய சமையற் காரன் விருந்தினர் வந்து விட்டார்களா என்று கேட்க மாட்டான்; சாப்பிடும் நேரம் வந்துவிட்டதா என்றுதான் கேட்பான்'' என்று.

தம்முடைய ஊழியன் ஒருவன் தாமதித்து வந்ததற்கு தன்னுடைய கடிகாரத்தை நொண்டிச் சாக்காகக் கூறியதும் ''நீ வேறு ஒரு க்ளாக்கை (கடிகாரம்) வைத்துக்கொள்ள வேண்டும், இல்லையேல் நான் வேறு ஒரு க்ளார்க்கை (குமஸ்தா) வைத்துக் கொள்ளுவேன்'' என்று கூறினார் வாஷிங்டன்.

தாமதித்து வருவதற்கு ஏதாவதொரு நொண்டிச் சாக்கை கற்பித்துவந்த தம்முடைய வேலைக்காரனிடம் ஃப்ராங்க்ளின் பின்வருமாறு கூறினார். ''நொண்டிச் சாக்கைக் கற்பித்துக் கூறுவதில் கெட்டிக்காரனாயிருப்பவன் ஒன்றிலும் கெட்டிக் காரனாயிருக்கமாட்டான்.''

''ஆறு மணிக்கு நாம் அந்த இடத்தை அடைந்து விடுவோம்'' என்று வண்டி ஓட்டி நெல்ஸனிடம் கூறியதும், ''நாம் அதற்குக் கால்மணி நேரத்திற்கு முன்பே சென்று விடவேண்டும். குறிப்பிட்ட நேரத்திற்குக் கால் மணி நேரத்திற்கு முன்பே நான் குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட வேலைக்குத் தயாராகி விடுவேன். அதுவே என்னை ஒரு மனிதனாகச் செய்திருக்கிறது'' என்றார் அவர்.

ஒருமுறை நெப்போலியன் தம்முடைய தளபதிகளை விருந்திற்கு அழைத்திருந்தார். குறிப்பிட்ட நேரத்தில் அவர்கள் வராததனால் தனியாக அமர்ந்து உணவருந்த ஆரம்பித்து விட்டார். அவர் உணவருந்தி முடியும் தறுவாயில் அவருடைய தளபதிகள் ஒருவர்பின் ஒருவராக உள்ளே நுழைந்தனர். உடனே சாப்பாட்டு மேசையிலிருந்து நெப்போலியன் எழுந்து கொண்டே கூறினார். "கனவான்களே! சாப்பிடும் நேரம் முடிந்துவிட்டது. வேலை செய்யும் நேரம் துவங்கிவிட்டது. வாருங்கள்! நாம் ஒரு நிமிடமும் வீணாக்காது இனி வேலையில் ஈடுபடுவோம்."

ஆடம்ஸ் என்னும் அமெரிக்கக் காங்கிரஸ் உறுப்பினர் சபைக்குள் நுழைவதைப் பார்த்ததும் சபையைத் துவக்குவாராம் அவைத்தலைவர். ஒருமுறை சபையைத் துவக்க நேரமாகிவிட்டது என்று ஓர் உறுப்பினர் கூறியதும் மற்றொருவர் கூறினார். "ஆடம்ஸ் இன்னும் வரவில்லையே" என்று. அதன்பின்தான் சபையில் வைக்கப்பட்டிருந்த கடிகாரம் மூன்று நிமிடம் வேகமாகச் செல்கிறது என்பதும் தெரிய வந்தது. குறித்த நேரத்தில் அவைக்குள் நுழைந்தார் ஆடம்ஸ்.

எண்ணத் தொலையா வேலைகளினூடே காந்தியடிகளும் குறித்த நேரத்தில், குறித்த வேலையைச் செய்வதில் தவறுவதில்லை. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சொற்பொழிவாற்ற அவர் ஒரு நிமிடம் தாமதித்து வந்ததற்காக அங்கு வீற்றிருந்தோரிடம் மன்னிப்புக் கேட்டாரென்றால் நேரத்தின் அருமையையும், நிமிடம் தவறாது காரியத்தைக் குறித்த நேரத்தில் நிறைவேற்றுவதன் முக்கியத்துவத்தையும் அவர் எவ்வளவு உணர்ந்திருந்தார் என்பதைப் பாருங்கள்.

குறித்த நேரத்தில் குறித்த வேலையைச் செய்வதுதான் வியாபாரத்தின் ஆன்மா என்று கூறலாம். சில நிமிடங்களில்

பல்லாண்டுகளின் விதியானது தொங்கிக் கொண்டிருக்கிறது என்பது வியாபாரிகளுக்குத் தெரியாத விஷயமல்ல. வங்கித் தவணைக்குப் பணம் கட்ட சில நிமிட நேரம் தவறியதன் காரணமாகத் தங்களுடைய வியாபார வாழ்வை நாசமாக்கிக் கொண்டவர்கள் எத்தனை பேர்?

குறித்த நேரத்தில் குறித்த வேலையைச் செய்வதுதான் பிறரை நம்மீது நம்பிக்கை கொள்ளுமாறு செய்யும். ஒருவனுடைய அலுவல்கள் ஒழுங்காக நடைபெற்றுக் கொண்டு வருகின்றன என்பதற்கான அடையாளம் அதுதான். ஒழுங்காக ஒருவன் தன்னுடைய அலுவல்களை நிர்வகித்து வருவானாயின் மற்றவர்கள் அவன்மீது நம்பிக்கை கொண்டு அவனுக்கு உதவி செய்ய முன்வருகிறார்கள். அவனுக்கு எங்கும் நாணயம் ஏற்படுகிறது. அவனுடைய வாக்கு எங்கும் செல்கிறது. அவனுடைய நாணயமே அவனுக்கு மிகப் பெரும் மூலதனமாக ஆகிவிடுகிறது. தாங்கள் அவனை அடிக்கடி கவனித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை; தாங்கள் அவனுக்கு அளிக்கும் பொருளுக்கு எந்தவித அபாயமுமில்லை என்பதை அவர்கள் அறிந்ததும் அவனுக்கு மனமும் வந்து உதவி செய்ய முன்வருகின்றனர். அவனுடைய வெற்றியும் உறுதியாகி விடுகிறது. அவனும் வெற்றிப் படியில் விறு விறு என்று ஏறுகிறான்.



# 8. சுருங்கச் சொல்லி விளங்க வைப்பீர்!

மாபெரும் சண்டமாருதரான ஸிஸரோ கூறினார், ''சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல்தான் ஒரு சட்டசபை உறுப்பினரிடமாகட்டும், ஒரு சொற்பொழிவாளரிடமா கட்டும் போற்றத்தகுந்த பண்பு ஆகும்'' என்று. ஆனால் மிகைப்படக் கூறுதல் தவறு எனக் கருதி சொல்லவேண்டிய விஷயத்தைப் பூரணமாகச் சொல்லாது குன்றக் கூறிவிடுவதும் அதேபோன்று தவறுதான். எனவே, கூறவேண்டியதை குறைவான சொற்க ளால் தெளிவாக எடுத்துரைக்க வேண்டியது அவசியம் ஆகும்.

ஆங்கிலக் கவிஞர் போம், ''சொற்கள் இலைகள் போன்றவை. அவை அதிகமாக மரத்தில் காணப்படும் பொழுது அதில் பழங்களைக் காண்பது அரிதாகும்'' என்று கூறினார். அதுபோன்றே பெரும் பேச்சுக்காரனுடைய பேச்சுகளிலும் நாம் எவ்வித ஆழ்ந்த கருத்துக்களையும் காண முடியாது. அவனுடைய செய்கைகளும் வழவழா என்றுதான் இருக்கும். உலகில் தோன்றிய செயல் வீரர்களெல்லாம் பேச்சு வீரர்களாக ஒருபோதும் இருந்ததில்லை.

நெப்போலியன் ஒருநாளைக்கு ஒரு நூறு சொற்கள் கூடப்பேச மாட்டாராம். கமால் அத்தாதுர்க்கும் அப்படித்தான். அவர்கள் ஒரு நாளில் பேச வேண்டிய விஷயங்களைச் சில சொற்களில் அடக்கி வெளியிடும்பொழுது அவை பீரங்கியிலிருந்து குண்டு வெளிப்படுவது போலிருக்கும்.

உலகில் போரா, அமைதியா என்பதைத் தீர்மானிக்கும் ஆற்றல் பெற்று, பெரும் வலிமையுடன் உலகின் விதியைத் தம் கைப்பிடியில் வைத்திருந்த ஸ்டாலினும் செயல் வீரரேயன்றி, பேச்சு வீரரல்ல என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

பனித்துளிகள் நெருக்கப்பட்டதும் அவை கப்பல் களையும் உடைத்தெறியக்கூடிய பனிக்கட்டிப் பாறையாக மாறிவிடுகின்றன. நம்மை ஓரடி அளவிற்குச் சுற்றியுள்ள காற்றை நெருக்கி வெளியிட்டால் அது உறுதியான பாறைகளைக் கூட துளைத்துக்கொண்டு சென்றுவிடுகிறது.

எனவேதான் லூதரும், ''குறைவான சொற்களாலான பிரார்த்தனைதான் மேலான பிரார்த்தனை'' என்று கூறினார்.

சொற்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. எனவேதான் அவை மலிவாகவும் இருக்கின்றன. ஆனால் கோடிக் கணக்கான மக்களின் எண்ணங்களிலே மகத்தான புரட்சியை விளைவிக்கும் கருத்துக்கள் குறைவாகவே உள்ளன. எனவேதான் அவை மணிபோன்று பெரும் மதிப்புடை யவையாய் விளங்குகின்றன.

ரூபஸ்சோட் என்னும் வழக்கறிஞர் பிறர் ஒரு மணி நேரம் பேசக்கூடிய விஷயங்களை ஒரு நிமிடத்தில் கூறி விளக்கிவிடுவார். ஹொரேஸ் கிரீலி ஒரு விஷயத்தைப்பற்றி நியூயார்க் ட்ரிப்யூனில் பத்தி பத்தியாக எழுதும்பொழுது அதே விஷயம் பற்றி தர்லோ வீட் என்பவர் ஆல்பனி ஈவ்னிங் ஜர்னலில் சில சொற்களில் எழுதி விளங்க வைத்து விடுவார்.

இவ்வாறு பேச்சில் மட்டுமல்லாது எழுத்திலும் எவன் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறானோ அவனையே உலகம் விரும்பும். ஆகவே நீங்கள் ஒருபோதும் நீண்ட பேச்சுப் பேசவேண்டாம். நீண்ட கடிதமும் எழுத வேண்டாம். நீங்கள் பேசும் நீண்ட பேச்சை நீங்கள்தாம் கேட்டு மகிழ வேண்டும்.

நீங்கள் எழுதும் நீண்ட கடிதத்தை நீங்கள்தாம் படித்துக் கொள்ள வேண்டுமேயன்றி வேலை மிகுந்த வேறு எவரும் படிக்க மாட்டார்கள். ''நான் எழுதிய ரிப்போர்ட்களைப் படித்துப் பார்த்தீர்களா?'' என்று ரூஸ்வெல்ட்டிடம் அவருடைய அன்பிற்குப் பாத்திரமான ஒருவர் கேட்ட பொழுது, ''அதை என்னால் முதலில் தூக்கவே முடியாதே'' என்று சிரித்துக் கொண்டே பதில் கூறினார் அவர்.

ஒரு விஷயத்தைப்பற்றி அறிக்கை தயாரிக்குமாறு நியமிக்கப்பட்ட கமிட்டியார் கட்டுக்கட்டாக அறிக்கை எழுதிக் கொடுத்ததைப் பார்த்த லிங்கன், ''குதிரை நல்ல குதிரையா? என்று பார்த்துவர நான் இவர்களை அனுப்பினால், அதனுடைய சுழி எப்படி என்று தானே எனக்கு அறிக்கை அனுப்ப வேண்டும். அதை விட்டுவிட்டு அதன் வாலிலுள்ள ஒவ்வொரு மயிரையும் எண்ணிக் கணக்கிட்டு அனுப்பி யிருக்கிறார்களே'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

காந்தியடிகள் கடிதம் எழுதுவதாயிருந்தால் சிறுகாகிதத் தில் எழுதி முடித்து விடுவார். நீண்ட கடிதம் எழுதுபவர்களை அவருக்குக் கொஞ்சமும் பிடிக்காது.

ஒரு நாட்டின் பழமொழி மூலம் அந்நாட்டு மக்களின் அறிவு வளர்ச்சியை அறிய முடியும். அது போன்று ஒருவனின் சொற்களைக் கொண்டு அவனுடைய அறிவின் முதிர்ச்சியை நாம் அறிந்து கொள்ளலாம், ஆழ்ந்த கருத்துக்களை சிறு சொற்களில் எவன் வெளியிடுகிறானோ அவனே அறிஞன் எனக்கருதப்படுவான். அவ்விதம் கூறுவது சாமான்ய காரியமல்ல.

பெர்னார்ட்ஷா ஒருமுறை நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில், ''நான் நீண்ட கடிதம் எழுதுகிறேன்; காரணம், சிறிய கடிதம் எழுத எனக்கு நேரமில்லை'' என்று குறிப்பிட்

டார். அவருடைய இந்த வாசகத்தை ஆழ்ந்து கவனித்துப் பாருங்கள்! மாபெரும் கருத்துக்களைச் சில சொற்களில் அடக்கி விடும் ஆற்றலே அவருடைய மகாத் மியத்திற்கு மூல காரணம் என்று கூறலாம்.

காந்தியடிகளின் மரணச் செய்தி கேட்டு, பலர் பத்தி பத்தியாகச் சரமகவி பாடவும் பக்கம் பக்கமாக அனுதாபச் செய்தி வெளியிடவும் செய்தனர். அப்போது பெர்னார்ட்ஷா என்ன கூறினார்? ''மிகவும் நல்லவனாக இருப்பது மிகவும் அபாயகரமானது என்பதை அவருடைய மரணம் எடுத்துரைக் கிறது'' என்றார் அவர். அவருடைய இந்தச் சொற்கள் காந்தியடிகளின் வாழ்க்கைத் தத்துவங்கள், போராட்டங்கள் ஆகிய அனைத்தையும் ஒரு நொடியில் நம் மனக்கண்முன் படம் பிடித்துக்காட்டி அஹிம்சையின் தகுதியையும் நமக்கு வெள்ளிடை மலைபோல் விளக்கி வைத்துவிடவில்லையா?

சைரஸ் டபிள்யு பீல்ட் என்பவர் தம்மைப் பார்க்க வருபவர்ளிடம் கூறுவார். ''சுருங்கக் கூறி விளங்க வையுங்கள்! நேரமானது மிகவும் விலை மதிப்புடையதாகும், காலம் கருதாமல் செயல் ஆற்றுதல், யோக்கியத்தன்மை, சுருங்கக் கூறுதல் ஆகியவையே வாழ்க்கையின் நீதி உரைகளாகும். ஒருபோதும் நீண்ட கடிதம் எழுதாதீர்கள்! அதைப்படிக்க ஒரு வியாபாரிக்கு நேரமே கிடையாது. நீங்கள் எதைச் செய்வதாயிருந்தாலும் சுருங்கச் சொல்லுங்கள்! ஒரு ஷீட் காகிதத்தில் எழுத இயலாதபடி எந்த வியாபாரமும் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லை.

சில ஆண்டுகளுக்கு முன் தான் இங்கிலாந்திற்கு ஒரு முக்கியமான கடிதம் எழுதவேண்டியிருந்தது. முதலமைச் சரும், விக்டோரியா அரசியும் அதைப்படிப்பர் என்பது எனக்குத் தெரியும். நான் என்ன சொல்ல வேண்டுமோ

அதனை எழுதினேன். பல ஷீட் காகிதங்கள் நிறைய எழுதிவிட்டேன். அதை இருபது தடவை திரும்பத் திரும்பப் படித்து சொற்களைக் குறைக்கவும் வாக்கியங்களைச் சுறுக்கவும் செய்தேன். இறுதியில் அவற்றை ஒரு கருத்தும் விடாமல் ஒரு ஷீட் காகிதத்திற்குள் எழுதியும் முடித்தேன். அதன்பின் அதைத் தபாலில் அனுப்பினேன். உரிய காலத்தில் திருப்திகரமான பதிலும் வந்தது. ஆனால் நான் பல ஷீட்கள் எழுதியிருந்தால் அதிகமான பலன் கிடைத்திருக்குமா? ஒரு போதும் கிடைத்திருக்காது.''

எனவே நீங்களும் ஒரு விண்ணப்பம் எழுதுவதாயி ருந்தால் ஒரு பக்கத்திற்கு மேல் எழுதாதீர்கள். விஷயத்தை ஆரம்பிக்கு முன் விஷயச் சுருக்கத்தை விண்ணப்பத்தின் மேலே கொடுங்கள்! அவ்விதம் செய்வது படிப்பவர்களுக்கும் இலகுவாயிருக்கும், உங்களுக்கும் அனுகூலமாய் அமையும்.

சுருக்கமாக எழுதுவதுபோன்று அழகாக எழுதுவதும் மிகவும் அவசியம். மணி கோத்தாற்போன்று எழுதப்பட்டி ருக்கும் கடிதங்கள் நமக்குப் படிக்க மன மகிழ்ச்சியை அளிக்கின்றன. அப்படி இல்லாதவை குப்பைக் கூடைக்குள் வீசி ஏறியப்படுகின்றன. எனவேதான், அழகற்ற எழுத்துக் களைப் பெற்றிருந்த காந்தியடிகள் அழகாக எழுதிப் பழகுமாறு இளைஞர்களுக்கு அறிவுரை பகர்ந்தார்.

நெப்போலியனுடைய எழுத்துக்கள் சிலந்திப் பூச்சிகள் வலை போன்றிருக்குமாம். பைரனுடைய எழுத்துக்களும் அப்படித்தான். ஒரு தடவை பைரன் தம்முடைய கவி யொன்றை அச்சடிக்க அனுப்பியிருந்தார். அச்சுக் கோப்ப வருக்கு அருடைய எழுத்துக்கள் ஒழுங்காக விளங்காததால் விளக்கம் கேட்டு பைரனுக்கு அதனை ஓர் ஆள் வசம் திருப்பி அனுப்பினர் அச்சகக்காரர்கள். அதனை பைரனும் வெகுநேரம்

வரை பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு கூறினார், ''இதை எழுதும்பொழுது எனக்கும் ஆண்டவனுக்கும் இதை வாசிக்கத் தெரியும். ஆனால், இப்பொழுது ஆண்டவன் ஒருவனுக்கே இதை வாசிக்கத் தெரியும்'' என்று.

வெற்றி பெறுவனின் மேலான குணம் என்னவெனில், சுற்றி வளைத்துக் கொண்டு சொல்லாது நேடியாக விஷயத் தைக் கூறுவதுதான்; அவன் ஒரு விஷயத்தின் மேலேயும் செல்லமாட்டான்; கீழேயும் செல்லமாட்டான்; சுற்றி வளைத்துக்கொண்டும் செல்லமாட்டான்; நேரடியாக அதனைத் துளைத்து கொண்டு செல்வான். உங்களிடம் அவன் ஒருவிஷயத்தை கூறுவதாயிருந்தால் அவ்விஷயத்தின் இதயத்தை நோக்கி அவனுடைய பேச்சுகள் செல்லும். அத்துடன் உங்களுடைய இதயத்தையும் அவன் விரைவில் கைப்பற்றித் தன் காரியத்தைச் சாதித்து கொள்வான்.

ஆனால் பலர் இந்த உண்மையை அறியாது கேட்பவனின் பொறுமையும் வற்றி உலர்ந்து வெறுப்பாக மாறும் வரையில் வந்த விஷயத்தைக் கூறுவதில்லை. எனவே, அவர்கள் கூற வந்தது, மேலான காரியமாயிருந்த போதினும் கைகூடாமல் போய் விடுகிறது.

சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லாது சுற்றி வளைத்து கொண்டு சொல்லி பல வழக்கறிஞர்கள் தங்களுடைய வாழ்வையே பாழ்படுத்திக் கொள்கின்றனர். பெரிய பீடிகையைப் போட்டுக் கொண்டும், சொற்பொழிவிற்கு வேண்டிய அடுக்கு வார்த்தைகளைத் தேடிப்பிடித்திழுத்து வந்து உபயோகித்தும் சாதாரணமாய் விளங்கக்கூடிய சட்டக் குறிப்புகளுக்கு சாங்கோபாங்கமாக வியாக்கியானம் செய்தும் நீதிபதிகளுக்கு அவர்கள் பெரிய தலைவேதனையை அளிப்பதோடு தங்களுடைய கட்சிக்கும் தோல்வியை

வரவழைத்துக் கொள்கின்றனர். நீண்ட சண்டமாருதப் பிரசங்கங்களையோ அழகிய அடுக்குத் தொடர் பேச்சு களையோ நீதிபதிகள் விரும்பவில்லை. அவர்கள் விரும்புவ தெல்லாம் தெளிவான, சுருக்கமான சட்ட நுணுக்கக் குறிப்புகளைத்தாம் என்பதை அவர்கள் அவறிவதில்லை.

ஒளிமயமான வாழ்வைப் பெற்றிருப்பார் என்று நாம் எதிர்பார்த்த பலர் வாழ்க்கையில் அவ்வளவு மகத்தான வெற்றியைப் பெறாததற்குக் காரணம், ஆணியின் தலையில் ஓங்கி அடிக்கத் தெரியாத் தன்மையால்தான்.

வியாபார மன்னரான வானோமேக்கரின் பங்காளி ராபர்ட் ஆக்டன் கூறினார்: "ஓர் இளைஞனை முன்னுக்கு வராது தடுக்கக் கூடியதில் முக்கியமானது எதுவெனில் அதிகமாகப் பேசுவதுதான் என்று என் அனுபவ வாயிலாக கண்டுள்ளேன். எவன் அதிகமாக சிந்தித்து, குறைவாக பேசுகிறானோ, எவன் ஆழ்ந்து சிந்திக்கிறானோ, அவனே வெற்றி பெறு பவனாவான்."

இதையறியாது பலர் நாம் அதிகம் பேசினால் அதிகக் கெட்டிக்காரர் என்று நம்மை உலகோர் நினைத்துக் கொள்வார்கள் என்று எண்ணி எப்பொழுதும் பேசிக்கொண்டே இருப்பர். குறை குடம்தான் தளும்பும், வெண்கலம்தான் கிணகிணெனும், வற்றிய ஓலைதான் சலசலக்கும் என்பதை உலகோர் அறிவர் என்பதை அவர் உணர்வதில்லை.

பேச்சு வெள்ளித் தன்மையுடைதென்றால், மௌனம் தங்கத்தன்மை வாய்ந்தது. பேச்சு மனிதத் தன்மையுடைய தென்றால், மௌனம் தெய்வீகத்தன்மை வாய்ந்தது, பேச்சு பீரங்கிச் சூட்டின் சக்தியைப் பெற்றிருக்கிறதென்றால், மௌனம் அணுகுண்டின் சக்தியைப் பெற்றிருக்கிறது.

1813-ஆம் ஆண்டு ஒருநாள் மாலை அமெரிக்க அறிஞர் எமர்ஸனும், செல்ஸி அறிஞர் கார்லைலும் சந்தித்தனர். இரு

வரும் புகை பிடித்துக்கொண்டே எதிரும் புதிருமாக நள்ளிரவு வரை உட்கார்ந்திருந்தனர். வார்த்தை ஒன்றும் பேசவில்லை. பிறகு இருவரும் பிரியும் பொழுது கைகுலுக்கி அன்றைய நாளை மகிழ்ச்சியாகக் கழித்ததற்காக ஒருவரையொருவர் பாராட்டிக் கொண்டார்கள்.

ஆனால் பேச வேண்டிய இடத்தில் பேசாமலிருப்பதும், பேச வேண்டாத இடத்தில் பேசுவதும் பேதமை. எனவே, பேசவேண்டாத இடத்தில் பேசாது வாயை மூடிக்கொண்டி ருங்கள்! நீங்கள் எழுதவோ, பேசவோ ஆரம்பித்தால், நீங்கள் எங்கு முடிக்க விரும்புகிறீர்களோ அதற்கு வெகு அண்மையி லிருந்தே ஆரம்பியுங்கள்! சொல்ல வேண்டியதை ஆணித் தரமாகச் சொல்லுங்கள்! சொன்னதும் முடித்துக் கொள்ளுங்கள்!



பொருளடக்கம்

# 9. உடல் நலனைப் பேணுக!

**கா**லையில் நீங்கள் அலுவலகத்திற்குச் செல்லும் பொழுது உங்களை முழுதும் எடுத்துக்கொண்டு செல்ல வேண்டும். அவ்விதம் நீங்கள் சென்றால்தான் உங்களுடைய வேலையும் முழுத் தன்மையுடன் விளங்கும். விடியற் காலையில் விரியக்கூடிய பூக்கள் போன்று நீங்களும் புதிதாக வும், உற்சாகத்துடனும், முழு ஆற்றலுடனும் செயல்களை ஆற்றப்புகின் அந்த நற்பண்புகளெல்லாம் உங்களுடைய வேலையிலும் தம்முடைய சாயலைப் பதியவைத்துக் கொண்டே செல்லும்.

ஆனால் அதற்கு மாறாக இரவு முழுதும் கண் விழித்து ஆற்றல்களை யெல்லாம் வீண் செலவாக்கிவிட்டு காலை எட்டு மணிக்குப் படுக்கையிலிருந்து எழுந்து அலுவலகத் திற்குச் செல்பவன் முழு மனிதனே அல்ல; அவன் தன்னு டைய சில பாகங்களை அங்கேயே விட்டுவிட்டுச் செல் கிறான். அவனுடைய வேலையும் அவன் போன்றே இருக்கும், அதில் ஒரு விறுவிறுப்போ, வன்மையோ, தெளிவோ இராது.

இவ்வாறு முழு மனிதனாக வேலை செய்யாதவர்கள் தம் தோல்வியைத்தாமே விலைக்கு வாங்கிக் கொள்கிறார்கள். தங்களுடைய ஆற்றலை வீண் விரயம் செய்ததன் காரண மாகத் தங்களுடைய கால்களை வேண்டா வெறுப்பாக அலுவலகத்திற்கு இழுத்துச் சென்று, வேண்டா வெறுப்புடன் மேசைமுன் அமர்ந்து வேண்டா வெறுப்புடன் வேலை செய்கிறார்கள். இவ்வாறு அழுகிப்போன நாட்களைக்

கழிக்கின்றவர்கள் எவ்விதம் தங்களின் வாணாளை வெற்றிகரமாகக் கழிக்க முடியும்?

அதிக வேலை செய்து, ஆற்றலை வீணாக்கி, களைப்பு மிகுந்து, எவ்விதத் தயாரிப்புமின்றி இருக்கும் ஒருவனை ஓட்டப் பந்தயத்தில் பங்கு கொள்ளுமாறு நாம் வேண்டுக் கொளின் அவன் என்ன கூறுவான்? 'என்னால் வெற்றி பெற முடியாது' என்பான். அதுபோன்று, தங்களுடைய ஆற்றலை எல்லாம் வீண் செலவாக்கிக் களைப்புற்றிருக்கும் அவர்கள், வாழ்க்கைப் போர்க்களத்தில் இராட்சச பலம் பொருந்திய வர்களுடன் போராடி எங்கனம் வெற்றியடைய முடியும்?

எனவே ஒவ்வொரு நாளும் எவன் தன்னை முழுத்தன் மையுடன் பாதுகாத்து வருகிறானோ, தனது சக்திகளை ஊதாரித்தனம் செய்யாது சேமித்து வைத்திருக்கிறானோ, அவனே வாழ்வு அளிக்கும் வெகுமானத்தைப் பெறுபவனா வான். இதையறியாது பலர் தங்களுடைய இரத்தத்தில் தென்பின்றி மூல பலமுமின்றி வாழ்க்கைப் போராட்டத்தை நடத்த முன் வருகின்றனர். அவர்களுக்குத் தோல்வி முகமன் கூறாது என் செய்யும்?

நன்றாகக் கவனிக்கப்பட்ட ஒரு மட்டரகக் குதிரையானது, ஒழுங்காகக் கவனிக்கப்படாத ஓர் உயர் சாதிக் குதிரையைப் பந்தய ஓட்டத்தில் வென்றுவிடும்.

ஒருதளபதி, சரியான பயிற்சி பெறாத, சக்தி குன்றி யிருக்கும் தன்னுடைய படைகளை ஒருபோதும் போர்க் களத்திற்குக் கொண்டுசெல்ல மாட்டான்.

பலர் அதிக வேலையின் காரணமாகச் சீக்கிரம் நரம்புத் தளர்ச்சியைப் பெற்றுவிடுகிறார்கள். முன்னேற வேண்டும் என்னும் ஆசையினால் அவர்கள் கடுமையாக உழைத்த போதினும், ஓயாது வேலை செய்து, ஓய்வு கொள்ளாது வேலை செய்து, தமக்கே தாம் நன்மை செய்து கொள்வதற்குப் பதிலாக

நாசத்தை உண்டுபண்ணிக் கொள்கிறார்கள். தன் வேலையில் அல்லும் பகலும் அயராது ஒட்டிக் கொண்டிருந்தால், அடிக்கடி ஓய்வெடுத்துக்கொண்டு மெதுவாகவும் விடாமலும் வேலை செய்பவனைவிட அதிகப் பலனைப் பெற்றுவிடலாம் என்று அவர்கள் தவறாக எண்ணுகின்றனர். அவர்களின் கதி ஆமையுடன் போட்டியிட்ட முயலின் கதியாகவே ஆகிவிடும்.

தங்களுடைய உடல், மூளை ஆகியவற்றின் ஆற்றலை எவ்வளவு குறைவாக மதிப்பிட்டு அவர்கள் அதனைச் செலவிடுகின்றனர்! இளமை என்னும் கிணறு எப்பொழுதும் சுரந்து கொண்டிருக்கும் என்று எண்ணி எத்தனை இளைஞர் கள் தங்களுடைய இளமையின் ஆற்றல்களை வீண் விரயம் செய்துவிடுகின்றனர். ஆனால் இளமை என்னும் கிணறு வரட்சியடைய ஆரம்பித்ததும்தான் அவர்களுக்குத் தங்களின் ஆற்றலின் மதிப்புத் தெரியவருகிறது. அதன்பின் தெரிந்தும் என்ன பயன்? தெரியாதிருந்தும் என்ன பயன்?

சில இடங்களில் மழைக் காலத்தில் ஆறுகள் வழிந் தோடுகின்றன. ஆனால் கோடை காலத்தில் வற்றி வரண்டு விடுகின்றன. அவ்வித இடங்களில் உள்ளவர்கள் அணைக் கட்டுகள் மூலம் தங்களுக்குக் கோடை காலத்திற்கு வேண்டிய நீரைத் தேக்கி வைத்துக் கொள்கிறார்கள். அதேபோன்று நம்முடைய உடல், மூளை ஆகியவற்றின் ஆற்றல் என்னும் ஆறும் நம்முடைய நடு வயதிலும் முதுமைப் பருவத்திலும் வற்ற ஆரம்பித்துவிடும். ஆனால் இளமையில் அதைச் சீராகச் செலவிட்டு வருவோமாயின் முதுமையில் நாம் இளைஞர்கள் போன்று முறுக்குடன் பணியாற்றி வரலாம்.

நம்முடைய உடல் ஓர் இயந்திரம் போன்றது. நம்முடைய உடற்சக்தியிலோ, மூளைச்சக்தியிலோ வரட்சி ஏற்பட்டு விட்டதானால், அது எவ்வளவு சிறிதாக இருந்தபோதினும் சரி; நாம் செய்யும் எல்லா வேலைகளிலும் அந்த வரட்சி பிரதிபலிக்கத் தவறாது. பலர் இளமையில் ஓய்வின்றி

உழைத்து வாலிபத்தின் உச்சத்திலும் முதுமையிலும் யாதொரு செயலும் செய்ய இயலாதவர்களாகி விடுகின்றனர். மின்சார விளக்கை எரியச் செய்த அவர்களுடைய சக்தியானது ஒரு மெழுகு திரியைக்கூட எரியச் செய்ய இயலாததாகி விடுகிது.

உலகின் கண்களையே கூச வைத்துவிடும் என்று வாய்கூசாது பெருமையடித்த அவர்களுடைய ஒளியானது அவர்களையே மங்கலான வெளிச்சத்தில் தட்டுத் தடுமாற விட்டு விட்டு அகன்று விடுகிறது. வாலிப முறுக்கில் பலர் ஓயாஉழைப்பை மேற்கொள்வதால் தங்களுடைய ஆற்றலை வீணாக்கி விடுகின்றனர். பலர் சோம்பேறித் தனத்தாலும், இரவு விழிப்பாலும். கெட்ட பழக்க வழக்கங்களாலும், துன்மார்க்கத்தில் ஈடுபடுவதாலும், அரைகுறை வேலை செய்வதாலும் தங்களுடைய உயிரனைய ஆற்றலை வீணாக்கி, நாசப் படுத்தி புதைகுழியை வெகு விரைவில் அடைந்துவிடுகிறார்கள்.

பந்தய விளையாட்டுகளில் ஈடுபட்ட பலர் தங்களுடைய ஆற்றலை எவ்வளவு வீணாகச் செலவழிக்கின்றனர்! பல மாதங்களில் செலவிடப்பட வேண்டிய அவர்களுடைய ஆற்றலானது சில நிமிடங்களில் செலவிடப்பட்டு விடுகிறது. உயிர் போயினும் தோல்வியடைவதில்லை என்று அவர்கள் உறுதியுடன் ஓடி இறுதியில் அவர்களுக்கு உயிர் போய் விட்டதோ என்று ஐயுறும்படியான களைப்புடனும் மயக்கத் துடனும் அவர்கள் தங்களின் குறிக்கோளை அடைகின்றனர். இவ்வாறு ஆரோக்கியத்திற்காகவும் உல்லாசத்திற்காகவும் விளையாடப்பட வேண்டிய பல விளையாட்டுக்கள் போட்டிப் பந்தயத்திற்காக விளையாடப்பட்டு ஆற்றலெல்லாம் வீணடிக்கப்படுகிறது.

பலர் தங்களின் ஆற்றல்களை அதிகப்படுத்துவதாகக் கூறிக்கொண்டு நாளொன்றுக்கு நூற்றுக்கணக்கான கஸரத்துகளையும், பஸ்கிகளையும் செய்து தங்களுடைய

உடலை அளவுக் கதிகமாக முறுக்கி விரைவில் அதைத் தெறிக்க வைத்து விடுகின்றனர். இதன் காரணமாகப் பயில்வான்களும், சாண்டோக்களும் நீண்ட நாள் உயிர் வாழ்வதில்லை.

''தாங்கள் செய்யும் ஒவ்வொரு வேலையிலும் அதற்கு எவ்வளவு செலவிடவேண்டுமோ அதைவிடப் பத்துமடங்கு அதிகமான வன்மையைப் பலர் செலவழிக்கிறார்கள்' என்று ஒரு புகழ்பெற்ற மருத்துவர் கூறுகிறார். ஒரு கடப்பாரையை பிடிப்பது போன்ற பலர் பேனாவைப் பிடித்து, ஒரு பயில்வான் ஒரு பளுவைத் தூக்கி எறிவதற்கு எவ்வளவு ஆற்றலைச் செலவழிப்பானோ அவ்வளவு ஆற்றலைத் தங்களுடைய கையெழுத்தைப் போடுவதில் செலவிடுகின்றனர்.

பொய் மதிப்பையும், வீண் பெருமையையும் கருதி, கையை வீசிக்கொண்டும் தலையைப் பிடரியில் விழுமாறு நிமிர்த்திக்கொண்டும் அகலக்கால் வைத்து ஆங்காரமாக நடந்தும் எவ்வளவு பேர் தங்களுடைய ஆற்றலை விரயமாக்குகின்றனர்! அவர்களைக்கண்டு நாம் அனுதாபப் படாமல் இருக்க முடியவில்லை.

நீங்கள் என்று இயற்கையின் ஆற்றலை மீறுகிறீர்களோ அன்றே இயற்கை தன்னுடைய 'பில்'லை உங்களுக்கு அனுப்பி வைத்துவிடாது. அதனுடைய வங்கியில் நீங்கள் போட்டிருக்கும் தொகைக்கு அதிகமாகக் கடன் வாங்கத் துவங்கி உங்களுடைய உடலை அதற்கு ஒத்தி வைக்கத் துவங்கிவிட்டால் உடனே இயற்கை தன்னுடைய கணக்கை உங்களுடன் முடித்துக்கொள்ளும். நீங்கள் வேண்டும் கடனையெல்லாம் அது உங்களுக்கு அளிக்கும். ஆனால் அதனைத் திரும்பப் பெறுவதில் ஷைலக் மாதிரித்தான் இருக்கும். உங்களுக்கு நாற்பது வயது ஆகியபின்தான் அது தன்னுடைய 'பில்'லை உங்களிடம் காட்டுகிறது. நீங்கள்

அதற்குக் கட்டவேண்டிய பாக்கிக்குப் பதிலாக உங்களுடைய உடல் நலத்தையே, உங்களுடைய உயிரையே எடுத்துக் கொள்கிறது. உங்களுடைய திறமையின்மைக்காக, அறியாமைக்காக அது ஒரு போதும் உங்களை மன்னிப் பதில்லை. அதனுடைய சட்டத்தை மீறின் அதற்குரிய தண்டனையை அடைந்துதான் தீரவேண்டும். அதிலிருந்து நீங்கள் தப்பவே முடியாது.

ஒருவன் எவ்வளவு உடல் நலமுள்ளவனாகவும் திறமை சாலியாகவும் இருந்தபோதினும் அவனுடைய ஆற்றல்கள் தொடர்ச்சியாக அளவுக்கதிகமாக உபயோகப்படுத்தப்பட்டு வந்தால், ''எவ்விதம் வளைத்துக் கட்டி வைக்கப்பட்டிருக்கும் வில்லானது தொய்ந்து போகுமோ அதே போன்று தொய் வடைந்து போகும் என்பதில் ஐயமில்லை.

ஓயாது வேலை செய்து கொண்டிருக்கும் ஒருவன், அடிக்கடி ஓய்வு கொண்டு வேலை செய்பவன் போன்று வன்மையுடன் வேலை செய்ய இயலாது. அவனுடைய செயலில் பலவீனமும் களைப்பும் பிரதிபலித்துக் கொண்டிருக்கும். ஆனால் அடிக்கடி ஓய்வு கொண்டு வேலை செய்பவனின் வேலை புதுமை மலர்ச்சியுடன் பொலிவுற்று விளங்கும். அதிலே சாவின் அறிகுறி காணப்படாது. அழியாத்தன்மை சீர்பெற்று இலங்கும்.

இதையறியாது பலர் ஓய்வு கொள்ளாது உழைத்து, தங்களுடைய வேலையையும் கெடுத்துக் கொள்வதுடன் தங்களுடைய உயிருக்கும் உலை வைத்து விடுகின்றனர். 'வேலையை விடுத்துச் சிறிது நேரம் ஓய்வு கொள்ளுங்கள்!' என்று நாம் அவர்களிடம் கூறப்புகின் அவர்கள் நம்மைப் பார்த்து நகைப்பர். ஆனால் சிறிதுகாலத்தில் அவர்கள் நடைதளர்ந்து, மூளை வன்மை குன்றி, நரம்புத் தளர்ச்சி பெற்றுத் தங்களின் இழந்த ஆற்றலைத் திரும்பப்

பெறுவதற்காக மருந்துக்கென பெரும் பொருள் செலவழிப் பதை கண்டு நாம் வருந்தாமல் இருக்க முடிவதில்லை. அதன்பின் அவர்கள் என்ன செய்தும் என்ன பலன்? கடையில் போட்ட முதலை யெல்லாம் எடுத்துச் செலவிட்டு விட்டால் பின்பு கடையை மூடவேண்டியது தானே பாக்கி.

ஆகையால் உடலாகிய உங்களுடைய கடையில் இருக்கும் முதல்களை ஒருபோதும் அளவுக்கதிகமாகச் செலவிடாதீர்கள். செலவிடுவதற்கு அதிகமாக ஓய்வு கொள்வதன் மூலம் சேமித்து வைப்பீர்களாக!

காந்தியடிகள் எவ்வளவு மகத்தான பொறுப்புச் சுமைகளைத் தாங்கி, எவ்வளவு மாபெரும் போராட்டங்கள் நடத்தினார்! எனினும் அவர் எவ்வளவு சீராகத் தம்முடைய ஆற்றலைச் செலவிட்டார் என்பதையும் நாள் தவறாது உலவச் சென்றும் அடிக்கடி விகடம் பேசிச் சிரித்தும், வேளா வேளைக்கு நல்ல சத்தான உணவை உட்கொண்டும், வாரத்திற்கு ஒரு நாள் மௌன விரதம் மேற்கொண்டும் அவர் எவ்வாறு தம்முடைய ஆற்றலைப் புதுப்பித்து வந்தார் என்பதையும் பாருங்கள்! அவர் ஒருமுறை கூட உரக்க - தொண்டை கிழியக் கத்திப் பேசியது கிடையாது. அவர் தம்முடைய வேலைக்கு அடிமையாயிருக்கவில்லை. வேலையைத்தான் அவர் தம்முடைய அடிமையாக்கிக் கொண்டிருந்தார்.

ஆனால் உலகில் பெரும்பாலோர் தங்களுடைய வேலைக்குத் தலைவர்களாயிராது அதன் அடிமைகளாகி விடுகின்றனர். வெற்றி பெறவேண்டுமென்னும் ஆசையின் காரணமாக அவ்விதம் செய்வதாக அவர்கள் கூறலாம். அவ்விதமாயின் காந்தியடிகள் அடைந்த வெற்றி சாமானிய வெற்றியா? பாவம்! அவர்கள் தொழில் இயந்திரத்தின் ஒரு பாகமாகத் தங்களை ஆக்கி அதற்கே தங்களைப் பலியாக்கிக்

கொள்கின்றனர். வேலையில் கூட எவ்வித மாறுதலுமின்றி நேற்று செய்த வேலையை இன்றும் செய்து வருகிறார்கள்.

பலன் என்ன? சிறிது காலத்திற்குள் கையெழுத்துப் போடுவதற்குக் கூட அவர்களுடைய கை நடுங்குகிறது. அவர்கள் வெகு முயற்சியுடன் தங்களின் கால்களை இழுத்துச் செல்கிறார்கள். அவர்கள் கோடி கோடியாய்ப் பணத்தைக் குவித்திருந்தும் என்ன பயன்? அவர்கள் வாழ்க்கையில் தோல்வியடைந்தவர்களே யாவர்.

தனக்கு எப்பொழுது ஓய்வு என்பதை மூளை உடனே தெரிவித்து விடுகிறது. உங்களுக்கு இன்பமாகக் காணப்பட்ட வேலையை நீங்கள் எப்பொழுது சிறிது சிரமத்துடன் செய்கிறீர்களோ, எப்பொழுது உங்களுடைய நடை தளர்கிறதோ, எப்பொழுது சிறுசிறு விஷயங்கள் உங்களைக் கோபமடையச் செய்து உங்களைச் சிறு சிறு துண்டுகளாக ஆக்கிவிடுகின்றனவோ, அவையே இயற்கை உங்களுக்கு இடும் எச்சரிக்கைகளாகும். இதையறிந்து யார் ஓய்வு கொள்ளவில்லையோ அவர்கள் தங்களுடைய ஓய்வை விரைவில் மருத்துவமனையில் பெற்றுக்கொள்ள வேண்டும் அல்லது புதைகுழியில் பெற்றுக் கொள்ளவேண்டும்.

கலைகளுக்குள் எல்லாம் பெரிய கலை என்னவென்றால், ஆற்றலை வீணாக்காது சேர்த்துக்கொண்டு வருவதுதான். ஆற்றல் சேர்த்து வரப்படின் ஒருவனுக்கு தன்னம்பிக்கை இயற்கையாகவே ஏற்படுகிறது. எந்நிலையைச் சமாளிக்கவும் அவன் ஆற்றல் பெற்று, கவலை, ஐயம் ஆகியவற்றிற்குப் பலியாகாது வேலையை உற்சாகத்துடனும், துணிவுடனும் செய்து வெற்றியடைகிறான். துன்பங்களைக் கண்டு பலவீன மானவன் பதுங்கும்பொழுது ஆரோக்கியமுள்ளவன் நகைக்கிறான். அவற்றை வெற்றி கொள்ளக் கச்சை கட்டுகிறான்.

வாழ்க்கையில் முன்னேற்றமடைவதின் பாதி இரகசியம் என்னவெனில், ஒழுங்கான பயிற்சி மூலம் தன்னுடைய உடலைப் பேணி, எந்நிலையிலும் சமாளிக்க அதனைத் தகுதிப்படுத்திக் கொள்வதுதான். எனவே, ஒவ்வொருவனும் வேளா வேளைக்கு நல்ல உணவு உட்கொள்ள வேண்டும். நன்கு உழைக்கவேண்டும். தூங்குகிற வேளையில் அமைதி யுடன் நன்கு தூங்கவேண்டும்.

ஒரு செல்வந்தர் தம்முடைய மாளிகையில் விருந்தொன்று நடத்தினார். பத்து மணி அடித்ததும் அவர் தம்முடைய வழக்கப்படி படுக்கைக்குச் சென்றுவிட்டார். அவர் தம்முடைய வாழ்க்கை ஒழுங்கை எக்காரணத்தைக் கொண்டும் கெடுத்துச் கொள்ள விரும்பவில்லை. உரிய நேரத்திலல்லாது தவறிய நேரத்தில் தம்முடைய வாழ்க்கை வண்டியை ஓட்டிச் சென்று இயற்கை வண்டியுடன் மோதிக் கொள்வதில்லை அவர். அவர், தம்முடைய இயந்திர வண்டியில் அதிகமானபளு ஏற்றி விடுவதுமில்லை. அதனைக் குறைவாகக் கவனிப்பதுமில்லை. அதனால் அவர் ஒவ்வொரு நாளும் தம் அலுவலகத்திற்கு குஸ்தி பயில்வான் கோதாவில் நுழைவது போன்று வந்து கொண்டிருந்தார்.

உங்களுடைய வண்டியின் கடையாணி ஒடிந்தும், சக்கரம் உளுத்தும் போயிருந்தால் அதில் ஏறிப் பிரயாணம் செய்வீர் களா? ஒருபோதும் மாட்டீர்கள். ஆனால் இறைவன் செய்த பெரும் இயந்திரமாகிய உங்களுடைய உடலில் ஆயிரக் கணக்கான ஓட்டைகளையும், குறைகளையும் வைத்துக் கொண்டு அதற்குப் போதிய உணவும், ஓய்வும், உறக்கமும் அளித்து அதனை ஒழுங்குபடுத்தாது வாழ்க்கைப் பாதையில் செலுத்திக் கொண்டு சென்றால் எவ்வளவு அபாயத்தில் போய் முடியும் என்பதை நீங்கள் எண்ண வேண்டாமா?

கொல்லன் தன்னுடைய வலக்கைக்கு அதிக வேலை கொடுத்து, இடக்கையைப் பலவீனமாக்கிக் கொள்வது போன்று பலர் தம்முடைய சில பாகங்களுக்கு அதிகமான உணவளித்து, மற்ற பாகங்களைப் பட்டினி போட்டு பெரும் பாலான நோய்களைத் தங்களுக்கு வரவழைத்துக் கொள் கிறார்கள்.

உலகில் இன்றைய சாபக்கேடு என்னவெனில், அதிக மாகச் சாப்பிடுவதும், தவறான உணவுகளை அருந்துவதும் தான். ஒழுங்காக உணவுகளை அருந்தாததன் காரணமாகப் பலவித நோய்களுக்கு ஆளாகி கார்லைல் துன்பச் சேற்றில் கிடந்து உழன்றார். ''எனக்கு வயிறு இருக்கிறது என்பதை அறியும் வரை நான் மகிழ்ச்சியாயிருந்தேன்'' என்று அவர் பிற்காலத்தில் வருத்தத்துடன் கூறினார்.

ஆனால் தியோடர் ரூஸ்வெல்ட் எவ்வளவு புத்திசாலித் தனமாகத் தம்முடைய ஆரோக்கிய வாழ்வுக்கு வழி கோலினார் என்பதைப் பாருங்கள்! அவர் கூறினர்; 'நான் இளமையில் நோயுள்ள ஒல்லியான பையனாக இருந்தேன், நான் இப்பொழுது பெற்றிருக்கும் ஆரோக்கியத்தை நானே உண்டு பண்ணிக் கொண்டேன். நான் பலம் பொருந்தியவனாகவும் ஆரோக்கிய முள்ளவனாகவும் இருக்கத் தீர்மானித்தேன், அவ்விதமே ஆக என்னாலான எல்லாவற்றையும் செய்தேன்.''

எனவே, முன்னேறுவதற்கு முதல் தேவை என்ன வெனில் நாம் முதல்தர மனிதர்களாக இருப்பதுதான். ஆனால் மக்களில் பெரும்பாலலோர் உயிருடனுள்ள மரணத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய ஆரோக்கியத்தைக் கவனியாது, ஆற்றலை வீணாக்குவது தற்கொலை செய்து கொள்வதற்கு நிகராகும் என்பதை அவர்கள் உணர்கிறார் களில்லை. அவர்கள் இளமையிலேயே வேலைக்குத்

தகுதியில்லாதவர்களாகிவிடுவது உலகிற்கு எவ்வளவு நஷ்டம் என்பதை அவர்கள் அறிகிறார்களில்லை.

தவறான எண்ணங்களாலும், தவறான வழிகளாலும், அறியாத்தன்மையாலும் வாழ்க்கை நடத்துவதன் காரண மாகவே உடல் நலம் பெரிதும் பாதிக்கப்படுகிறது. சரியான, மகிழ்ச்சியான எண்ணங்களை எண்ணி வாழ்வதுதான் உடல் நலத்திற்கு உகந்த அருமையான மருந்தாகும். மூளை அரசாங்கத்தில் குழப்பம் ஏற்பட்டதும் உடல் அரசாங்கத்தில் உடனே அராஜகம் தலைவிரித்தாடத் துவங்கிவிடும். இதனாலேதான் ஒழுங்கான எண்ணங்களை எண்ணி வாழ்பவர்கள் தவறான எண்ணங்களை எண்ணி வாழ்பவர் களை விட நீண்ட நாள் வாழ்கிறார்கள்.

ஒருவன் நீண்ட நாள் வாழ விரும்பின் அவனுடைய மூளையானது தூங்கும்போது தவிர்த்து மற்ற நேரங்களில் சுறுசுறுப்பாய் இருக்கவேண்டும். எனவேதான், ஒவ்வொரு வரும் ஓர் உல்லாசப் பொழுதுபோக்கிற்கான வேலை (Hobby)யைக் கொண்டிருக்க வேண்டுமென்று கூறுகிறார் புகழ் பெற்ற டாக்டர் ஒருவர்.

அதிக வேலையைக்கொண்டு பலர் தங்களை அழித்துக் கொள்ளும்பொழுது, சோம்பேறித்தனத்தைக் கொண்டு பலர் தங்களுக்குத் தீங்கு விளைவித்துக்கொள்கின்றனர். வேலை யின்றி சோம்பிக்கிடக்கும் உடலும், மூளையும் தம்மைத்தாமே அழித்துக்கொள்கின்றன. ஒருவன் தான் என்ன செய்வது என்பதை அறியாதவனாய், எவ்வித ஆசையுமற்று, மறைந்து கிடக்கும் தன்னுடைய ஆற்றலை வெளிக்கொணர ஆற்றலற்று இருப்பானாயின் அவனுடைய மூளை அப்படியே ஸ்தம்பித்து விடுகிறது. ''பயன்படுத்து அல்லது இழந்துவிடு!' என்பதே இயற்கையின் கடுமையான சட்டமாகும். எவன்தன் ஆற்றலைச் சீராக உபயோகிக்கவில்லையோ அவனிடமிருந்து அதைப் பறித்துக்கொள்ளவும் இயற்கை தயங்குவதில்லை.

வேலை, மகிழ்ச்சியைப்போன்று ஒருவனின் நீண்ட ஆயுளுக்கு வழி கோலுகிறது. எனவேதான், நோய் வாய்ப்பட்டிருந்த ஒரு பணக்காரச் சோம்பேறியிடம் மருத்துவர் ஒருவர், ''நீ ஆறு பென்ஸிற்குள் வாழ்க்கை நடத்தவேண்டும். அந்த ஆறு பென்ஸையும் நீ உழைத்து ஈட்டவேண்டும்'' என்று கூறினார்.

நீங்கள் உடல் நலத்துடன் வாழ்வதற்குக் காரணம் என்னவென்று பீட்டர் கூப்பரிடம் கேட்கப்பட்ட பொழுது, ''நான் எப்பொழுதும் ஏதாவதொன்றைச் செய்து கொண்டு சுறுசுறுப்பாயிருக்கிறேன். அவ்விதம் செய்வதுதான் ஒருவன் உட்கொள்ளவேண்டிய மேலான மருந்தாகும். நான் தொண்ணூறு வயதுவரை வாழ்ந்திருப்பேன், எதிர்பார்க்காத அந்தக் காலத்தில் நான் செய்தது போன்று இப்பொழுதும் மாடிப்படியில் இலகுவாக ஓடி ஏறி இறங்குகிறேன்'' என்று பதில் கூறினார் அவர்.

பெரும் பொறுப்பு ஒருவனுடைய ஆரோக்கியத்தின் பாதுகாவலனாக அமைந்துவிடுவதை நாம் பார்க்கலாம். பொறுப்பு வாய்ந்த பதவிகளில் வீற்றிருக்கும் பலர் அரிதாகவே நோய்க்கு ஆளாகின்றனர். தங்கள்மீது மகத்தான பொறுப்பு சுமந்திருக்கிறது; அது வெற்றியடைவதும் தோல்வியுறுவதும் தங்களுடைய செயலையே பொறுத்திருக்கிறது என்ற எண்ணமானது நோயை அவர்கள் அச்செயலைச் செய்து முடிக்கும் வரை அப்பாற்படுத்தி விடுகிறது.

உழைப்பும், பொறுப்பும் நோயை விரட்டியடிப்பதற்கான சரியான ஆயுதங்களாகும். ஒருவனுடைய மூளை பூரணமாக வேலையில் ஈடுபட்டிருக்கும் பொழுது ஆரோக்கியத்தின் பகைவர்களான ஐயம், கவலை, அச்சம் ஆகியவை அதிலிருந்து விரட்டியடிக்கப்படுகின்றன. எனவே, உடலுக்கும் மூளைக்கும் ஆன்மாவுக்கும் வேலை கொடுப்பதுதான்

ஆரோக்கியத்தின் முக்கிய பகுதியாகும், குடியிருக்காத வீடு பாழடைந்து விடுவது போன்று உபயோகப்படுத்தப்படாத இயந்திரம் துருப்பிடித்துப் போவது போன்று வேலை இல்லாத மனிதனும் வெகு விரைவில் அழிந்தொழிவான்.

சலனப் புத்திக்காரன் மூளைக்கு அதிகமான வேலை கொடுத்து அதன் சக்தியைப் பாழாக்குகிறான். அவனுடைய மூளை அங்குமிங்கும் அலைந்து எண்ணத்தொலையா வீண எண்ணங்களையெல்லாம் எண்ணி ஆற்றல் குன்றி வீணாகி விடுகிறது.

இரவில் படுக்கைக்குச் செல்லுமுன் உங்களுடைய அந்த நாள் வேலையை உங்கள் மனக்கண்முன் கொண்டுவந்து உங்களுடைய சக்தி எந்தெந்த வகையில் வீண் செலவாக்கப் பட்டிருக்கிறது என்பதைப் பாருங்கள்! அற்ப விஷயங்களி லெல்லாம் நீங்கள் எவ்வளவு சக்தியை வீணாக்கி இருக்கி றீர்கள் என்பதைக் கவனியுங்கள். பிறருடன் நீங்கள் சிறு சிறு தவறுகளுக்கெல்லாம் கோபப்பட்டு விணாக்கிய சக்தியானது நீங்கள் அன்று வேலை செய்வதில் செலவிட்ட சக்தியை விட எவ்வளவு அதிகமானது என்பதையும் எண்ணிப் பாருங்கள்!

ஆனால் இரவில் நீங்கள் ஒய்வு பெற்றுச் சேர்த்து வைத்திருந்த அபூர்வமான சக்திகளெல்லாம் பளிங்குக் கடையில் பைத்தியம் பிடித்த எருது நுழைந்தது போன்று நீங்கள் உங்களுடைய அலுவலகத்திற்குள் புகுந்து பிறரைக்குறை கூறியும், வைதும், கோபித்தும் பொழுதைப் போக்கியதால் எப்படி வீணாக்கப்பட்டு உங்களைக் களைப்படைந்தவனாய்- பலவீனனாய் ஆக்கிவிட்டது என்பதையும் சிநந்தித்துப் பாருங்கள்!

பலர் அளவுக்கதிகமான ஜாக்கிரதை உணர்வினால் தாங்கள் செய்யப்போகும் செயலைப்பற்றி ஆயிரம்முறை எண்ணி எண்ணித் தங்களுடைய சக்தியை விரயமாக்கிவிட்டு

பின்பு செயலாற்ற ஆற்றலற்றவர்களாகி விடுகின்றனர். நெருப்பை அணைக்கச் சென்ற இயந்திரம் வழியிலேயே தன்னுடைய சக்தியை வீணாக்கிவிட்டு பின்பு நெருப்பை அணைப்பதற்கான தண்ணீரைப் பாய்ச்சுவத்தற்குச் சக்தியற்றதாய் போய்விட்டது போன்று அவர்களுடைய நிலையும் ஆகிவிடுகிறது.

பலர் பிரமாதமாகக் கனவு காண்பர். அதனைச் செயலாற்ற வேண்டுமென்று உறுதிகொள்வர். ஆனால் செயலாற்றத் தான் மாட்டார்கள். அவர்கள் தங்களின் கனவின் காரணமாகவும் உறுதியின் காரணமாகவும் தங்களின் சக்தி எவ்வளவு வீணாக்கப்பட்டது என்பதையும் அந்த வீணாக்கப்பட்ட சக்தியில் ஒரு பாகத்தைச் செயலாற்றுவதில் செலவழித்திருந்தால் எவ்வளவோ நல்ல பலன்களை அளித்திருக்கும் என்பதையும் அறிவதில்லை.

எனவே எவை எவை உங்களுடைய சக்தியை அட்டை உறிஞ்சுவது போன்று உறிஞ்சுகின்றனவோ அவற்றையெல்லாம் உங்களை விட்டு விரட்டியடியுங்கள்! நீங்கள் தவறான பாதையில் அடியெடுத்து வைத்திருப்பின் உடனே பின்வாங்கி விடுங்கள்! நீங்கள் தவறு செய்திருப்பின் அதனை ஒழுங்கு பண்ணுவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்கள்! தவறான பழக்க வழக்கங்களை உடனே விட்டு விடுங்கள்! அவற்றைத் திரும்பவும் மேற்கொண்டு விடாதீர்கள்! உங்களுடைய ஆற்றலைக் குன்றச் செய்யும் எந்தச் செயலையும் நீங்கள் செய்ய வேண்டாம்!

ஒரு காரியத்தைச் செய்வதற்குமுன் அது உங்களுடைய சக்தியை அதிகப்படுத்தி மனித இனத்திற்கு நீங்கள் அதிகத் திறமையுடன் பணியாற்ற வழி கோலுமா என்று உங்களையே நீங்கள் கேட்டுக் கொள்ளுங்கள். உங்களுடைய சக்தியை வீணாக்கி உங்களுடைய வெற்றியை கொள்ளை கொள்வது

ஏதுவோ அதனை நீங்கள் கண்ணெடுத்தும் பார்க்க வேண்டாம்!

நாம் எங்குப் பார்த்தாலும்-சிறப்புறு வருங்காலத்தைப் பெற்றிருக்கவேண்டிய இளைஞர்கள் தங்களின் இளமையிலேயே முடமாக்கப்பட்டு, தங்களின் கொள்கைப் பாதையில் நிற்கும் தடங்களை எதிர்த்து நிற்க சக்தியற்ற வர்களாயிருக்கிறார்கள். அவர்கள் தங்களின் வேலையை எவ்விதச் சுறுசுறுப்புமின்றி கொட்டாவி விட்டுக்கொண்டு செய்கிறார்கள். நூற்றுக்கணக்கான ஓட்டைகளின் வழியாக அவர்கள் தங்களின் சக்தியை வீணாக்கிவிட்டு செயலாற்ற ஆற்றலற்றவர்களாகி விடுகின்றனர்.

பலர் பிறருக்கு நல்லவல்களாக இருக்கின்றனர். ஆனால் அவர்கள் தங்களுக்கு நல்லவர்களாக இருப்பதில்லை. அவர்கள் மற்றவர்களுக்கு ஊழியர்களாக இருக்கிறார்கள் ஆனால் தங்களுக்கோ கொடுங்கோலர்களாக விளங்கு கின்றனர். பிறரிடம் அன்பாய் இருப்பது விரும்பத்தக்க பண்புதான்; ஆனால் தன்னிடம் அன்பாயிருப்பது அவசிய மான பண்பாகும்.

மற்றவர்களுக்கு நல்லவனாக இல்லாதது எவ்வளவு பெரிய பாவமோ அதே போன்றே தனக்கு நல்லவனாக இல்லாமலிருப்பதும் மிகப் பெரிய பாவமாகும்.

ஆதலின் ஒவ்வொருவனும் தன்னால் இயன்ற அளவு உலகிற்கு ஆற்ற வேண்டிய மிகவும் மேலான செயலை ஆற்றுவதற்குத் தன்னை எப்பொழுதும் தகுதி உள்ளவனாக வைத்துக்கொள்ள வேண்டியது அவனுடைய புனிதமான கடமையாகும்.

பலர் வாழ்வைத் துவங்கிய இடத்திலேயே வெகு காலமாக நின்று கொண்டிருக்கிறார்கள். அல்லது அதில் இருந்து பின்

வாங்கியிருக்கிறார்கள். காரணம், அவர்கள் தங்களின் மூளை, உடல் ஆகியவற்றின் ஆற்றலை வீணாக்கி விட்டது தான்.

பல வியாபாரிகள் பெரிய பலனைப்பெற யுக்தியுடன் முயற்சியாற்றுகின்றனர். ஆனால் தங்களின் வியாபார விஷயத்தில் அவ்வளவு கவனம் செலுத்தும் அவர்கள் தங்களின் ஆற்றலைச் செலவிடும் விஷயத்தில் போதிய அக்கறை எடுத்துக் கொள்கிறார்களில்லை.

பலர் தங்களுடனேயே பெரும் போர் நடத்துகிறார்கள். அவர்களுடைய பெரிய பகைவன் அவர்களகவே இருக்கின்றனர். தங்களிடமிருந்து பெரிய பலனை அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். ஆனால் அதைப் பெறுவதற்கான தயாரிப்புடன் தங்களை அவர்கள் வைத்துக் கொள்வதில்லை.

அவர்கள் தங்களுடைய உடலை அதிகச் செல்லம் காட்டிச் சீராட்டி வளர்க்கிறார்கள், அல்லது கணமேனும் கவனியாது விட்டு விடுகிறார்கள். அவர்கள் கண்டதையெல்லாம் சாப்பிட்டு தங்களுடைய ஜீரணக் கருவிகளுக்கு அதிகமான வேலை கொடுக்கின்றனர். அல்லது சரியான உணவைப் போதுமான அளவு உட்கொள்ளாது அதனை வருத்துகின்றனர்.

ஒரு தச்சர் ஒடிந்த கத்தியை வைத்துக்கொண்டு வேலையைத் துவங்குவாரா? மாட்டார். ஒரு நாவிதர் மொட்டைக் கத்தியை வைத்துக்கொண்டு க்ஷவரம் செய்ய ஆரம்பித்தால் அவருடைய கடை உருப்படுமா? மாட்டாது.

ஒருவன் தன்னுடைய வேலை உன்னதமானதாக இருக்க வேண்டுமென்று விரும்புவானாயின்--அது ஓவியமாக இருக்கட்டும் அல்லது காவியமாக இருக்கட்டும்-அவன் தன் துணைக்கருவிகளை உன்னதமான நிலையில் வைத்துக் கொள்ளவேண்டும். இல்லையெனில் அவனுடைய வேலையும் மட்டரக மாகத்தான் இருக்கும்.

எவ்வாறு நீரில் மூழ்கிக் கொண்டிருப்பவன் தன் கைக்கு அகப்பட்ட கட்டையைப் பலமாகப் பிடித்துத் தன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்வானோ, அதே போன்று நீங்களும் உங்களுடைய அணுவத்தனை சக்தியையும் பற்றிப் பிடித்துச் சேர்த்து வைப்பீர்களாக! ஏனெனில், அதுவே வெற்றிக்கான மூலதனமாகும். அந்த மூலதனத்தின் முன் பண மூலதனம் ஏம்மாத்திரம்?

நீங்கள் அதிமேதையாயிருந்த போதினும் உங்களுக்குப் போதிய உடல் பலம் இல்லையாயின் உங்களால் எந்தச் செயலைச் சாதிக்க முடியும்? தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருப்பவன் கையில் தங்கம் இருந்தும் அதனால் அவனுக்கு என்ன பலன்?

உடல் உரம் பெற்றிருந்ததனால்தான் நெப்போலியன் குதிரை மீது இருபதுமணி நேரம் தொடர்ச்சியாக வீற்றிருந்து செயலாற்றவும், ப்ரோகாமம்ஸ் பிரபு 176 மணி நேரம் தொடர்ச்சியாக வேலை செய்யவும், கிளாட்ஸ்டன் 84 வயதில் இங்கிலாந்தின் முதலமைச்சராயிருக்கவும், கோடரி பிடித்து விறகு பிளக்கவும், ஹென்றி ஜெங்கின்ஸ் 100-ஆம் வயதில் வேகமாகப் பாயும் ஆற்றை எதிர்த்து நீந்தவும், தாமஸ் பார் 142-ஆம் வயதில் பந்தய ஓட்டம் ஓடவும் இயன்றது.

ஆதலின், எமர்ஸன் கூறுவது போன்று உடல் நலமே ஒருவனின் முதற் செல்வமாகும். வாழ்க்கை என்றால் என்ன? வசிப்பதல்ல; நல்ல உடல் நலத்தை அனுபவிப்பதேயாகும் அது. நல்ல உடல் நலத்தை அனுபவித்த ஒவ்வொருவரும் ஒரு நூறு ஆண்டுகளும் வாழலாம், அதற்கு மேலும் வாழலாம். அதனை எவ்விதம் வாழ்வது என்பதை அறியாத மக்கள் வெகு இளமையிலேயே இறந்து விடுகிறார்கள். அவர்கள் இறக்கவில்லை. தங்களையே தாங்கள் கொன்று கொள்கிறார்கள் எனவேதான், கிரேக்க அறிஞர் செனேகாவும் ''ஆண்டவன்

நமக்கு நீண்ட வாழ்நாளைத்தான் கொடுத்திருக்கிறான். ஆனால் நாமேதான் அதனைக் குறுகியதாக ஆக்கிக் கொள்கிறோம்'' என்று கூறினார்.

இறைவன் நமக்கு அருமையான இயந்திரம் ஒன்றைத் தந்திருக்கும்போது அதைப் பேணிப் பாதுகாக்க நமக்குத் தெரியாவிட்டால்-அதன் அமைப்புகளை நாம் அறிந்து செயலாற்றத் தவறிவிட்டால் அது எவ்வளவு பெரிய கேவலமாகும். இயற்கையின் சட்டங்கள் ஒவ்வொன்றையும் நாம் மீறிவிட்டு நீண்டகாலம் உயிர் வாழ நினைக்கிறோம். ஒரு கடிகாரத்தை திறந்த புழுதியிலும், வெயிலிலும், காற்றிலும், மழையிலும் போட்டுவிட்டு அது ஒழுங்காக வேலை செய்யும் என்று நாம் எப்படி எதிர்பார்கக முடியும்?

உருவமற்ற ஓர் இயந்திர விறபன்னனால் இயற்றப்பட்ட அற்புதமான கடிகாரமே நம்முடைய உடல். ஒரு நூற்றாண்டுக்கு ஓடுவதற்கு அவன் அதற்குச் சாவிகொடுத்திருக்கிறான். அதில் ஒரு தூசி விழுந்துவிட்டாலும், ஒரு தெறிப்பு ஏற்பட்டு விட்டாலும் அந்தக் கடிகாரம் பழுதாகி விடும். இதை அறியாது நாம் அதனைத் தாறுமாறாக உபயோகிக்கிறோம்.

நாள் ஒன்றுக்கு 2 ஆயிரம் தடவை பிராண வாயுவை உட்கொள்வதற்காக நம் சுவாசப்பை படைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் நாமோ, கும்பல் நிறைந்த சினிமாக்களுக்கும், நாடகங்களுக்கும் சென்று கரியமிலவாயுவைத் தாரளமாக உட்கொள்கிறோம்.

வயிறு செரிக்கும் வேலையைச் செய்து கொண்டிருக்கும்போது அதனைக் கொஞ்சமேனும் பொருட்படுத்தாது ஐஸ் தண்ணீரை உள்ளே ஊற்றுகிறோம்.அந்த அதிர்ச்சியிலிருந்து நீங்கி அது மறுபடியும் செரிக்கும் வேலையைத் துவங்குவதற்கான 98.4 டிகிரி நிலையைப் பெறுவதற்கு அரைமணி நேரமாகிறது என்பதையும் நாம் உணர்கிறோமில்லை.

உணவருந்தும் பொழுதும், உணவருந்திய பின்பும் மூளைக்கும் உடம்புக்கும் வேலை கொடுத்து இரத்தம் வயிற்றுக்குச் சென்று, ஜீரண வேலையில் வயிற்றுக்கு உதவி செய்வதைத் தடுத்து மூளைக்கும் தசைகளுக்கும் அதனை வரவழைத்துக் கொள்கிறோம்.

இதயமானது அரை இராத்தலுக்குச் சிறிது அதிகமான கன முடையதாயிருந்த போதினும் அது தன்னிலிருந்து உடலின் ஒவ்வொரு மூலைமுடுக்குக்கும் எத்தனை பவுண்ட் இரத்தத்தைப் பாய்ச்சுகிறது என்பதைப் பாருங்கள்! 124 டன் கனத்தை ஓர் அடி உயர்த்துவதற்குச் சமமான வேலையை அது ஒவ்வொரு நாளும் செய்கிறது.

அது தன்னுடைய முழு ஆற்றலையும் உபயோகித்துத் தன்னை உயர்த்துவதாயிருந்தால் மணிக்கு 2,000 அடி வீதம் உயர்த்தும், அதாவது ஒரு மனிதன் மலைமீது ஒருமணி நேரம் ஏறினால் எவ்வளவு ஏறுவானோ அதைவிடப் பத்து மடங்கு அதிகமாக இவ்வாறு அது அடிமை போன்று உழைக்கும் பொழுது, ராகிரிகளை உபயோகித்து அதற்கு அளவுக்கதி கமான வேலை கொடுத்தால் அதனால் எவ்வளவு காலம் நீடித்து வேலை செய்ய இயலும்?

சிந்தனையாளர் பலர் மூளைக்கு வேலை கொடுப்பதன் காரணமாக தூக்கமின்மை என்னும் கொடும் நரகத்தில் தள்ளப்படுகிறார்கள். ஆங்கில இலக்கிய மேதை கோல்ட் ஸ்மித்துக்குப் பூரண களைப்பேற்பட்டாலொழிய தூங்க இயலாமற் போய்விட்டது.

பலர் ஓய்வின்றி மூளைக்கு வேலை கொடுப்பதனால் பிற்காலத்தில் அவர்களையும் மீறி அது இரவு பகலாக வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது. கலீலியோ அதற்குச் சிறந்த உதாரணமாவர். தூக்கமின்மையினால் அவர்தம் மூளையின் மீது கொண்டிருந்த பிடியை நழுவ விட்டார். அவருடைய

மூளை இரவு பகலாக, தூக்கம் நடுவே குறுக்கிட்டு நிறுத்தும்வரை வேலை செய்யுமாம்.

மாபெரும் மருத்துவரான ஹாலர் மாதக்கணக்காகத் தம்முடைய படிப்பறையில் அமர்ந்து, விடாது ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பார். சாப்பிடுவது, தூங்குவது எல்லாம் அங்குதான். பலன் என்ன? தம்முடைய ஆயுளையே அவர் குறைத்துக் கொண்டார்.

சர் வால்டர் ஸ்காட்டும் இடை விடாது மூளைக்கு வேலை கொடுப்பவர். அவ்விதம் அவர் செய்ததை அவருடைய நண்பர் ஒருவர் கண்டித்த பொழுது, 'கேத்தல் நீரை நெருப்புள்ள அடுப்பில் வைத்தபின் அது கொதிப்பதைத் தடுக்கமுடியுமா?'' என்று கூறினார் அவர்.

கதே ஒரு நூல் எழுதி முடித்ததும் கடும் நோயில் வீழ்ந்து விடுவார். இயற்கை நூல் விற்பன்னராகிய சார்லஸ்லின்னாஸ் அதிகமாக மூளைக்கு வேலை கொடுத்ததனால் தம்முடைய வேலையையே அவரால் இலக்குக் கண்டுபிடிக்க இயலவில்லை. தம்முடைய பெயரையும் கூட அவர் மறந்துவிட நேர்ந்தது.

அதிக மூளை உழைப்பினால் பலர் அகால மரணம் அடைகின்றனர். பாலி 39-ஆவது வயதில்இறந்தார். கவிஞர் கீட்ஸ் 25-ஆவது வயதில் இறந்தார். இலக்கிய மேதை சேட்டர்டன் 18-ஆவது வயதில் இறந்தார். இவ்வாறு விரியும் முன்பே மொட்டுகள் கருகிவிடுகின்றன.

மாபெரும் ஓவியன் ஒருவன் அழகிய ஓவியம் ஒன்றை ஒவ்வொரு நாளும் விடிந்தெழுந்தவுடன்ஆரம்பித்து படுக்கைக்குச் செல்லும்வரைத் தீட்டுகிறான். ஆனால் அவன் தூங்கச் சென்றதும் மங்கல் வெளிச்சத்தில் ஒருவன் மெதுவாக அடியெடுத்து வைத்து அந்த ஓவியத்தையே கெடுத்து நாசமாக்கி விடுகிறான். அவ்விருவரும் யார்? அவர்கள் தாம்

உடல் நலமும் நோயும்.

பதினாறாவது நூற்றாண்டில் போர்லண்ட் சீமாட்டி பதினாயிரம் டாலருக்கு ஓர் அழாகிய சலவைக் கல்லாலான கிண்ணத்தை வாங்கி பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலைக்கு அன்பளிப்புச் செய்தார். அது தூரத்தில் நின்று பார்த்தால் கண்களை வழுக்கி விழச் செய்யும் அளவு அழகுடன் காட்சியளிக்கும். ஆனால் அதன் அருகில் நெருங்கிப் பார்த்தாலோ அதில் நூற்றுக்கணக்கான உடைப்புகள் இருப்பதைக் காணலாம். ஒரு பைத்தியக்காரன் அதை ஒரு தடவை கழியால் அடித்துச் சுக்கு நூறாக்கிவிட்டானாம். அதன்பின் அது வெகு பிரயாசையுடன் பொருத்தப்பட்டதாம். எனினும் அது ஒரு பழுதான கிண்ணம்தானே.

இந்தக் கிண்ணமே போன்று பலரின் உடல் இருக்கிறது. அவர்கள் இயற்கை விதிகளைப் புறகணித்துத் தங்களின் உடலை நோயின் இருப்பிடமாக ஆக்கிக் கொள்கின்றனர். உடைந்துபோன அவர்களுடைய உடல், மருந்து, மருத்து வர்கள், தட்ப வெப்பநிலை, பிராயணம் ஆகிய சிமெண்டு களினால் பொருத்தப்பட்டிருக்கிறது.

ஹொரோஸ் மேன் பின்வருமாறு கூறினார்: 'ஆரோக்கிய விதிகளை நான் இப்பொழுது அறிந்திருப்பது போன்று என்னுடைய இருபத்து ஒன்றாவது வயதில் அறிந்திருந்தே னேயானால் இப்பொழுது செய்திருப்பதைவிட மிகவும் மேலாகவும் மிகவும் எளிதாகவும் செய்திருப்பேன். கிரகங்களின் சுழற் சுழிகளைப் பற்றி எங்களுக்குக் கல்லூரியில் சொல்லித் தந்தார்களே யொழிய உடல் நலத்தை பேணிப் பாதுகாப்பது என்பதை ப்பற்றி எடுத்துரைத்தார் களில்லை.''

முற்காலத்திலுள்ளவர்களெல்லாம் எவ்வளவு பலசாலி களாக இருந்தனர்! அவர்களுடைய உடலில் எவ்வளவு தாங்கும் சக்தி குடிகொண்டிருந்தது! பலவீனர்களாயிருப்பது ஒரு கேவலம் என்று ரோமானியர் கருதினர். பலவீனர்களையும்

அங்கஹீனர்களையும் எஸ்குலெப்பியஸ் தீவிற்கு நாடு கடத்த மாபெரும் அறிவாளியான கேட்டோ தீர்மானித்தார். அரசாங் கத்திற்கு உதவி செய்யப்போதிய உடல் உரம் பெற்றிரா தவர்களை நாடு கடத்தி வந்தது கிரேக்க அரசாங்கம். கிரீஸ் நாட்டில் அதிக உடல் உரம் பெற்றவன் மதிக்கப்பட்டான்.

ஆனால் இன்றோ, நம் இளைஞர்கள் உடல் நலத்தைப் பறக்க விட்டு விட்டு அதனை எங்கனும் வேட்டையாடித் திரிகிறார்கள். நாகரிகம் அவர்களின் உடலின் ஆற்றலை உறிஞ்சி எடுத்துக் கொண்டு வருகிறது. நகரங்கள் ஆரோக்கியத்தின் புதை குழிகளாக விளங்குகின்றன.

எல்லா வேலைகளையும் அவர்கள் அவசர அவசரமாகச் செய்கிறார்கள். அதிகவேலை செய்ய விரும்பி அவர்கள் நீடித்து வேலை செய்ய இயலாதவர்களாகி விடுகிறார்கள். இயற்கையான மரணத்தைப் பெறக்கூட அவர்களுக்கு ஓய்வு இல்லை. அவர்களின் வேகத்தைத் தாங்க முடியாது வாழ்க்கை இயந்திரம் 'டமார்' என்று தெறித்து விடுகிறது. மரணமும் காலத்திற்கேற்றார் போல் புதிய உருவத்தை எடுத்திருக்கிறது. முன்பெல்லாம் மக்கள் படுக்கையில் கிடந்து மரணமடைவர். ஆனால் இப்பொழுதோ திடீர் திடீரென மாரடைப்பால் மரணமடைந்து வருகிறார்கள்.

நல்ல எண்ணங்களும், நல்ல கொள்கைகளும் ஆரோக்கியமான மனத்திலிருந்துதான் உற்பத்தியாகின்றன. ஆனால் ஆரோக்கியமான மனமானது ஆரோக்கியமில்லாத உடம்பிற்கு அப்பாற்பட்டதாக இருக்க இயலாது.

ஒரு சுல்தான் தம்முடைய நோயைப் பற்றி ஒரு மருத்துவரிடம் ஆலோசனை கேட்டார். சுல்தானுக்குத் தேவை தூய காற்றும் உடற்பயிற்சியும்தான் என்பதை நாடியைப் பார்த்ததும் அறிந்து கொண்டார் மருத்துவர். அவர் சுல்தானைப் பார்த்து, ''நான் ஒரு பந்து தருகிறேன். அதில் அபூர்வமான மூலிகைகள் வைத்து அடைக்கப்பட்டிருக்கின்றன. தாங்கள்

ஒவ்வொரு நாளும் மட்டையை எடுத்து அதை வியர்க்கும் வரை அடித்துக் கொண்டிருங்கள்! நோயெல்லாம் பறந்தோடி விடும்'' என்று கூறினார். சுல்தானும் அவ்விதமே செய்தார். தாம் உடற்பயிற்சி செய்வதை அவர் அறியவில்லை. அவர் நோயும் பறந்தோடிவிட்டது.

எனவேதான் கிரேக்கர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்டதும் கேட்பர். உங்களுக்கு எப்படி வியர்க்கிறது? என்று அதன் பொருள் என்ன? 'நீங்கள் நலமாய் இருக்கிறீர்களா?' என்பதுதான்.

வியர்வை வரும்படியாக தேகப்பயிற்சி செய்வதும் தூய காற்றை உட்கொள்வதும் நீண்ட ஆயுளைப் பெறுவதற்கான வழிகளாகும்.

தூய காற்றை உட்கொண்டதால் தம்முடைய தொழிற் சாலையில் வேலை செய்த தொழிலாளர்கள் அதிகமான உணவை உட்கொண்டார்கள் என்றும், அவர்களுக்கு அவ்வளவு உணவளிக்கத் தம்மால் இயலாததால் ஜன்னல் கதவுகளில் பெரும்பாலானவற்றை மூடிவிட்டதாகவும் ஒரு முதலாளி காமன்ஸ் சபைக் கமிட்டியின் முன் கூறினார்.

வாழ்க்கையே ஒரு போராட்டம், வாழ்வும் மரணமும் ஒன்றையொன்று வெல்லலப் போராடிக்கொண்டிருக்கின்றன. தொட்டிலிலிருந்து சுடுகாடு வரும் வரையில் ஆயிரக்கணக் கான நோய்கள் நம்மை விடாது துரத்திக்கொண்டே வருகின்றன. நாம் உண்ணும் உணவிலும் அருந்தும் நீரிலும் உட்கொள்ளும் காற்றிலும் அவை குடிகொண்டிருக்கின்றன. தடுமன், களைப்பு, அஜாக்கிரதை என்ற பிளவுகளின் வழியாக வாழ்க்கைக் கோட்டையில் புகுந்து அதைக் கைப்பற்றிக் கொள்ள அவை வாய்ப்பை எதிர்பார்த்த வண்ண மிருக்கின்றன.

உணவுப் பஞ்ச காலத்தில்தான் நாட்டில் நோய்கள் கோர நாட்டியம் செய்கின்றன. எவ்விதம் அரசாங்கம் பல வீனமாயிருக்கும் பொழுது அராஜகம் தலைவிரித்தாடுமோ, அது போன்று உடல் வன்மை குன்றும்பொழுது நோய்கள் தலைதூக்கத் துவங்கி விடுகின்றன.

ஐம்பது ஆண்டுகளாக ஒரு பெட்டியில் வைக்கப் பட்டிருந்த ஒரு மாலுமியின் உடையை வெளியே எடுத்ததுதான், ஐரோப்பா முழுதும் ஒருமுறை காலரா பரவுவதற்குக் காரணமாயிருந்தது. அந்த உடையிலிருந்த காலராக்கிருமிகள் அவ்வளவு காலம் அதில் உயிரோடிருந்தன.

நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன் புதைக்கப்பட்ட எகிப்திய மம்மிகளின் கையிலிருந்த கோதுமைத் தானியங் களை எடுத்து விதைத்ததும் அவைமுளைத்துவளர்ந்தன. நாலாயிரம் ஆண்டுகளாக அந்தத் தானியங்களில் உயிர் மறைந்திருந்ததைப் பாருங்கள். அவை உயிர் பெற்று வளர்வதற்கு வேண்டியிருந்ததெல்லாம் மண்ணும், நீரும், காற்றும், வெளிச்சமும் தாம். அவை கிடைத்ததும் அத்தானியங்கள் முளைவிட்டுவளர ஆரம்பித்து விட்டன. அதேபோன்று நோய்களுக்கு வேண்டிய சாதகமான சூழந்நிலை ஏற்பட்டதும் அவை நம் உடலில் ஆட்சி செய்ய ஆரம்பித்து விடுகின்றன.

பிரெஞ்சு நாட்டின் புகழ்பெற்ற டாகக்டர் ஒருவர் மரணப் படுக்கையில் கிடந்தபொழுது மற்ற மருத்துவர்களெல்லாம் தங்களுக்கும் தங்களின் கலைக்கும் நிகழப்போகும் பெரும் நஷ்டம்பற்றிக் கவலை கொண்டிருந்தனர். அப்பொழுது இறந்து கொண்டிருந்த டாக்டர் கூறினார்: ''நீங்கள் கவலைப் பட வேண்டாம். என்னைவிடப் பெரிய மூன்று டாக்டர்களை நான் எனக்குப்பின் விட்டுச் செல்கிறேன். அவர்கள் தாம் தண்ணீர், உடற்பயிற்சி, உணவு. முதலாமதை தாராளமாக

உபயோகியுங்கள்! இரண்டாமதை ஒழுங்காக உபயோகி யுங்கள்! மூன்றாமதை நிதானமாக உபயோகியுங்கள்!''

நீங்கள் என்னுடைய ஆலோசனையைப் பின்பற்று வீர்களாயின் என்னுடைய உதவியே உங்களுக்குத் தேவையில்லாமல் நீங்கள் உங்களுடைய காரியத்தைத் திறம்படச் செய்வீர்கள். நான் பிழைத்து உயிர் வாழ்ந்தாலும் அவை மூன்றும் இல்லாது நான் ஒன்றும் செய்ய முடியாது. நான் இறந்து விடுவேனாயின் நீங்கள் என்னுடைய உதவியாளர்களாகிய அம்மூன்றுடனும் நட்புக் கொளின் உங்களுக்கு எவ்வித இழப்புமில்லை. நீங்கள் என்னையும் இழந்துவிட மாட்டீர்கள்''.

இவ்வாறு அவர் கூறிய அறிவுரையைக் கவனியாது செயலாற்றி வருவதன் பலனாகப் பலர் நோய்க்கு ஆளாவதை நாம் பார்க்கிறோம். 'சூரிய வெளிச்சம் வராது கதவை மூடு: டாக்டர் வரக் கதவைத் திறப்பாய்' என்று இத்தாலியப் பழமொழி ஒன்று கூறுகிறது.

டாக்டர்களோ, பிரெஞ்சுக் கவிஞர் மோலியர் கூறுவது போன்று, ''தாங்களே அறியாத மருந்துகளை, தாங்கள் மிகவும் குறைவாக அறிந்த உடலில் தங்களுக்குக் கொஞ்சமேனும் தெரியாத நோயைப் போக்க ஊற்றுகிறார்கள். முடிவு என்ன? இயற்கை நோயாளிகளைச் சுகப்படுத்துகிறது அல்லது மருந்து அவர்களைக் கொல்லுகிறது.''

நாம் மரணத்தைத் தடுத்து நிறுத்த இயலாவிட்டாலும் தாமதிக்கச் செய்யலாம். கி.பி. 1500ஆம் ஆண்டு மே மாதம் 17ஆம் தேதி இங்கிலாந்திலுள்ள யார்க்ஷயரில் பிறந்த ஹென்றி ஜென்னிங்ஸ் என்பவர் 170 வயது வரை உயிர் வாழந்தார். அவர் விடியுமுன் எழுந்திருப்பார். காலை உணவு அருந்துமுன் ஒரு கிளாஸ் நீர் அருந்துவார். உணவு

ஒழுங்காகவும், நிதானமாகவும் சாப்பிடுவார். அவருக்கு நோய் என்பதே வந்ததில்லை.

நீங்கள் எவ்வளவு வயதுவரை உயிர் வாழ்வீர்கள் என்று ஜெஷியா குவின்ஸீயை டாக்டர் ஜான்ஸன் கேட்டபொழுது 'மறுபடியும் டாக்டரைக் கூப்பிடும் வரை' என்று பதில் மொழிந்தார் அவர். 'தாங்கள் கடைசி முறையாக டாக்டரை எப்பொழுது கூப்பிட்டனுப்பினீர்கள்?'' என்று கேட்க பட்ட பொழுது குவின்ஸி புன்முறுவலுடன் கூறினார்: '86 ஆண்டுகளுக்கு முன்' என்று. அவர் இவ்வாறு கூறியபொழுது அவருக்கு வயது 86.

இவ்வாறு நீங்களும் எவ்வித நோயுமின்றி நீடூழி வாழந்து, வாழக்கயைில் வெற்றி காண விரும்புவீர்களாயின் ஆற்றலை வீணாக்காது, சீராகச் செலவிட்டுச் சேர்த்து, செல்வத்துள் செல்வமாகிய உடல் நலனைப் பெறுவீர்களாக!



# 10. கடமையை ஆற்றுக!

மனிதன் ஒரு சமுதாயப் பிராணி. மற்றவர்களுடன் சேர்ந்து வாழ்வதே அவனுடைய இயல்பு. ஆனால் எவன் அவ்விதம் சேர்ந்து வாழாதிருக்கின்றானோ அவன்-அரிஸ்டாட்டில் என்னும் கிரேக்க அறஞர் கூறுகிறபடி-ஒரு தெய்வீக புருஷனாக இருக்கவேண்டும் அல்லது ஒரு விலங்காக இருக்கவேண்டும்.

தனிமனிதனின் வாழ்வைப் பொறுத்தே சமுதாயத்தின் வாழ்வும் இருக்கிறது. எனவே மனிதன் வாழ வேண்டியது அவனுக்காக மட்டுமல்ல, பிறருக்காகவும். ஒவ்வொருவனும்-அவன் ஏழையாயிருந்தபோதினும், பணக்காரனாயிருந்தபோதினும்-நிறைவேற்ற வேண்டிய கடமைகள் பல இருக்கின்றன.

வாழ்க்கை சிலருக்கு இன்பத் தேனாக இருக்கிறது. சிலருக்கு துன்பக் கடலாக இருக்கிறது. ஆனால் மனிதர்களில் மேலான மனிதன் எவனெனில், எவன் உல்லாசத்திற்காகவும், வீண் பெருமைக்காவும் வாழ்க்கை நடத்தாதிருக்கிறானோ அவனேதான்; எவன் உன்னதமான குறிகோளில் ஈடுப்பட்டுப் பயன்படும் வேலையைச் செய்து வருகிறானோ அவனேதான்.

ஹியரோக்ளின் கூறுகிறார்: ''மனிதன் ஒன்றைவிட ஒன்று பெரிதாயுள்ள பல வட்டங்களுக்கு மத்தியிலிருக்கும் ஒரு புள்ளி மாதிரி இருக்கிறான். அவனைச் சுற்றியுள்ள முதலாவது வட்டம் அவனுடைய தாய் தந்தையர்கள், மனைவி, குழந்தைகள் ஆவர். அதற்கு அடுத்தபடியாக உள்ள வட்டம்

அவனுடைய உறவினர்கள். அதற்கடுத்தது அவனுடைய நாடு. நாட்டிற்கு அடுத்தது உலகம்.''

மனிதனைச் சுற்றியுள்ள முதலாவது வட்டம் அவனுடைய பெற்றோர்கள், மனைவி, குழந்தை ஆகியவர்களடங்கியதாகும். அவனுடைய பெற்றோர்கள் அவனைப் பெற்றெடுத்துப் பாலூட்டி, சீராட்டி, கண்ணேபோற் காத்து, வளர்த்து,கல்வி கற்பித்து உயரிய ஒழுக்கங்களைப் போதித்து, அவனை ஒரு மேன்மகனாக ஆக்க எடுத்துக்கொள்ளும் முயற்சிகள் சிறிதல்ல. அவ்விதம் செய்வது அவர்களுடைய கடமை. அவற்றை அவர் களிடமிருந்தும் எதிர்பார்ப்பது அவனுடைய உரிமை.

ஆனால் வயது வந்த அவனுடைய பெற்றோர்களும் முதுமை எய்திவிட்டால் அவர்களுக்கு ஊழியம் புரிந்து அவர்களைப் பொன்போற் போற்றிப்பாதுகாத்து வரவேண்டியது அவனுடைய கடமை. அந்தப் பாதுகாப்பை அவனிடமிருந்து எதிர் பார்ப்பது அவர்களுடைய உரிமை. இப்படியே கடமை உரிமையாகவும், உரிமை கடமையாகவும் ஆகி விடுகிறது.

''தந்தை உயிர் நீக்கும்வரை அவருடன் கூட இருந்து பணிவிடை செய்யாது துரிதமாகப் படுக்கச் சென்றுவிட்டேனே! அதனால் அவருக்கு இறுதிவரை ஊழியம் செய்யும் பேறு பெறவில்லையே'' என்று காந்தியடிகள் அடைந்த கவலை கொஞ்சமா?

தம் மகனை மேன்மகனாக ஆக்க தாய் தந்தையர்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு மகன் ஆற்றும் மாபெரும் கைம்மாறு என்ன? அவன் மேன்மகனாகி அவர்கள் பெற்ற பிள்ளை வீண் பிள்ளையல்ல, அவர்கள் அவனுக்காக எடுத்துக் கொண்ட முயற்சி வீண் முயற்சி அல்ல என்பதை நிரூபித்து அவர்களை மகிழ்விப்பதுதான்.

முஸோசினி இத்தாலியின் முதல் அமைச்சர் பதவி ஏற்றதும் கண்ணீர்விட்டார். ஏன்? தம்முடைய தந்தை அந்தக் காட்சியை கண்டுகளிக்க உயிரோடில்லையே. அதனால் தாம் அவருக்கு ஏற்படும் களிப்பைக் கண்டு மனநிறைவை யடையும் பேறு பெறவில்லையே என்று.

வயது வந்த மனிதன் மணம் செய்து பிள்ளைகளைப் பெற்றதும், தான் சிறுவனாய் இருக்கும்பொழுது தம் பெற்றோர்களிடமிருந்து உரிமையுடன் பெற்று வந்த எல்லாவற்றையும் தம் மக்களுக்கு அளித்து அவர்களை மேன்மக்களாக ஆக்க வேண்டியது அவனுடைய கடமையாக ஆகிவிடுகிறது. அது மட்டுமல்லாது அவன் தன்னுடைய உறவினர்களுக்கும் நாட்டிற்கும் உலகத்திற்கும் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறான். அவனுடைய வளர்ச்சிக்கும் அவன் வாழும் சூழலுக்கும் அவர்கள் காரணமாயிருந்திருக்கிறார்கள். எனவே அவர்களுடைய வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் அவன் பாடுபடக் கடமைப்பட்டிருக்கிறான்.

எனவே, ஒவ்வொருவரும் முதலில் செய்ய வேண்டிய தலையாய கடமை தன்னை ஒழுங்காக நிர்வகித்து, தன்னுடைய குடும்பத்தைக் கௌரவமாக நடத்த அல்லும் பகலும் அயராது உழைப்பதுதான், அதற்காகவேண்டி அவன் தன்னுடைய உடலைத் துன்பத்தின் இருப்பிடமாக ஆக்கிக் கொளினும் பாதகமில்லை, அவனுடைய காலத்தில் அவனுடைய குடும்பம் கெட்டு மெலிந்துவிட்டது என்னும் பேர் ஏற்படாது எவன் காத்துக்கொள்கிறானோ அவனே உலகத்தினரால் நன்கு மதிக்கப்படுவான்.

அதன்பின் உறவினர்களுக்கும், நாட்டு நலனுக்கும் உலக நன்மைக்கும் பாடுபடவேண்டியது ஒவ்வொருவனுடைய கடமையாகிறது. இந்தக் கடமைகளை ஆற்றுவதற்கு அவன் இடத்தையோ, காலத்தையோ, வாய்ப்பையோ, எதிர்பார்கக

வேண்டி தேவையில்லை. அவற்றை ஆற்ற வேண்டுமென்ற உறுதி அவனுக்கு ஏற்பட்டுவிடின் இடம், காலம், வாய்ப்பு ஆகியவை எல்லாம் அவனுக்கு உதவி செய்ய, அவனை நோக்கி ஓடி வர ஆரம்பித்துவிடுகின்றன.

கடமை என்பது நல்லவற்றைச்செய்வது மாத்திரமல்ல. கெட்டவற்றை எதிர்த்துப் போராடுவதுமாகும். கெட்டவற்றை எதிர்த்துப் போராடினால்தானே நல்லவற்றைக் காப்பாற்ற முடியும். குப்பைகளைப் பெருக்கினால்தானே வீடு, தூய்மையாக இருக்கமுடியும். மற்றவர்களின் துன்பங்களைப் போக்க முயல்வது மட்டும் நம்முடைய கடமையன்று, மற்றவர்கள் துன்பப்படாமல் நாம் நடந்து கொள்வதும் நமது கடமையாகும்.

நாம் இந்த உலகில் இறைவனுக்கும் மனிதனுக்கும் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய வேண்டுமானால் நமக்கு இறைவன் அளித்திருக்கும் எல்லா ஆற்றல்களையும் வளர்க்க வேண்டியது அவசியம். நம்முடைய செயலுக்கு வழிகாட்டிச் செல்வது நமது உறுதி நிறைந்த உள்ளம்தான்.

நன்மை தீமையைப் பிரித்தறியும் தன்மையே நாம் நம்முடைய கடமையைத் திறம்படச் செய்யவழி கோலுகிறது. கடமைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதுதான் நாகரிக வாழ்வின் சிகரமாகும். கடமையை எவன் சரிவர நிறைவேற்றுகிறானோ அவன்தான் உலகத்தினரால் மதிக்கப்படுவான்.

ஓர் இரவு நெப்போலியன் எளிய உடையணிந்து படைகளைப் பார்வையிடச் சென்றார். ஓரிடத்தில் காவற்காரன் ஒருவன் நெப்போலியனைப் போகவிடாமல் தடுத்து நிறுத்தினான். அப்போது நெப்போலியன், "நான் ஓர் இராணுவ அதிகாரி. படைகளை மேற்பார்வை செய்வதற்காக வந்துள்ளேன். என்னைப் போகவிடு என்று கூறினார்.

அதற்குக் காவல்காரன். ''எனக்கு இடப்பட்ட உத்தரவு என்னவெனில், யாரையும் உள்ளே அனுமதிக்ககூடாது என்பது தான், மீறிச் செல்வாயானால் என்னுடைய குண்டுக்கு நீ இரையாக வேண்டியதுதான்'' என்று பதிலுரைத்தான். இதை கேட்டதும் நெப்போலியன் பெருமகிழச்சியுற்று அடுத்த நாளே அந்தக் காவற்காரனுக்கு உயர் பதவியளித்தார்.

''இங்கு நூல் நிலையம் இருக்கிறதா?'' என்று வெண்டல் வில்கி கேட்டதும். 'நிச்சயமாக இருக்கிறது' என்று கூறி அவரை நூல் நிலையத்திற்கு நேராக அழைத்துச் சென்றார் யாகுட்ஸ்க் குடியரசுத் தலைவர் முராடாவ். சென்றதும் 'விர்' என்று நூல் நிலையத்திறகுள் நுழைந்தார் அவர்.

ஆனால் அவரை அவ்விதம் செய்யாவண்ணம் ஒரு பெண்மணியின் பேச்சு தடுத்து நிறுத்தியது. ''நாங்கள் இங்கு மக்களுக்கு படிக்கும் வழக்கத்தை மட்டுமல்லாது ஒழுக்கங்களையும் கற்பித்து வருகிறோம். எனவே கீழே சென்று உங்களுடைய தொப்பிகளையும் கோட்டுகளையும் அவற்றிற்குரிய அறையில் கழற்றி வைத்துவிட்டு வாருங்கள்' என்று அவள் கூறினாள்.

இவ்விதம் ஒரு பிரபல விருந்தாளியின் முன் வைத்து அவள் கூறியது முராடாவுக்குச் சிறிது அதிர்ச்சியை ஏற்படுத்தியது. அவரும் அவளுடன் எவ்வளவோ வாக்குவாதம் செய்தார். இதைப்பகத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த வெண்டல் வில்கி வாய் விட்டுச் சிரித்துவிட்டார். முராடாவ் என்ன கூறியும் பயனில்லை.

எனினும் அவருக்காகச் சிறிது சலுகை காட்ட முன்வந்தாள் அந்தப் பெண்மணி. அது என்ன வெனில், வேண்டுமானால் அவர்கள் தங்களுடைய கோட்டுகளையும் தொப்பிகளையும் தம்முடைய அறையில் கழற்றி வைத்துவிட்டு உள்ளே செல்லலாம் என்பதுதான் அது.

கிரிமியாப் போரின்போது தளபதி பெல்லிஸியா ஒரு குதிரை வீரனின் முகத்தில் சாட்டையால் அடித்தபொழுது, அவன் தன் இடுப்பிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்துத் தளபதியை நோக்கிச் சுட்டான். நல்ல வேளையாக அதிலிருந்து குண்டு வெளிவரவில்லை, உடனே தளபதி பெல்லிஸியா, ''நீ அயுதங்களை ஒழுங்காக வைத்துக்கொள்ள வேண்டியது உன்னுடைய கடமை. அந்த கடமையை நீ சரிவரச் செய்யாததற்காக உனக்கு மூன்று நாள் சிறைத்தண்டனை விதிக்கிறேன்'' என்று கூறினார்.

எனவே, கடமையைச் செய்கிறவர்கள் எவ்விதம் அதற்குரிய பரிசைப் பெறுகிறார்களோ அதேபோன்று கடமையை செய்யத் தவறியவர்கள் அதற்குரிய தண்டனையை அனுபவத்துத்தான் தீரவேண்டும். இது உலக அமைப்பின் தவிர்க்க முடியாத சட்டமாகும்.

வாழக்கைப் போர்களத்தில் நாம் ஒவ்வொருவரும் ஒரு வீரனாக விளங்க வேண்டும். எப்படி ஒரு வீரன் எப்பொழுதும் தயாருடன் இருக்கவேண்டுமோ அதேபோன்று ஒவ்வொருவரும் இருக்கவேண்டியது இன்றியமையாததாகும். கிரிமியாப் போரின்போது ஆங்கில வீரர்கள் பின்வருமாறு பாடிக்கொண்டு சென்றார்கள்: 'எங்களுடைய கடமை 'ஏன்' என்று கேட்பதல்ல. செயலாற்றுவது,சாவது என்பது தான்.''

''இவ்வித மனோபவம் கொண்டதனால்தான் பாம்பே நகரைக் காவல் காத்துக் கொண்டிருந்த வீரன், வெஸுவியஸ் எரிமலை தீக்குழம்பைக் கக்கி அது வெள்ளம்போன்று தன்னை நோக்கி வரும்பொழுது ஆடாது அசையாது நின்றுக்கொண்டிருந்தான். முடிவு என்ன? அவன் தீக்குழம்பில் வெந்துமடிந்து விட்டான். இது நடந்தது 1800 ஆண்டுகளுக்கு முன். அனால் இன்றும் அவனை நாம் மரியாதையுடன் நினைவுபடுத்திக் கொள்கிறோம்.

கி.பி 1760-ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் பிரெஞ்சு மன்னனாகிய பதினைந்தாம் லூயி ஜெர்மனியின் மீது படையெடுத்தான். அப்பொழுது கவாலியர் டி அஸ்ஸாஸ் என்பவரை உளவறிந்து வருமாறு அனுப்பினான் பிரெஞ்சுத் தளபதி, அவர் எதிரிகளின் பாசறை நோக்கிச் சென்றதுதான் தாமதம், எதிரிகள் அவரை நாலா பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டனர். எதிரிகளுடைய ஈட்டிகள் அவருடைய நெஞ்சைக் குறிவைத்தன. 'சப்தம் செய்தால் உயிர் போய்விடும்' என்று கூறினான் எதிரித் தலைவன் அவரை நோக்கி.

கணத்தில் நிலைமையை உணர்ந்தார் கவாலியர் டி அஸ்ஸாஸ். எதிரிகள் பிரெஞ்சுக்காரர்களின் பாசறையைத் தடீரெனத் தாக்கவல்லவா சென்று கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது அவர் செய்யவேண்டிய கடமை என்ன? 'பிரெஞ்சுத் துருப்புக்களே! எதிரிகள் வருகிறார்கள். எச்சரிக்கை, எச்சரிக்கை' என்று உரத்துக் கத்தினார்.

அவருடைய அந்த மொழிகள் அவரின் விதியைத் தீர்மானித்தன. வெட்டி வீழ்த்தப்பட்டார் அவர். ஆனால் அவருடைய இறப்பு பிரெஞ்சுத் துருப்புகளைக் காப்பாற்றியது. சப்தத்தைக் கேட்டதும் அவர்கள் தயாராகி விட்டார்கள். இதைக்கண்டு ஜெர்மன் படைகள் தடீர்த்தாக்குதல் பலிக்காதென நினைத்துப் பின்வாங்கிவிட்டன.

அமெரிக்காவில் ஒரு சம்பவம் நிகழந்தது. ஈரி ஏரியில் சென்று கொண்டிருந்த கப்பல் திடீரெனத் தீப்பற்றிக் கொண்டது. அந்தக் கப்பலில் நூறு பிரயணிகள்இருந்தனர். கப்பல் தலைவர் ஜான் மைனர்ட் தம் முழு ஆற்றலையும் பயன்படுத்தி விரைவாகக் கப்பலைக் கரைவரை நோக்கிச் செலுத்தினார்.

எனினும் தீ கப்பல் முழுவதும் பரவி அவரையும் நெருங்கிவிட்டது. அவர் அணிந்திருந்த ஆடைகளையும் அது

தாவிப் பிடித்தது. அவருடைய உறுப்புகள் ஒவ்வொன்றாக எரிய ஆரம்பித்தன. எனினும் அவர் சுக்கானை விட்டாரில்லை. இறுதியாகக் கரை சேர்த்துவிட்டார் கப்பலை. அதிலிருந்த அத்தனை பிரயாணிகளின் உயிர்களும் காப்பாற்றப் பட்டன. ஆனால் கப்பல் தலைவர் ஜான் மைனார்டின் உயிர் காப்பாற்றப்பட்டதா? அதுதான் இல்லை. மற்றவர்கள் உயிரைக் காப்பாறுவதற்காக அவர் தம்முடைய உயிரையே பலி கொடுத்துவிட்டார். மற்றவர்களுக்காகத் தம்முடைய இறப்பை புன்முறுவலுடன் தழுவிக் கொண்டார்.

காந்தியடிகள் தம்முடைய கடமையைச் செய்யும் பொழுது உயிர் நீத்ததுதான் அவருடைய இறப்பைப் பல்லாயிரம் மடங்கு சிறப்பாகச் செய்துவிட்டது. கடமையைச் செய்வதற்காக அவர் தம்முடைய உயிரைப் பலி கொடுத்தார். எனவே தான், ''அவருக்கு அவ்வித மரணம் ஏற்பட வேண்டுமென்று நான் விரும்பினேன்'' என்று பெர்னார்ட்ஷா கூறினார்.

இவ்வாறு யார் தன்னையே மக்களுக்கு அர்ப்பணம் செய்து கொள்கிறானோ அவனே உலகின் அன்பிற்கும், மரியாதைக்கும் உரியவனாகிறான். உலகிற்காகப் பணத்தைக் கொடுப்பவன் விளம்பரப்படுத்தப்படுகிறான். ஆனால் உலகிற்காகத் தன்னையே அளித்துவிடுபவன் என்றென்றும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு முன் நியூ இங்கிலாந்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டதும் வானம் முழுவதும் இருள் சூழந்து விட்டது. உலக முடிவு நாள் நெருங்கிவிட்டோ என்று பலர் ஐயுற்றனர். அப்பொழுது கன்னக்டிகட் சட்டசபைக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. உலகம் முடிவதற்கான அறிகுறிகள் தோன்றுவதனால் கூட்டத்தை முடித்து விடலாமென்று ஓர் உறுப்பினர் கூறினார்.

அப்பொழுது மற்றோர் உறுப்பினர் எழுந்து, அன்று உலக முடிவு நாளாக இருந்தபோதினும் அவர்கள் தங்களுடைய இடத்தில் அமர்ந்து தங்களுடைய கடமையைச்செய்ய வேண்டும் என்று, உடனே மெழுகுவர்த்திகளைக் கொண்டு வந்து விளக்கேற்றி சட்டசபை நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்தியே தீரவேண்டும் என்றும் கூறினார். அவருடைய ஆலோசனை எல்லோராலும் ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இவ்வாறு என்னதான் ஏற்படினும் ஒவ்வொருவரும் தம் முழு முயற்சியையும் பயன்படுத்தி தம்முடைய கடமையைச் செய்யவேண்டும். அதைச் செய்வதில் தோல்வி ஏற்படினும் பரவாயில்லை. நாம் தற்காலிகமாகத் தோல்வியடைந்திடினும் நாம் விதைத்த நன்மை வித்தானது ஒரு காலத்தில் முளைத்துப் பெரு மரமாகி பலன் சொரியாமல் ஒருபோதும் வீணாகாது.

கடமை நம்முடன் பிறக்கிறது. நம்முடன் இறக்கிறது. அது நம் வாணாள் முழுவதையும் சுற்றி வளைத்துக் கொண்டி ருக்கிறது. அது நாம் ஆற்றவேண்டிய பொறுப்புகளை நமக்கு அறிவுறுத்தி, நல்ல செயல் செய்யுமாறு நம்மைத் தூண்டி, கெட்ட செயல் செய்வதைவிட்டும் நம்மைத் தடுத்துக் கொள்கிறது. யார் தன்னுடைய கடமையை உணர்ந்து செயலாற்றுகிறானோ அவன்தான் உண்மையான வாழ்வு வாழ்கிறவனாவான்.

நோயுற்றுக் கிடந்த ஒருவன் தன்னை நோக்கிப் பின்வருமாறு கேட்டுக்கொண்டான். ''நான் உயிர் வாழந்ததனால் ஏதாவதொரு நன்மை யாருக்காவது ஏற்பட்டிருக்கிறதா? எத்தனை பேர்களுடைய கவலையை, எத்தனை பேர்களுளைடய துன்பத்தை நான் போக்கி யுள்ளேன்? நான் உலகில் வாழந்ததன் காரணமாக உலகம் அபிவிருத்தியடைந்திருக்கிறதா?'' அவற்றிற்கெல்லாம்

அவன் இல்லை, 'இல்லை' என்றுதான் பதில் சொல்ல வேண்டியதாயிருந்தது.

அவனுக்குச் சில நாட்களில் நோய் குணமாகியதும் படுக்கையிலிருந்து அறிவாளியாகவும், மேலான மனிதனா கவும் எழுந்தான். அந்தக் கணத்திலிருந்தே அவன் தன்னை யும், தன்னுடைய பொருள்களையும் பிறருக்கு நன்மை செய்வதில் ஈடுபடுத்தலானான்.

எனவே, ஒருவனுக்கு எப்பொழுது கடமை உணர்ச்சி ஏற்படுகிறதோ அபபொழுதே அவனுடைய வாழக்கைப் பாதையும் மென்மையானதாக ஆகிவிடுகிறது. கடமையிலி ருந்து அணுவேனும் பிறழாது நின்று அவன் தன்னுடைய துன்பங்களை யெல்லாம் விரட்டிய்டிக்கிறான். நல்ல எண்ணங்களை மேற்கொள்ள முனைந்து நிற்கிறான். அதன் காரணமாக அவனும் நாளடைவில் நல்லவனாக ஆகிவிடு கிறான். அவனுடைய மேலான உரிமைகளெல்லாம் அவனைத் தாமாகவே வந்து சேர்கின்றன. அவனும் விதைப்பதை விரைவில் அறுவடை செய்துகொண்டு விடுகிறான்.

இந்தக் கட்டத்தில் வைத்து உரிமை என்றால் என்ன வென்பதை ஆராய்வோம். மனிதன் தன்னுடைய நல்ல தன்மையை வெளிப்படுத்துவ்தற்குரிய வாய்ப்பாகவும், வழியாகவும் இருப்பது எதுவோ அதுவே உரிமை எனப்படும். இந்த உரிமையில்லாமல் எந்த ஒரு மனிதனும் மேலான தன்மையுடன் கூடியவனாக இருக்கமுடியாது. மேலான தன்மையை அடையவும் முடியாது.

மனிதனுக்கு ஜீவாதாரமான உரிமைகள் இருக்கின்றன. விருப்பப்படி உண்ணுதல், நடமாடுதல் ஆகியவை இவற்றில் அடங்கும். இவையே அவனுடைய பிறப்புரிமைகள் எனப்படும். எனினும் அவற்றிற்கும் ஓர் எல்லையுண்டு. மனிதன் ஒரு சமுதாய்ப் பிராணியாதலின் அவனுக்கு இரண்டு

விதத் தகுதிகள் இருக்கின்றன. ஒன்று தனி மனிதன், இரண்டாவது சமுதாய மனிதன். சமுதாய மனிதனுக்குச் சில உரிமைகள் இருக்கின்றன. அவையே சமுதாய உரிமைகளாகும்.

எனவே, ஒருவனுடைய பிறப்புரிமையானது மற்றவர்களுக்கு, அதாவது சமுதாய உரிமைகளுக்குப் பாதகம் உண்டு பண்ணுவதாயிருக்கக்கூடாது. அதாவது, தனி மனிதன் சமுதாய நலனை எண்ணித் தன்னுடைய உரிமைகளில் சிலவற்றை விட்டுக் கொடுக்கவேண்டும். ஏன்? சமுதாயம் ஒழுங்காக இயங்குவதற்காக.

உரிமையானது புனிதமானது என்று கூறப்பட்டால் அது கடமையின்றி ஒளிவிடமுடியாது. உரிமையை அனுபவிக்க வேண்டுமாயின் கடமையைச் செய்தேயாகவேண்டும். கடமையின்றேல் உரிமையுமில்லை, உரிமையின்றேல் கடமையுமில்லை. உரிமைக்கு எல்லையுண்டு. கடமைக்கு எல்லை இல்லை. உரிமையின் முடிவு கடமையின் துவக்கம். உரிமை அறிவைத்துணையாகக் கொண்டது. கடமை அன்பைத் துணையாகக் கொண்டது. உரிமை ஆணென்றால், கடமை பெண். இரண்டும் சேர்ந்து வாழ்கிற வாழக்கை தான் மேலான வாழ்க்கை.

ஏனவேதான் ஓர் அறிஞரும், ''கடமையைச் செய்யாது உரிமையை கோருவது கலகம்;உரிமையின்றி கடமையைச் செய்வது அடிமைத்தனம்'' என்று கூறுகிறார்.

ஆனால் நம்மில் பெரும்பாலோர் என்ன செய்கிறார்கள்? கடமையைச் செய்யாது உரிமையை மட்டும் கோருகிறார்கள்.

எனவே, நாமும் உன்னதமான உயரிய வாழ்க்கை வாழவேண்டுமாயின், நம்முடைய வாழ்வால் உலகம் உயர்வடைய வேண்டுமாயின், நம்முடைய கடமையைச் செய்ய வேண்டும். இங்கிலாந்துக்கு மகத்தான நெருக்கடி

ஏற்பட்ட காலத்தில், ''இங்கிலாந்து ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கடமையைச் செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கிறது'' என்று நெல்ஸன் கூறினார்.

அவ்விதமே நம் நாடும், சமுதாயமும் நீங்கள் உங்களுடைய கடமையைச் செய்யவேண்டுமென்று எதிர்பார்க்கிறது. செய்வீர்களா? உங்கள் நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள்! நீங்கள் உங்களுடைய கடமையை ஒழுங்காகச் செய்யின் உங்களுடைய உரிமை உங்களைத் தானாகவே வந்தடைந்து உங்களுக்கு வெற்றிமாலை சூட்டுவிக்கும். நீங்களே மனிதர் மனிதர், நீங்களே மனிதப் புனிதர்.

